# கல்கி

**போங்கல் ஸ்பெஷல்**
**இரண்டு புத்தகங்கள்!**

- அறுசுவைக் கதைகள்!
- ஐட்டம், எங்கள் சாய்ஸ்! - விஐபிக்களின் விருப்பம்
- அரண்மனையில் ஓர் ஆய்வுக்கூடம்!

KALKI
16.1.2000
ரூ. 5.00

## உணவு ஸ்பெஷல்!

# இப்போது, உங்கள் இல்லத்திலேயே தயாரியுங்கள்

# சுவைமிக்க சைனீஸ் சாப்பாடு வகைகளை




# சைனீஸ் மிக்ஸஸ் உபயோகித்து.

1916TAM B

அபாரமான 5 சுவைகளில் கிடைக்கிறது

**மன்சூரியன் மிக்ஸ், சில்லி மிக்ஸ், ஸ்வீட் & ஸவர் மிக்ஸ், ஃப்ரைட் ரைஸ் மிக்ஸ் மற்றும் சௌமின் மிக்ஸ். நார் சைனீஸ் மிக்ஸ்களில் எல்லா பொருட்களும் உகந்த அளவில் சேர்க்கப்பட்டுள்ளதால், உன்னதமான கிரேவி கிடைக்கிறது.**




(மேலே காணுங்கள்)

**ரூ.3/- தள்ளுபடி**

வாடிக்கையாளர் பெயர் முகவரி போன் எண்:

*இந்த சலுகை கூப்பனுடன் மட்டுமே. • கூப்பன் 29 பிப்ரவரி 2000 வரையே செல்லுபடியாகும்.

இச்சலுகை மும்பை, கல்கத்தா, டெல்லி, சென்னை, ஹைதராபாத் மற்றும் பெங்களூர் நகரங்களில் மட்டுமே நடைபெறவிருக்கும்.



"இப்போதுதான் என்று இல்லை. எந்தக் காலத்திலுமே, சமையல் புத்தகங்களுக்கு, சிரஞ்சீவித் துவமான மார்க்கெட் இருந்து கொண்டுதான் இருக்கிறது'' என்கிறார் கலைஞன் பதிப்பக நிர்வாகியான நந்தா.

"தமிழில் மட்டும்தான் இந்த நிலை என்று கிடையாது. சில வருடங்களுக்கு முன், யுனெஸ்கோ நிறுவனம் மக்களின் படிக்கிற பழக்கம் பற்றி உலகளாவிய சர்வே ஒன்று நடத்தியது. அதன் முடிவு தெரிவித்த உண்மை என்ன தெரியுமா? நெம்பர் ஒன் சமையல், அடுத்தது ஜோதிடம் உள்ளடக்கிய சடங்குகள், சம்பிரதாயங்கள் பற்றியவை'' என்று சுட்டிக் காட்டுகிறார் எழுத்தாளர் சா. கந்தசாமி.

சென்ற நூற்றாண்டில் வெளியான பத்திரிகைகள் பற்றிய புத்தகத்தில், பெண்களுக்கான பிரத்யேக பத்திரிகைகளில் சமையல் பற்றிய விஷயங்கள் அப்போதே பிரதானமாய் இடம் பெற்றிருந்தன என்றாலும்கூட சமையல் குறிப்புகளை புத்தகமாக வெளியிடுவது என்பது சுமார் எழுபது வருடங்களுக்கு முன்தான் நடந்திருக்கிறது. அவை பற்றிய விவரங்களும், மாதிரிக்கு ஒன்றிரண்டு பிரதிகளும் கிடைத்தாலும், ஐம்பதுகளில் 'சமைத்துப் பார்' புத்தகம் வெளியிட்ட மீனாட்சி அம்மாளையே இன்று சமையல் புத்தகங்களின் முன்னோடி என்று தமிழ் பதிப்பக உலகினர் குறிப்பிடுகிறார்கள்.



• மீனாட்சி அம்மாள்



• மல்லிகா பத்ரிநாத்

# மீனாட்சி அம்மாள் முதல் மல்லிகா பத்ரிநாத் வரை!

இப்போதும் மீனாட்சி அம்மாளின் புத்தகங்கள் ஜரூராக விற்பனையாகிக்

கொண்டிருப்பது ஒரு மகத்தான சாதனை. அவருடைய மூன்றாம் தலைமுறை இப்போது பதிப்பகப் பணிகளைக் கவனித்துக் கொள்கிறது.

''மீனாட்சி அம்மாளுக்கு, சிறு வயது முதலே சமையலில் மிகவும் ஆர்வம் உண்டு. ஒரு கட்டத்தில் தான் தெரிந்து கொண்ட சமையல் குறிப்புகளையெல்லாம் ஒழுங்கு படுத்தி நோட்டுப் புத்தகத்தில் எழுதி வைத்துக் கொள்ள ஆரம்பித்தார். மீனாட்சி அம்மாளின் சமையல் திறமை மற்றும் ஆர்வம் பற்றித் தெரிந்தவர்கள் எல்லாம், அவரைப் பார்க்கிறபோது, எனக்குச் சமையல் குறிப்பு ஏதாவது எழுதிக் கொடு என்று நச்சரிக்க ஆரம்பித்தனர். எழுதிக் கொடுத்து அலுத்துப் போன மீனாட்சி அம்மாளுக்கு, இவற்றை ஒரு புத்தகமாகப் போட்டு, விற்றால் பலருக்கும் சௌகரியமாக இருக்குமே என்ற எண்ணம் ஏற்பட்டது.

"மீனாட்சி அம்மாளின் சமையல் குறிப்பு அடங்கிய முதல் புத்தகம் 'சமைத்துப் பார்' என்ற தலைப்பில் 1951ம் ஆண்டு வெளிவந்தது. அப்போது அதிகமாக புத்தகக் கடைகள் கிடையாது. எனவே விற்பனை மந்தமாக இருந்தது. முதல் பாகத்தின் விலை மூன்றரை ரூபாய். சமைத்துப் பார் இரண்டாம் பாகம் அடுத்த ஆண்டிலேயே வெளியானது என்பது குறிப்பிடத்தக்கது. மீனாட்சி அம்மாளின் மறைவுக்குப் பின் மூன்றாம் பாகம் வெளிவந்தது.

"இப்போது சமைத்துப் பார் மூன்று பாகங்களுமே ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு, தமிழும், ஆங்கிலமும் அமோகமாய் விற்றுக் கொண்டிருக்கின்றன. இதுவரை சுமார் இரண்டு லட்சம் பிரதிகளுக்கு மேல் விற்பனையாகிவிட்டன" என்கிறார் மீனாட்சியம்மாளின் பேரன் ராம்குமார்.

அதன்பின் பரவலாக, அனைத்துப் பதிப்பகங்களும், சமையல் புத்தகங்களை வெளியிட ஆரம்பித்தன. இன்று சற்றேறக்குறைய முன்னூறு விதமான தலைப்புகளில் சமையல் புத்தகங்கள் விற்பனையாகிக் கொண்டிருக்கின்றன. மலையாளச் சமையல், செட்டி நாட்டுச் சமையல், ஐயங்கார் சமையல் என்று பல்வேறு தொகுதிகளாக விற்பனையாகிக் கொண்டிருக்கின்றன.



## சென்னை அழகியின் டயட் அட்வைஸ்!

**உடம்பை அழகாக வைத்துக் கொள்வதற்கு ஏதேனும் ஸ்பெஷல் டயட் இருக்கிறதா என்றால், ''இல்லை!'' என்கிறார் இந்த ஆண்டின் மிஸ் சென்னையான த்ரிஷா. ஆனாலும் இவர் இரண்டு வேளை மட்டும்தான் சாப்பிடுகிறார். மதியம் டிபன்.**

இத்தனைப் புத்தகங்கள் விற்பனையாகிக் கொண்டிருந்தாலும்கூட இவை அனைத்துமே பெண்கள் எழுதியவைதான். அறுசுவை அரசு நடராஜன், ஞானம்பிகா ஜெயராம ஐயர் போன்ற பிரபல சமையல் நிபுணர்கள் தங்கள் அனுபவங்களைப் பத்திரிகைகளில் தொடர்களாக எழுதுகிறபோது, சுவாரசியம் கருதி சமையல் ஐட்டங்கள் சிலவற்றின் செய்முறைகளைக் கொடுத்திருக்கிறார்களே தவிர, ஆண்கள் எழுதிய சமையல் புத்தகங்கள் தமிழில் வந்தது இல்லை என்றே சொல்லி விடலாம். 'தனக்கு நன்றாக சமைக்கத் தெரிந்த ஒருவர், சமையல் புத்தகம் எழுதிக் கொடுத்தபோது, அவரது மனைவி பெயரில்தான் புத்தகத்தைப் பிரசுரம் செய்தார்கள்' என்று ஒரு தகவலைச் சொன்னார் ஒரு மூத்த பதிப்பாளர்.

"எங்கள் குடும்பத்துக்கு ரொம்ப பரிச்சயமானவர் சரஸ்வதி என்கிற மாமி. அவர் என் அம்மாவுக்கு நிறைய சமையல் குறிப்புகளைச் சொல்லுவார். ஒரு கட்டத்தில் அவர் வசமிருந்த குறிப்புகளைத் தொகுத்து வெளியிடப்பட்டதுதான் சரஸ்வதி மாமியின் சமையல் பாகம். இன்றுவரை விற்பனை முன்னணியில் இருக்கிறது அந்தப் புத்தகத்தின் இரண்டு தொகுதிகளும்" என்கிறார் கலைஞன் பதிப்பகத்தின் நந்தா.

கண்ணதாசன் பதிப்பகத்தில், இந்த வட்டத்தைத் தாண்டிப் போய், சீனத்துச் சமையல் என்ற தலைப்பில் சைவத்துக்கு ஒன்றும், அசைவத்துக்கு ஒன்றுமாக இரண்டு புத்தகங்கள் போட்டிருக்கிறார்கள். அதே போல, இலங்கைப் பெண்மணி ஒருவரைக்

**இரவு சாப்பாடு. இடையில் காப்பி, டீ, பால் போன்ற பானங்களெல்லாம் கிடையவே கிடையாது. அவ்வப்போது அளவோடு குளிர்பானங்கள் உண்டு. ஐஸ்கிரீம் சாப்பிடவும் ஏக விருப்பம். ''ஆனால், ஐஸ்கிரீம் சாப்பிடுகிற தினங்களில் மதியம் டிபனை கட் செய்து விடுவேன். காரணம், ஐஸ்கிரீமில் கலோரிகள் அதிகம். பிடிச்ச எதையும் சாப்பிடலாம். அப்படிச் சாப்பிடுகிற போது, நாம் செய்யும் வேலைகளால் எத்தனை கலோரிகள் செலவாகின்றனவோ, அத்தனை கலோரிகளைத் தருகிற அளவுக்கு மட்டுமே சாப்பிட வேண்டும். இதுதான் எனது டயட் அட்வைஸ்!'' என்கிறார் த்ரிஷா.**

அட்டை வண்ணப்படமும் உள்படமும் :
**பிரவீண்குமார்**

கொண்டே எழுதப்பட்ட இலங்கைச் சமையல் என்ற புத்தகமும் வந்திருக்கிறது. இன்று இவை மூன்றுக்குமே நல்ல வரவேற்பு.

இன்று விற்பனையில் சக்கைப் போடு போட்டுக் கொண்டிருக்கும் சமையல் புத்தக எழுத்தாளர் மல்லிகாபத்ரிநாத். கூட்டுக் குடும்பத்தில் பிறந்து, வளர்ந்த இவர், ஆர்வம் காரணமாக குறித்து வைத்த சமையல் குறிப்புகள்தான் இன்று அவரது புத்தகங்களுக்கு அஸ்திவாரம்!

"என் வசமிருந்த சமையல் குறிப்புகளை புத்தகமாய்ப் போடுவதற்காக, பல பதிப்பகங்களையும் அணுகியபோது, ஐநூறு ரூபாய் தருவோம். ஆயிரம் ரூபாய் தருவோம் என்று அடி மாட்டு விலை பேசினார்கள். எனவே சொந்தமாய் புத்தகம் வெளியிட முடிவு செய்தேன். எங்கள் லேடீஸ் கிளப்பில், ஒரு நிகழ்ச்சியில் என் முதல் புத்தகம் வெளியானது. நண்பர்கள், மகளிர் சங்கங்கள் மூலம் மூன்றே மாதத்தில் ஆயிரம் பிரதிகள் விற்று விட்டதில் எனக்கு உற்சாகம். இன்று ஆங்கிலம், தமிழ், தெலுங்கு, கன்னடம் என்று பல மொழிகளிலும் சமையல் புத்தகங்கள் வெளியிட்டு விட்டேன். ஆண்டுக்கு ஒரு லட்சம் பிரதிகள் விற்பனையாகின்றன" சந்தோஷமாகச் சொல்கிறார் மல்லிகா பத்ரிநாத்.

இப்போது, சர்க்கரை நோய்க்காரர்களுக்காகப் பிரத்யேக உணவு பற்றிய புத்தகம் வெளி வரப் போகிறது. தவிர, பதிப்பகத்துடன் நின்றுவிடாமல் சாம்பார், ரசப் பொடிகள், மசாலாக்கள் தயாரிப்பிலும் இறங்கியிருக்கிறார் மல்லிகா பத்ரிநாத்.

"சமையல் புத்தகங்களின் அமோக விற்பனைக்கு என்ன காரணம்?"

"முன்பு கூட்டுக் குடும்பமாக வாழ்ந்தார்கள். பெண்களின் படிப்பு குறைச்சல், வீட்டில் பெரியவர்கள் பெண்களுக்குச் சமையல் சொல்லிக் கொடுத்தார்கள். இன்று நிலைமை தலைகீழல்லவா? தனிக்குடித்தனம். பெண்களுக்கு படிப்பு. அதன்பின் திருமணம். படிக்கிற காலத்தில் பெண்கள் சமையலறையில் நுழைய விரும்புவதில்லை; அம்மாக்களும் அதை சீரியஸாக எடுத்துக் கொள்வதில்லை. இதனால், திருமணமாகிற போது, சமையல் அறை அனுபவம் இல்லாதவர்கள் அதிகரித்து விட்டனர். அவர்களுக்குக் கை கொடுப்பது சமையல் புத்தகங்கள்" என்கிறார் மல்லிகா பத்ரிநாத்.

"அது மட்டுமில்லை. படித்த பெண்கள் திருமணத்துக்குப் பின் மாமியாரிடம் போய், தனக்கு சமையல் பற்றித் தெரியவில்லை. சொல்லிக் கொடுங்கள் என்று கேட்க, அவர்களது ஈகோ தடுக்கிறது. அவர்கள் நாடுவது சமையல் புத்தகங்களைத்தான்! தவிர இன்று மக்களுக்கு, பலவிதமான உணவுகளைச் சாப்பிட வாய்ப்புக் கிடைக்கிறது. வாய்க்கு ருசியாக சாப்பிட அடிக்கடி ஓட்டலுக்குப் போவது பொருளாதார ரீதியில் சாத்தியமில்லை என்கிறபோது, அந்த ருசியான ஐட்டங்களைத் தாங்களே வீட்டில் செய்து பார்க்க விரும்புகிறார்கள். இதுவும் சமையல் புத்தகங்களில் விற் பனைக்கு ஒரு காரணம்!" என்கிறார் காந்தி-கண்ணதாசன்.

"பல சமையல் புத்தகங்களிலிருந்து, தான் எதை வாங்குவது என்று எந்த அடிப்படையில் தேர்வு செய்கிறார்?" இந்தக் கேள்வியைச் சமையல் புத்தகம் வாங்கிக் கொண்டிருந்த நடுத்தர வயதுப் பெண்மணியான சுமதியிடம் கேட்டபோது:

''நாலைந்து விஷயங்கள் இதில் இருக்கின்றன. எழுதியவரின் பெயர் பிரபலத்தின் அடிப்படையில் வாங்குவேன். மற்றவர்களின் சிபாரிசின் பேரில் வாங்குவேன். கேக் வெரைட்டி, ஊறுகாய் என்று தலைப்பின் அடிப்படையில் தேவைக்கு ஏற்பத் தேர்ந்தெடுப்பேன். சில சமயங்களில் புத்தகத்தைப் புரட்டி, பொருளடக்கத்தைப் படிப்பேன். தெரிந்த ஐட்டங்கள் இல்லாமல் புதியவை நிறைய இருந்தால் வாங்குவேன்"

**— பாரதி மௌலி**
படம்: **ஸ்ரீஹரி**

அரண்மனை மாதிரி வீடு என்பார்கள். அரண்மனை மாதிரி ஆபீஸ் எங்காவது பார்த்திருக்கிறீர்களா?

மைசூரில், மத்திய உணவுப் பொருள் ஆராய்ச்சிக் கழகம் (CFTRI) இயங்குவது நிஜமான அரண்மனையில்தான். பிரும்மாண்டமான தூண்களும், உயரமான கூரையும், விசாலமான அறைகளுமாக ஆபீஸ் முழுவதும் அரண்மனையின் கம்பீரம். அதன் பாரம்பரிய அழகு கெடாமல், அப்படியே ஆபீசாக வைத்துக் கொண்டிருக்கிறார்களே, அதற்கு முதலில் ஒரு சபாஷ். ஐம்பது வருடங்களுக்கு முன், அரண்மனையைத் தூக்கி அப்படியே கொடுத்த மகாராஜா ஜெயசாமராஜ உடையாரைப் பார்த்து 'நல்ல காரியம் பண்ணினீர்கள்!' என்று நேரில் சொல்ல முடியாததால், இடதுபுறப் படிகள் ஏறியதும், முகப்பில்



* அரண்மனையில் ஆபீஸ்

மாட்டியிருக்கிற ராணி செலுவஜம்மன்னி அம்மாவின் புகைப்படத்திடம் நன்றி சொல்லி விட்டு நகர வேண்டியதுதான். (கூடவே ஓர் ஆள் வரவில்லை என்றால் அரண்மனையில் வழி தவறிப் போய் திரு திருவென்று முழிக்க வாய்ப்புகள் அதிகம்!) ரொம்பவும் முழித்துக் கொண்டு நின்றால் எப்படி? இங்கே என்ன தான் நடக்கிறது என்று பார்க்க வேண்டாமா...?

● உணவு உற்பத்தியிலும் அதைப் பத்திரமாகப் பாதுகாத்துப் பராமரிப்பதிலும் மட்டுமல்லாமல், அதன் பலனை அதிகபட்ச மக்கள் அடையும் வகையில் இங்கே ஆராய்ச்சிகள் நடக்கின்றன.

● உற்பத்தி செய்து கிடைத்ததை, ஓர் உணவுப் பொருளில் இருந்து வேறு என்னென்ன உணவுப் பொருள் கூடுதலாகத் தயாரிக்கலாம் என்று அறிவியல் ரீதியாக மூளையைக் கசக்கிக் கொண்டு ஆராய்ச்சி செய்கிறார்கள்.

● அரிசியும், பருப்பு - தானியங்களும், காய் கனி வகைகளும் உற்பத்தி செய்து விட்டால் மட்டும் போதுமா? அவற்றை நம் வாய்க்குப் போகிறவரை பல வடிவங்களில், பல ருசிகளில் உருவாக்க வேண்டுமே? அதற்கான ஆராய்ச்சிகளிலும் தலையைக் குடைந்து கொள்கிறார்கள், இங்கே உள்ள ஆராய்ச்சியாளர்கள்.

சரி, மூளையைக் கசக்கிக்கொண்டு, தலையைக் குடைந்து கொண்டு தயாரித்து விட்டால் போதுமா? எல்லாம் நம் வயிற்றில் போய் கடமுடா என்று ரகளை பண்ணாமல் இருக்க வேண்டுமே?

அதற்கான பரிசோதனைகளுக்குத் தேவையான லேபரடரிகள் எல்லாம் பெரிய அளவில் அமைத்திருக்கிறார்கள்.

நூற்றுக்கணக்கான விவசாய - உணவு ஆராய்ச்சி விஞ்ஞானிகள் - முண்டாசு கட்டிக் கொள்ளாமல் - 'களத்'தில் இறங்கி வேலை பார்க்கிறார்கள்.

"நீங்கள் இங்கே வந்தவுடன், ஏதோ நிறையச் சாப்பாட்டு ஐட்டங்களை டேபிள் டேபிளாகப் பரப்பிக்கொண்டு மைக்ராஸ்கோப் வைத்தபடி, பிப்பெட்டும் குடுவையுமாக, அறை வெளிச்சத்தில் ஆராய்ச்சி பண்ணிக் கொண்டிருப்பார்கள் என்றுதானே நினைத்தீர்கள்?'' என்று கேட்டார் பொதுமக்கள் தொடர்பு அதிகாரி டாக்டர் பி. அநுராதா, நமட்டுச் சிரிப்புடன்.

"ஹி...ஹி..." என்றோம்.

# அரண்மனையில் நடக்கும் ஆராய்ச்சிக் கழகம்!



• பரிசோதனைக் கூடம்

''நாடெங்கும் இருந்து இங்கே நிறைய விவசாயக் கல்லூரி மாணவர்களும், சிறு தொழில் தொடங்க நினைக்கும் தொழிலதிபர்களும் வருகிறார்கள். நாங்கள் டெவலப் செய்யும் உணவுப் பொருள் வகைககளை, கமர்ஷியலாகத் தயாரித்து விற்க இவர்கள்தான் காரணம். பலவகை மசாலா பொடிகள், பழ ஜூஸ்கள் எல்லாம் தயாரிக்கும் வழிமுறைகளை இவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கிறோம். விளைச்சலை அதிகமாக்க வழிகள் சொல்லிக் கொடுப்போம். உரங்கள் பயன்படுத்துவது, சேமித்த தானியங்களைப் பாதுகாப்பது எப்படி என்கிற வழிவகைகள் எல்லாம் எடுத்துச் சொல்லுகிறோம். முக்கியமாக எங்கள் பணி போஸ்ட் - ஹார்வெஸ்ட் எனப்படும், விளைச்சலுக்குப் பின்னர்தான் தொடங்குகிறது.

"ஏழை மக்களால் புரதச் சத்து நிறைந்த பால், மாமிசம், முட்டை, பருப்பு வகைகளை வாங்கிச் சாப்பிட முடியாது அல்லவா? எனவே, குறைந்த செலவில் புரோட்டின் சத்து நிறைந்த உணவு எது என்று ஆராய்கிறோம். எண்ணெய் வித்துக்களிலிருந்து எண்ணெய் எடுத்த பிறகு கிடைக்கும் ஆயில் ஸீட் கேக்கில் 40% புரதம் இருக்கிறது. இது பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் அவசியம். மல்ட்டி பர்ப்பஸ் ஃபுட், எனர்ஜி ஃபுட் என்று நிறைய ஃபார்முலாக்கள் கண்டுபிடித்திருக்கிறோம்.''

"ஐயோ, வெறும் புண்ணாக்கா?"

''அதோடு தானியங்கள், பருப்பு வகைகள் சிலவற்றை வெல்லம் சேர்த்துத் தயாரிக்க வேண்டும். வழக்கமான ஆகாரத்தோடு கூடுதலாக இதைச் சாப்பிட வேண்டும். இதுவே முழு உணவு அல்ல.''

"நல்லது!"

''எல்லாக் குழந்தைகளும் ஃபாரெக்ஸ¨ம், செரலாக்கும் வாங்கிக் குடிக்க முடியுமா? நாலைந்து மாதக் குழந்தைகளுக்காக, புதிய கஞ்சி உருவாக்கி இருக்கிறோம். டிரெடிஷனையும், டெக்னிக்கையும் கலந்து நவீன உணவு தயாரிப்பது எங்கள் பணி. ராகியையும் பச்சைப் பயறையும் 2:1 விகிதத்தில் அரைத்துத் தயாரிக்கும் உணவில், செரிமானத்துக்கான என்ஸைம் இருக்கிறது. சில குழந்தைகளுக்கு, பால் குடித்தால் வயிற்றுப் போக்கு வரும். அலர்ஜி. காரணம், அதில் உள்ள லாக்டோஸ். அதை நீக்கிவிட்டு லாக்டோஸ் - ஃப்ரீ மில்க் தயாரித்திருக்கிறோம். எல்லா பெரிய நகரங்களில் மட்டும் ரைஸ் மில்கள் இருந்தால் போதுமா? சிறு சிறு மில்கள், விளைச்சல் பகுதிக்கு அருகேயே இருந்தால் போக்குவரத்து எளிது; செலவும் குறைவு. அதற்காகச் சிறு 200 - 300 கேஜி. அளவில் மில்லிங் யூனிட், கிராமப்புறங்களிலேயே வைக்கிற மாதிரி உருவாக்கி இருக்கிறோம்.''

**C**FTRIன் டைரக்டரிடம் அழைத்துப் போனார் டாக்டர் அநுராதா.

புரோமஜன் சயின்டிஸ்ட்டான டாக்டர்



• பேக்கரி யூனிட்டில் பயிற்சி மாணவிகள்



• வி. பிரகாஷ்

வி. பிரகாஷின் விசாலமான வரவேற்பறையில் அவரைச் சந்தித்தபோது, உள்ளே எத்தனை வேலைகளை விட்டு விட்டு இவர் நம்மிடப் பேச உட்காருகிறார் என்பது தெரியவில்லை; மறுநாள் அவரது பிரும்மாண்டமான அலுவலக அறையில், குவியல் குவியலாக இருந்த காகித / கடிதங்கள் நிறைந்த மேசைகளைப் பார்த்தபோதுதான் தெரிந்தது. ("நான் எல்லா மேசைகளிலும் வேலை பார்ப்பேன்!")

"நியூட்ரிஷன் பெரிய சப்ஜெக்ட். பெரியவர்களுக்கு ஒரு மாதிரி; குழந்தைகளுக்கு ஒரு மாதிரி. மல்ட்டி பர்ப்பஸ் ஃபுட் ஸ்பைசியாகவும் இருக்க வேண்டும்; சுவையாகவும் இருக்க வேண்டும். குழந்தைகளுக்கான கோதுமை மாவில் விட்டமினும் இருக்கும். மினரல் சத்தும் இருக்கும். இருபது வருடங்களுக்கு முன்னாலேயே இதை நாங்கள் கண்டுபிடித்து அறிமுகப்படுத்தினோம்.

"ட்ரெயினிங் இங்கே ஒரு முக்கியப் பகுதி. நாற்பது வகை குறுகிய கால கோர்ஸ் நடத்துகிறோம். குடும்பத் தலைவிகளுக்கும் தனியே இருக்கிறது. எத்தனையோ பேர் தொழிலதிபர்கள் ஆவதற்கு, இங்கே தொழில் நுட்பம் கற்றுத் தருகிறோம்.

"எம்.எஸ். சுவாமிநாதன் ஆராய்ச்சிக் கழகத்துடன் இணைந்து, கிராமப்புறப் பெண்மணிகளுக்காகப் பயிற்சிகள், மதுரைக்கு அருகே உள்ள கிராமத்தில் ஆரம்பித்திருக்கிறோம். இரண்டு 'பாட்ச'கள் முடிந்து விட்டன. உணவுப் பண்டங்கள் தயாரிக்க உதவும் மெஷின்கள் தயாரிக்கச் சொல்லிக் கொடுக்கிறோம். வாழைப் பட்டையிலிருந்து தொன்னை, தட்டுக்கள், கப்புகள் (என்ன அழகு!) தயாரிக்க; எண்ணெய் வித்துக்களிலிருந்து குறைந்த செலவில் எண்ணெய் பிழிய; அரிசியிலிருந்து கல்லை எடுக்க (அட!) என்று எங்கள் கண்டுபிடிப்புக்கள் பதினைந்து வருடங்களாகப் புழக்கத்தில் இருக்கின்றன.

"வடை வடநாட்டில் பரவியது எப்படி? ஆவக்காய் ஊறுகாய் ஆந்திராவிலிருந்து பிற மாநிலங்களுக்குப் பரவியது எப்படி? பாரம்பரிய உணவு வகைகளைத் தொழில் நுட்ப உதவியுடன் பரவ வைப்பது எங்கள் பணி. நெல்லிலிருந்து அரிசியைப் பிரித்த பின் கிடைக்கிற உமியிலிருந்து ரைஸ் - பிரான் ஆயில், சோளத்திலிருந்து கார்ன் ஆயில் எல்லாம் தயாரிக்கலாம். அதற்கான ஆராய்ச்சிகள் நடக்கின்றன.



• நாசிம்மாரால்

மைக்ரோ பயாலஜி பிரிவில், இட்லி மாவு புளித்து நுரைத்துப் பொங்க எது காரணம் என்பன போன்றவற்றை ஆராய்கிறோம். நாட்டில் எந்தப் பகுதியில் நல்ல இட்லி தயாரிக்க முடியும்? தென்னாட்டில் எந்த மாநிலத்தில் கிடைக்கிற உளுந்தின் தரம், அதற்கு ஏற்றபடி உயர்வானதாக இருக்கிறது என்று ஆராய்கிறோம்.

"இந்த நாட்டில் 6,50,000 உணவு வகைகள் தயாராகின்றன. உணவு உற்பத்தியில் நாம்தான் உலகிலேயே இரண்டாம் இடம் வகிக்கிறோம். இதை எப்படி பிராசஸ் செய்வது, எப்படி குறைந்த செலவில், தரம் கெடாமல் பாக் செய்வது, எத்தனை லட்சம் வயிறுகளுக்குப் படைப்பது என்பதுதான் எங்கள் ஆராய்ச்சி. ஒரு பிரதேசத்தில் கிடைக்கிற கச்சாப் பொருளை அங்கேயே பிராசஸ் செய்வதுதான் புத்திசாலித்தனம். கிராமிய - கிராமப்புற ரீதியிலான ஆராய்ச்சிகள் பலனளித்தால்தான், அந்தந்தப் பகுதியின் பொருளாதாரம் சீராகும். அதுதான் காந்திய வழிகூட. ஒரு பொருளிலிருந்து பை - பிராடக்ட்ஸ் பல உருவாக்க, வழிவகை செய்ய வேண்டும். இதுவும் முக்கியம்."



• பிள்ளை

டெக்னாலஜி டிரான்ஸ்ஃபர் அண்ட் பிசினஸ் டெவலப்மென்ட் துறையில் எஸ்.பி. பிள்ளையைச் சந்தித்தோம்.

"புதிய தொழில் நுட்பத்தைக் கண்டுபிடித்து, தொழில் துறைக்குக் கொடுப்பது - அது காய்கனி வகைகள், தானியங்கள், எண்ணெய் வித்துக்கள், மீன் - மாமிச உணவு வகைகள் எதுவாய் இருந்தாலும் சரி. ஃப்ரூட் - வெஜிடபிள் டெக்னாலஜியில் 40 வகை, பிராசஸ் டெக்னாலஜியில் 8 வகை, பேக்கரி தயாரிப்பில் 30 வகை கண்டுபிடித்திருக்கிறோம். இவற்றை, ஒரு தொகை பெற்றுக்கொண்டு, தயாரிக்க லைசன்ஸ் வழங்குகிறோம். பல ஊர்களில் செமினார்கள், ஒர்க் ஷாப்புகள் நடத்தி எங்கள் ஆராய்ச்சியின் பலனை எடுத்துச் சொல்லுகிறோம். இது தவிர, எங்களுக்கு வருகிற கடிதங்களின் அடிப்படையில், ஒரு போஸ்ட்கார்டாக இருந்தாலும்கூட, தொழில் நுட்பத் தகவல்கள், பொருளாதார விவரங்கள் எல்லாவற்றையும் தெரிவிக்கிறோம். ஒரு மாதத்துக்கு, சராசரியாக எங்களுக்கு 12,000 கடிதங்கள்

வருகின்றன. இதில் 90% சிறு தொழில் தொடங்குவோரிடமிருந்து தான் வருகிறது!

"பல வெளிநாட்டவர் இங்கே பயிற்சிக்கு வருகிறார்கள். போன வாரம், மொரிஷியஸிலிருந்து ஓர் அமைச்சரே வந்திருந்து எல்லாம் கற்றுக்கொண்டார். அதற்கு முன்னால் ஜமைக்காவிலிருந்து ஒரு மந்திரி... தொழிற்சாலை லே அவுட் முதற்கொண்டு போட்டுக் கொடுத்தாக வேண்டும். தனியாரின் தேவைக்கு ஏற்ப ஆராய்ச்சிகள் நடத்திக் கொடுப்பதும் உண்டு. அதன் ரகசியத்தையும் காப்போம்!"



• ஹரிதாஸ் ராவ்

அரண்மனையை விட்டுத் தனியே இன்னொரு அரண்மனை (சின்ன அரண்மனை இல்லே!) கட்டியிருக்கிறார்கள், சில அலுவலகங்களுக்காக.

தானிய விஞ்ஞானத் தொழில் நுட்பத் துறையில் சோளத்திலிருந்து எண்ணெய் எடுப்பது எப்படி, சோளத்தை உடைத்துப் பிரித்து அதன் பல பாகங்களையும் பயன்படுத்துவது எப்படி என்று விளக்கினார் விஞ்ஞானி சத்யேந்திரா. பிறகு கார்ன் ஃப்ளேக்ஸ் தயாரிப்புக்கும், எண்ணெய் பிரித்தெடுப்பதற்கும் போக, வாலுவுக்குப் பிரியமான கால்நடைத் தீவனத்துக்குப் பயன்படும் வகையில் உடைத்து, சக்கைப் பிரித்து எடுக்கும் இயந்திரங்களை உருவாக்கி இருப்பதைக் காண்பித்தார். பழைய, ஆரம்ப கால சாதாரண ரைஸ் மில்லிலிருந்து, இன்றைய நவீன மில் வரை உருவாக்கி இருப்பதையும் காண்பித்தார்.

மலைத் தோட்டப் பயிர்களிலிருந்து எண்ணெயும், எஸென்சும் எடுக்கும் வகைகளை விளக்கினார் டாக்டர் கிருஷ்ணமூர்த்தி. ஜனதா ஆட்சிக் காலத்தில் பெப்சிக்கும், கோககோலாவுக்கும் கல்தா கொடுத்துவிட்டு, 'டபுள் செவன்' பானம் உருவானது இங்கே தான். (இப்போ எங்கே அது?)

ஏலக்காய் மணம் கமழும் டீ, லெமன் டீ எல்லாம் தவிர, முந்திரி - ஆப்பிள் இணைந்த ஜூஸ் (ஆகா!), நாகப்பழ ஜூஸ் என்று, இந்த டிபார்ட்மெண்டின் கண்டுபிடிப்புகளில் நம்மை மிகவும் கவர்ந்தது காபி டிகாக்ஷன். அசல் ஃபில்டர் காபிதான்! 200 எம்.எல்.லில் 60 கப் காபி தயாரிக்கலாம். பெங்களூர் பிரகதி ஃபுட்ஸ் இதை விற்பனை செய்கிறது. ஸ்பைசஸ் போர்டு, காபி போர்டு, டீ போர்டு என்று (ஸ்கூல் போர்டைத் தவிர) எல்லா போர்டுகளுடனும் இணைந்து புதிய புதிய கண்டுபிடிப்புகளை உருவாக்குவதில் இந்தத் துறை முனைந்திருக்கிறது. மணம் நிறைந்த இன்ஸ்டன்ட் டீ தயாரிப்பில் இப்போது ஈடுபட்டிருக்கிறார்களாம்.



• கிருஷ்ணமூர்த்தி

ஹார்ட் பேஷன்ட்டுகளுக்கு என்று, காபியிலிருந்து 'காஃபின்' நீக்கப்பட்ட காபியை உருவாக்கியிருக்கிறார்கள். இது யு.எஸ்.ஸில் மிகப் பிரபலமாம்!

ரெடி - டு - ஈட் நான் - வெஜ் ஐட்டங்களை, ஃபிஷ் - பௌல்ட்ரி - மீட் பிராடக்ட்ஸ் துறையில், பாட்டில் பாட்டில்களாகத் தயாரித்து லேபில் ஒட்டி வைத்திருக்கிறார்கள்.

புதிய கட்டடங்களில் ஒன்று, மாவு - பேக்கரி பொருள்களுக்கு மட்டுமே!

"அதி நவீன மாவு மில் இங்கே இருக்கிறது. இங்கே இருக்கிற இன்டர்நேஷனல் மில்லிங் டெக்னாலஜி ஸ்கூலில் பேக்கரி வகுப்புகளும் நடக்கின்றன" என்று காண்பித்தார் டாக்டர் ஹரிதாஸ் ராவ். "வெளிநாடுகளில் ரொட்டிக்கான கோதுமை, பிஸ்கெட்டுக்கான கோதுமை என்று தனித் தனியே உண்டு. நாங்களும் அது போல, தனி மாவு தயாரிக்க ஆராய்ந்து வருகிறோம். பேக்கரிக்கு அடிடிவ்ஸ் எனப்படும் சேர்க்கைப் பொருட்களைக் கண்டுபிடித்திருக்கிறோம்!" என்கிறார் ஹரிதாஸ் ராவ்.

"ஜெர்மனியில் 200 வகை ரொட்டிகள் இருக்கின்றன. நாமும் நிறைய வெரைட்டிகள் தயாரிக்க வேண்டும். இப்போது பேக்கரி தொழில் விரிவடைந்து வருகிறது. பலவித மாவுகள் சேர்ந்த ரொட்டியும், தானியங்களிலிருந்து தயாரிக்கும் ரொட்டிகளும் பிரபலமாகும் நாள் அதிக தூரத்தில் இல்லை.

குறைந்த செலவில் சத்துணவு, குழந்தைகள் தினத்தன்று பிரதமர் வெளியிட்டாரே, அது இவர்கள் ஆராய்ச்சியில் கண்டுபிடித்தது தானாம்.

சுமார் 140 ஏக்கரில் அமைந்த இந்த ஆராய்ச்சிக் கழகத்துக்கு இது பொன்விழா ஆண்டு. இதன் குட்டிக் கிளைகள் நாட்டின் ஏழு இடங்களில் இயங்குகின்றன.

'பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து...' என்ற பாட்டு நினைவு வரவில்லை?

— சாருகேசி

# பவர்ஃபைனான்ஸ்

## ஒளிமயமான எதிர்காலம்
## நிலையான வருமானம்

## தமிழக அரசு நிதி நிறுவனம்

வழங்குகிறது

# 13.14%

| காலம் | ஆண்டு வட்டி | |
|---|---|---|
| | மாதமொரு முறை | மூன்று மாதங்களுக்கு ஒரு முறை |
| 12 மாதங்கள் & 1 நாள் | - | 12.12% |
| 25 மாதங்கள் | - | 12.63% |
| 36 மாதங்கள், 48 மாதங்கள் & 60 மாதங்கள் | 13% | 13.14% |

# 18.18%

60 மாதங்களுக்கு
(மாதாந்திர கூட்டுவட்டி
ஆண்டிற்கு 13%)

- இந்நிறுவனம் வங்கிப்பணி சாராத நிதி நிறுவனமாக ரிசர்வ் வங்கியில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதன் பதிவு எண் : 07. 00389 ஆகும்.
- முழுமையான பாதுகாப்பிற்கு CRISIL வழங்கியுள்ள FA+ மதிப்பீடு.
- துவக்கத்திலிருந்து தொடர்ச்சியாக இலாபம் ஈட்டி வருகிறது.
- கடந்த மூன்று ஆண்டுகளாகத் தொடர்ந்து 20% ஈவுத்தொகை வழங்கி வருகிறது.

*மேலும் விபரங்களுக்கு :*

**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம்** (பவர்ஃபின்)




பதிவு அலுவலகம் : 84, டிடிகே. சாலை,
ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.
Visit us at : www.tnpowerfinance.com www.tninfrafinance.com

29-9-99 தேதியிட்ட 'எகனாமிக் டைம்ஸ்' இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.

"Details are also available on the Internet" www.tn.gov.in www.chennaionline.com



• கூட்டத்தில் ஒரு பகுதி

புகழ் பாடவும் வருமாறு அழைத்து மகிழ்ந்தார்.

● "வள்ளுவர் வாசுகியோடு நிறுத்திக் கொண்டார். நீயோ வாழ்வை மூன்றாய் வகுத்துக் கொண்டாய்..." என்று கலைஞரின் குடும்ப வாழ்க்கையைப் புகழ்ந்த வைரமுத்து.



**முக்கடலும் சங்கமிக்கும் குமரி முனையில் நடந்த வள்ளுவர் சிலைத் திறப்பு விழாவில், வள்ளுவர் புகழ் பாடப்பட்டதை விட கலைஞர் புகழ் பாடப்பட்டதே அதிகம். சாம்பிளுக்குச் சில...**

● "புல்லாங்குழல் கொடுத்த மூங்கில்களே எங்கள் புருஷோத்தமன் புகழ் பாடுங்களேன்" என்றார் கண்ணதாசன். நான் சொல்கிறேன், 'கற்கண்டுத் தமிழ் கற்பிக்கும் புலவர்களே, அந்தக் கனித்தமிழ் காக்கும் கலைஞர் புகழ் பாடுங்களேன்!' என்று உங்களையெல்லாம் அழைக்கிறேன்!" என்றார் தமிழண்ணல். கலைஞர் புகழை மட்டுமல்ல; அன்பழகன், தமிழ்க்குடிமகன்

# கௌரவ வேடத்தில் வந்து போன வள்ளுவர்!

• விழா மேடையில்...



''உன் மூளையைப் போல் ஒரு கணிப்பொறியை யார் கண்டுபிடித்தார்? பில்கேட்ஸ் உன்னிடம் பிச்சை வாங்குவான். உன்னால் உழவர் சந்தையிலும் ஜெயிக்க முடியும்! இந்தப் புலவர் சந்தையிலும் ஜெயிக்க முடியும்!'' என்று நீண்ட ஆலாபனையும் செய்தார்.

● ''கற்பனைகள் உன்னிடத்தில் கவிதை கேட்கும்; கடிகாரம் உன்னிடத்தில் நேரம் பார்க்கும்! வள்ளுவனே வந்து புகழ் மாலை தந்தாலும் தரக்கூடும் தலைவா! அஞ்சுக அன்னைக்கு 1924, ஜூன் 3-ம் தேதி இடுப்பு வலி எடுத்திருக்காவிட்டால், இங்கே பலருக்கு நெஞ்சு வலியே வந்திருக்கும்!'' என்று கவிதை படித்தார் கவிதைப்பித்தன். கலைஞர் வள்ளுவரை 'அய்யன்' என்று புதுப் பெயர் சூட்டி மகிழ்ந்தார். கவிதைப் பித்தனோ கலைஞரை 'அய்யன்' என்று அழைத்து மகிழ்ந்தார்.





● ''ஊரெல்லாம் பங்களா கட்டியவர்கள் உன் பாறையை மட்டுமாவது விட்டு வைத்தார்களே!'' என்று 'விட்'டடித்தவர் எஸ்.ரா. சற்குணம்.

● கலைஞரின் எல்லாக் கூட்டங்கள் - விழாக்களிலும் தவறாமல் வந்து கலைஞர் புகழ் பாடுகிற சிறுமி சிந்துகவி இந்த விழாவுக்கும் வந்து, 'வாழும் கால வள்ளுவர், கல்லக்குடி கண்டவர்' என்று மடமட தமிழில் புகழ்ந்து பேசினாள்.

● இத்தனை ஐஸ் புயலுக்கு மத்தியில், தப்பித் தவறி இரண்டொருவர் வள்ளுவர் பற்றியும் திருக்குறள் பற்றியும் கூடப் பேசினார்கள் என்பது ஆச்சரியம்.

மற்றபடி இது, கட்சிக் கொடி கட்டாத கலைஞரின் பவள விழாதான். கருத்தரங்கம், கவியரங்கம் என்று எல்லாமே கலைஞரரங்கமாகத்தான் காட்சியளித்தன. எப்போதாவது கௌரவ வேடத்தில்தான் வந்து போனார் வள்ளுவர்.



• சிந்துகவி

**— வியூவ்ஸ் நியூஸ்**

படங்கள் : **சுபமணி**

# 1

"உங்கள் கல்லூரிக்கு வந்ததில் எனக்கு ரொம்பவும் மகிழ்ச்சி. உங்கள் முதல்வர் எனக்குக் கல்லூரியையெல்லாம் சுற்றிக் காட்டினார். நிறையக் கட்டடங்கள். பெரிய விளை யாட்டு மைதானம். இதையெல் லாம் நான் பார்க்கும்போது எனக்கு வேறொரு சிந்தனைதான் வந்தது.

"இத்தனை பெரிய இடத்தில் நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? யாரோ எழுதி வைத்த விஷயங்களைத்தான் திரும்பத் திரும்ப படித்துக் கொண்டிருக் கிறீர்கள். அதாவது அரைத்த மாவையே அரைத்து, சுட்ட தோசையையே சுட்டுக் கொண்டிருக்கிறீர்கள். இதெல்லாம் உங் களுக்கும் இந்தச் சமுதாயத்துக்கும் எந்த அளவுக்குப் பயன்படும் என்று தெரிய வில்லை!

"இதற்குப் பதிலாக நெரிசலாக இருக்கிற கொத்தவால்சாவடியை உங்கள் கல்லூரிக்கு மாற்றி விடலாம். இங் கேயிருக்கிற கட்டடங் களில் ஓர் அறையில் கத்திரிக்காய் கொட்டி



# நான நாத்திக

வைக்கலாம். இன்னோர் அறையில் வெண்டைக் காய் கொட்டி வைக்க லாம். பெரிய விளை யாட்டு மைதானம், லாரிகள் வந்து போவ தற்கு மிகவும் வசதியாய் இருக்கும்.

"இப்படிச் செய்வதால் இங்குள்ள ஆசிரி யர்களுக்கு வேலை போய் விடுமோ என்று பயப்பட வேண்டியதில்லை. அவர்களெல் லாம் வரவு செலவுக் கணக்கு எழுதலாம். பலமான மாணவர்கள் வண்டியிழுக்கலாம். பலம் குறைந்த மாணவர்கள் வண்டியைத் தள்ளலாம். மாணவிகள் அழுகிய காய் கறிகளைப் பிரித்தெடுக்கலாம். இப்படிச் செய்வது, நீங்கள் படிக்கிற படிப்பை விட உபயோகமாக இருக்கும். உங்களுக்கு மட்டு மல்ல; இந்தச் சமுதாயத்திற்கும் மிகுந்த உப யோகமாக இருக்கும்!"

– *1964*–ல் எங்கள் பச்சையப்பன் கல் லூரிக்கு வந்திருந்த பெரியார் தமது பேச்சை இப்படித்தான் ஆரம்பித்தார். இது எனக்கு மிகுந்த சிரிப்பை வரவழைத்தாலும் இதற்கு அடுத்து 'மதமும் மனிதனும்' என்கிற தலைப் பில் அவர் பேசிய பேச்சு எதுவுமே என் மனத்தில் ஏறவில்லை.

காரணம், கடவுள் மேல் நான் கொண் டிருந்த பக்தி! பக்தி என்றால் அப்படி இப்படி அல்ல. தீவிர பக்தி. அகரத்திலிருந்து மைலாப்பூரிலுள்ள கபாலீஸ்வரர் கோயி லுக்கு (சுமார் ஒன்பது கி.மீ.) கால்நடை யாகவே சென்று வருவேன். நடந்து செல்வதுதான் நிஜமான பக்தி என்கிற எண்ணம் எனக்கு!

அப்போது புகுமுக வகுப்பு படித்துக் கொண்டிருநதேன். நான் பிறந்தது அகரம். அங்கிருந்து தினசரி சைக்கிளில் தான் கல்லூரிக்கு வந்து போவேன். சைக் கிளில் வரும் சக நண்பர்கள் ஏதாவது பேசிச் சிரித்துக் கொண்டு வருவார்கள். நான் அப்படியல்ல!

கல்லூரிக்குக் கிளம்பும் போது, பக்தி சிரத்தையாகப் பூஜை செய்வேன். நெற்றி நிறையத் திருநீறு பூசிக் கொள்வேன். அதற்கு மேல் சந்தனப் பொட்டு, குங்குமப் பொட்டு என்று வைத்துக் கொண்டுதான் கிளம்பு வேன்.

சைக்கிளில் ஏறி அமர்ந்த பிறகு என் கால்கள் சைக்கிள் பெடலை மிதித்துக் கொண்டிருந்தாலும் வாய் தேவாரப் பாடல் களையோ கந்தர் அனுபூதியையோதான் முணுமுணுத்துக் கொண்டிருக்கும். கல் லூரிக்கு வந்து சைக்கிளை நிறுத்தும் வரை இதே நிலைதான்.

சில சமயங்களில் சைக்கிள் ஓட்டும் போது கூட கண்களை மூடிக் கொண்டே

தேவாரம் பாடிக் கொண்டு செல்வேன். கண்களை மூடிக் கொண்டு ஓட்டினாலும், தேவாரத்தை முணுமுணுப்பதால், கடவுள் சரியானபடி சைக்கிளை ஓட்டச் செய்வார் என்கிற அசைக்க முடியாத நம்பிக்கை!

இப்படிப்பட்ட நான் எப்படி பெரியாரின் நாத்திகப் பேச்சை

பேராசிரியர்

பெரியார்தாசன்



# னில்லை!

ரசிக்கமுடியும்? 'மதமும் மனிதனும்' என்கிற தலைப்பில் மாலை மூன்று மணிக்கு எங்கள் கல்லூரியில் பெரியார் பேசப் போகிறார் என்று அறிவித்திருந்தார்கள். சரி! நமக்கெதற்கு அவருடைய பேச்செல்லாம்? மூன்று மணியானதும் வீட்டுக்குப் புறப்பட்டு விடலாம் என்றுதான் கிளம்பினேன்.

அப்போது, என் பேராசிரியர் டாக்டர் குமரவேல் என்பவர்தாம், "டேய், பெரியார் என்னதான் பேசறார்னு போய்க் கேளுடா!" என்று என்னைத் தடுத்து நிறுத்தி, பெரியாரின் பேச்சைக் கேட்க அனுப்பி வைத்தார். இருந்தபோதிலும் பெரியாரின் நாத்திக வாதப் பேச்சு என் காதில் ஏறவில்லை. இடையிலேயே எழுந்து போனால், எங்கே பேராசிரியர் பார்த்து விடுவாரோ என்கிற பயமும் இருந்ததால் அங்கேயே உட்கார்ந்திருந்தேன்.

ஒருவழியாகப் பெரியார் பேசி முடித்

தார். முடிக்கும்போது, "இதுவரைக்கும் நான் பேசியதையெல்லாம் கேட்டீங்க. ஏதோ ஒரு மகான் வந்து இப்படியெல்லாம் பேசியதா நினைக்காதீங்க. யாரோ ராமசாமிங்கிற ஒரு காட்டுமிராண்டி வந்து பேசினான்னு நினைச்சுக்குங்க. நான் சொன்னதையெல் லாம் அப்படியே ஏத்துக்கணும்னு அவசிய மில்லை. நான் பேசியதையெல்லாம் நீங்க நிதானமா சிந்திச்சுப் பாருங்க. பயனுள் ளதா இருந்தா ஏத்துக்கங்க. இல்லேன்னா விட்டுடுங்க. இதுவரைக்கும் நான் பேசிய தில் ஏதாவது சந்தேகம் இருந்தா, நீங்க என் னைக் கேட்கலாம். ஒரு சீட்டுல உங்க கேள்வியையும் உங்க பேரையும் எழுதிக் கொடுத்தனுப்புங்க!" என்று ஓர் அறிவிப் பையும் செய்தார்.

நான் உடனே ஒரு சீட்டில், "அப்பரடி கள் போன்ற பெரிய பெரிய மகான் களெல்லாம் கடவுள் இருக்கார்னு சொல்லி யிருக்காங்க. அதே மாதிரி தோற்றமுடைய நீங்க, கடவுள் இல்லேன்னு சொல்லலாமா? இது நியாயமா?" என்று எழுதி வீ. சேஷா சலம் என்கிற எனது இயற்பெயரையும் எழுதியனுப்பினேன். அனுப்பி விட்டு என் கேள்விக்கு அவர் சொல்லும் பதிலைக் கேட்கும் ஆர்வத்தில் முண்டியடித்துக் கொண்டு மேடைக்கு அருகில் போய் நின்று கொண்டேன்.

பெரியார் ஒவ்வொரு சீட்டாக எடுத்துப் படித்துப் பதில் சொல்லிக் கொண்டே வந் தார். அவர் மற்றவர்களுக்கு என்ன பதில் சொல்கிறார் என்பதிலெல்லாம் என் கவ னம் செல்லவில்லை. என் சீட்டு எப்போது வரும் என்று பார்த்துக் கொண்டே இருந் தேன்.

கடைசி சீட்டாக என் சீட்டு வந்தது. அதைப் படித்த பெரியார், "இதை எழுதிய தம்பி மேடைக்கு வாங்க!" என்றார். எனக்கு ஒருபுறம் மகிழ்ச்சியாக இருந்தாலும் மறு புறம் பயமாகவும் இருந்தது.

ஒருவழியாக தைரியத்தை வரவழைத்துக் கொண்டு மேடைக்குச் சென்றேன். 'பிரபஞ் சத்தின் தோற்றமும் வளர்ச்சியும்' என்கிற தலைப்புடைய ஒரு புத்தகத்தை எடுத்து என் னிடம் கொடுத்த பெரியார், "இதைப் படிச் சுப் பாருங்க தம்பி. உங்க கேள்விக்கான பதில் கிடைக்கும்!" என்று எனக்கு மட்டுமே கேட்கிற குரலில் சொன்னார்.

என் கேள்விக்கு பெரியார் நேரடியாகப் பதில் சொல்லவில்லையே என்கிற எண் ணம் காரணமாகவும் நாத்திகக் கருத்துக் களை நாம் ஏன் தெரிந்து கொள்ள வேண் டும் என்கிற வெறுப்பு காரணமாகவும் அந் தப் புத்தகத்தை நான் படிக்காமலேயே இருந்தேன்.

சில மாதங்களுக்குப் பிறகு – கல்லூரி விடுமுறை நாட்களில் ஒருநாள், படிப்பதற்கு வேறு புத்தகம் எதுவுமே இல்லாததால், பெரியார் கொடுத்த அந்தப் புத்தகத்தை எடுத்துப் படிக்க ஆரம்பித்தேன். படித்து முடித்தபோது, அதுவரை நான் கொண்டிருந்த கடவுள் கோட்பாடு பற்றிய கலக்க மும் சலனமும் என்னுள் ஏற்பட ஆரம்பித் தது! நான் அது வரை எதையெல் லாம் புனிதமான தென்று நினைத் துக் கொண்டிருந் தேனோ அதெல் லாம் உண்மையி லேயே புனித மானதுதானா என் கிற கேள்வி என் னுள் எழ ஆரம்பித் தது!

(தொடரும்)

**இரா. பாலசுப்ரமணியன் (மதுரை வானொலி நிலைய இயக்குனர்) :**

எனக்கு புடிச்ச உணவை சொன்னா சிரிப்பீங்க... மதுரைக்கு மாற்றலாகி வந்ததிலிருந்து முனியாண்டி விலாஸ் கொத்து புரோட்டாதான் நம்ம ஃபேவரிட் ஐட்டம்! இந்த கொத்து புரோட்டாவை சாப்பிட்டு சாப்பிட்டு, இப்ப வீட்டு சாப்பாடு ஒத்துக்க மாட்டேங்குதுனா பார்த்துக்கங்க!



# ஆண்டு தொடக்கம் தரும் ஆனந்தம்
# ஆயுள் முழுவதும் தொடர TDFC யில் சேமியுங்கள்.



| **13.14%** |  | **18.18%** |
|---|---|---|
| 36 மாதம் அதற்குமேல்<br>13% மாதாந்திர வட்டி உண்டு<br>1வருடம் 12.12% மற்றும்<br>25 மாதங்கள் 12.63% காலாண்டிற்கு | | 60 மாதங்களுக்கு<br>வருடவட்டி 13% மாதந்தோறும்<br>கூட்டுவட்டி முறையில் கணக்கிடப்படும். |

- Rating from CRISIL FA(+) indicates adequate safety.
- Registered with RBI as NBFC vide Regn. No.: 07.00403



## தமிழ்நாடு போக்குவரத்து வளர்ச்சி நிதி நிறுவனம் லிமிடெட்.

(தமிழ்நாடு அரசு நிறுவனம்)

பதிவு அலுவலகம் : 99, கிரீம்ஸ் சாலை, எம்.என். அலுவலக வளாகம், சென்னை-6.
தொலைபேசி : 8292059, 8292917, 8293351, பேக்ஸ் : (044) 8237876
தந்தி :TAFCON. P.B.No.719. E-mail:tdfc@giasmd01.vsnl.net.in

கிளைகள் : ★ அரசு விரைவு பேருந்து நிலையம், காந்திபுரம், கோயம்புத்தூர்-641 044. தொலைபேசி : (0422) 497102
★ அரசு விரைவு பேருந்து நிலைய வளாகம், திருச்சி-620 001. தொலைபேசி:(0431) 464188
★ ராணி மங்கம்மாள் சத்திரம், மதுரை-625 001. தொலைபேசி: (0452) 741686
★ முனிசிபல் அலுவலக வளாகம், காமராஜர் சாலை, ஈரோடு-638 001. தொலைபேசி :(0424) 258204

- உள்ளூர் காசோலைகள் மற்றும் சென்னை வரைவோலைகள் மட்டுமே பெற்றுக்கொள்ளப்படும்.
- காசோலைகளும், வரைவோலைகளும், சனி மற்றும் ஞாயிற்றுக் கிழமைகளிலும் சென்னை அலுவலகத்தில் ஏற்கப்படும்.

**உங்களது முதலீடு "டிடிஎப்சி" யில் பாதுகாப்பானது – பத்திரமானது**

இந்த விளம்பரம் கம்பெனியால் 29.9.99 தினசரியில் வெளியிடப்பட்ட சட்ட பூர்வ விளம்பரத்தின் தொடர்ச்சியாகும்.

*"Details are also available on the internet"* www.tn.gov.in / www.chennaionline.com

DIPR/19/DIS/2000/ELEGANT

• ஆர்.எஸ். பாரதி



# ஆலந்தூர் நகராட்சியின் அடாவடித்தனம்!

சென்னையை ஒட்டியுள்ள ஆலந்தூர் நகராட்சிப் பகுதியில் வசிக்கும் மக்கள் கொதித்துப் போயிருக்கிறார்கள். விஷயம் இதுதான். ஆலந்தூர் நகராட்சிப் பகுதியில் 34 கோடி ரூபாய் செலவில் பாதாளச் சாக்கடைத் திட்டம் அமைக்க தமிழக அரசு அனுமதி கொடுத்திருக்கிறது. இந்தத் திட்டத்திற்கு முழுக்க, முழுக்க உலக வங்கியிடமிருந்து கடன் பெற உத்தேசித்துள்ளது நகராட்சி. கடன் தருவதற்கு உலக வங்கி பல நிபந்தனைகளை விதித்துள்ளது. அதில் முக்கியமான ஒன்று, வாங்கும் கடனை, வட்டி உட்பட, திருப்பிச் செலுத்தும் தகுதி நகராட்சிக்கு உள்ளதா என்பதை நிர்ணயிக்கும் ஒரு நிபந்தனை. அதன்படி ஆலந்தூர் நகராட்சிப் பகுதியில் பாதாளச் சாக்கடை இணைப்பு வேண்டுபவர்கள் வைப்புத் தொகை (deposit) செலுத்த வேண்டும். குறைந்தபட்சம் 10,000 இணைப்புகளுக்கான வைப்புத் தொகை வங்கியில் சேர்த்தால்தான் பணியைத் துவக்க முடியுமென உலக வங்கி கூறி விட்டது. இங்கேதான் பிரச்னை துவங்கியது. எந்தவிதமான நியாயமான வரைமுறையும் இல்லாமல் வைப்புத் தொகையைத் தன்னிஷ்டத்திற்கு நிர்ணயித்திருப்பதாகப் புலம்புகிறார்கள் மக்கள்.

"ஆலந்தூர் நகராட்சிப் பகுதியில் அடுக்குமாடிக் குடியிருப்புகள்தான் அதிகம். (நகராட்சிக்குச் சொத்து வரி செலுத்தும் 26,000 பேரில் 18,000 பேர் ப்ளாட்டுகளில் குடியிருப்பவர்களே!) அடுக்குமாடி வீடுகளில் உள்ள ஒவ்வொரு ப்ளாட் சொந்தக்காரர்களும் சொத்துவரி செலுத்துபவர்கள். நகராட்சியின் ஆலோசனை அல்லது உத்தரவுப்படி சொத்து வரி செலுத்துவோர் ஒவ்வொருவரும் தங்கள் ப்ளாட்டின் பாதாளச் சாக்கடை இணைப்புக்காக 5000 ரூபாயை வைப்புத் தொகையாகக் கட்ட வேண்டும். இந்த அறிவிப்புப்படி கொஞ்சமும் யதார்த்தத்துக்குப் பொருந்தாத அநியாய வசூல் செய்ய நினைக்கிறது நகராட்சி. ஓர் அடுக்கு மாடி வீடுகள் தொகுப்பில் பத்து வீடுகள் இருக்கலாம்; முப்பது வீடுகளும் இருக்கலாம். அதில் இருக்கும் ஒவ்வொரு ஃப்ளாட் உரிமையாளரும் 5000 ரூபாய் தர வேண்டியிருக்கிறது. அப்படிப் பார்த்தால் நகராட்சி கொடுக்கப் போகும் ஒரு இணைப்புக்கு அடுக்குமாடித் தொகுப்புகளில் இருப்பவர்கள் ஆயிரக்கணக்கில், ஏன் லட்சக்கணக்கில் கூட வைப்புத் தொகை அழவேண்டியிருக்கிறது.

"ஆனால் ஒரு தனி கிரவுண்டில் வீடு கட்டி, அதில் ஐந்து, பத்து போர்ஷன்களை வாடகைக்கு விட்டிருப்பவர் கட்ட வேண்டிய தொகையும் அதே ரூபாய் 5000 தான். காரணம், அந்த கிரவுண்டில் சொத்து வரி செலுத்துபவர் ஒருவர் மட்டும்தானாம். தனிப்பட்ட வீட்டுச் சொந்தக்காரர் வாட

• அடுக்குமாடி குடியிருப்போர் கூடி விவாதிக்கிறார்கள்...



கையாக நிறையப் பணம் வசூலிக்கிறார். அது தவிர இந்தத் திட்டத்தின் மூலம் வாடகையை உயர்த்தி வாங்கவும் அவரால் முடியும். அப்படிப்பட்ட அவருக்கும் 5000 ரூபாய்தான்!



* ஆலந்தூர் நகராட்சி அலுவலகம்



* சுப்ரமணியன்

"இது தவிர இந்தப் பகுதியில் சிலர் flat system போலவே வீடுகள் கட்டி முழுக்க வாடகைக்கும் விட்டிருக்கிறார்கள். அது போன்ற வீடுகளுக்குச் சொந்தக்காரர்கள் கட்ட வேண்டியதும் 5000 ரூபாய் தான். இது என்ன நியாயம்? நாங்கள் நடுத்தர மக்கள். அங்கே இங்கே கடன் வாங்கி பிளாட் வாங்கியிருக்கிறோம். எனவே இந்த மாதிரியான பாகுபாடு சரிதானா, முறைதானா என்று நகராட்சியிடம் நாங்கள் கேட்கிறோம். நாங்கள் இந்தத் திட்டத்தை முழு மனதோடு வரவேற்கிறோம். அதே சமயத்தில் வைப்புத் தொகை நிர்ணயிக்கப்பட்டது சரியில்லை என்பதுதான் எங்கள் கருத்து!" என்று சொல்கிறார் ஆலந்தூர் நகராட்சி அடுக்கு மாடி வீடுகள் குடியிருப்போர் சங்கத்தைச் சேர்ந்த ஆர். சுப்பிரமணியன்.

அடுக்குமாடி வீட்டு உரிமையாளர்கள் சுமார் 300 பேர் தங்களது முறையீட்டை நகராட்சித் தலைவர் ஆர்.எஸ். பாரதியிடம் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் அவரோ மக்களின் வேண்டுகோளைக் காது கொடுத்தே கேட்காமல் அவர்கள் மீதே பாய்ந்தாராம். "இந்தத் திட்டம் பிளாட்கள் அதிகமானதால்தான் கொண்டு வர வேண்டியிருக்கிறது. இந்த பிளாட்கள் எல்லாம் முனிசிபாலிடிக்கு ஒரு நியூசென்ஸ். நீங்கள் 10000 பேர் வைப்புத் தொகை செலுத்தாவிட்டால் திட்டம் கைவிடப்படும். கோயில் உண்டியலில் பணம் போடுவது போன்று இந்த வைப்புத் தொகையை செலுத்துங்கள். இல்லாவிட்டால் உங்கள் ப்ளாட்டுகளில் உள்ள செப்டிக் டாங்கையெல்லாம் உடைத்துத் தள்ள வேண்டியிருக்கும்!" என்று சொல்லி விட்டார் சேர்மன் என்றார் சுப்பிரமணியன்.

இப்பிரச்னைக்கு முடிவு காண குடியிருப்போர் சங்கம் மூன்று யோசனைகளை முன் வைத்திருக்கிறது.

– ஒவ்வொரு அடுக்கு மாடி வீடுகள் தொகுப்பிலும் எத்தனை குடிநீர் இணைப்புகள் இருக்கிறதோ அதன்படி வைப்புத் தொகையை நிர்ணயிக்க வேண்டும்.

– இல்லையேல் தனி வீடாக இருந்தாலும், ப்ளாட்டாக இருந்தாலும் சதுர அடி அடிப்படையில் நிர்ணயிக்க வேண்டும்.

– அல்லது தனி வீடாக இருந்தாலும் சரி, அடுக்குமாடி தொகுப்பாக இருந்தாலும் சரி, அவை கட்டப்பட்டிருக்கும் பரப்பளவைப் பொறுத்து நிர்ணயம் செய்ய வேண்டும்.

"செலுத்தும் வைப்புத் தொகைக்கு வட்டி இருக்கிறதா என்று தெரியாது. தவிர இந்த ஸ்கீம் எப்போது துவங்கி எப்போது முடியும் என்பதும் தெரியாது. மேலும் 31.12.1999க்கு முன் கட்டினால் 5000 ரூபாய், அதன்பின் 31.3.2000 வரை 6000 ரூபாய். அதற்குப் பிறகு 9000 ரூபாய் என்று நிர்ணயித்திருக்கிறது நகராட்சி. இதுவும் நியாயமற்றது. ஒரு கட்டணத்துக்கு தான் அபராதம் விதிக்க முடியுமே தவிர, வைப்புத் தொகைக்கு விதிக்க முடியாது. வைப்புத் தொகை செலுத்த கால நிர்ணயம் வைக்கலாமே தவிர அதை உயர்த்த முடியாது. எனவே நகராட்சி எங்கள் கோரிக்கையைப் பரிவுடன் பரிசீலிக்க வேண்டும். வைப்புத் தொகை சரியான முறையில், எந்தப் பாகுபாடும் இல்லாமல் நிர்ணயிக்கப்பட்டால் நகராட்சி எதிர்பார்த்ததை விட அதிகமாகவே வைப்புத் தொகை வசூலிக்க முடியும்" என்றார் சுப்பிரமணியன்.

நகராட்சி தங்கள் கோரிக்கைகளைப் பரிசீலிக்காவிட்டால், தெருவில் இறங்கிப் போராடவும் தயாராகி விட்டார்கள் பிளாட் உரிமையாளர்கள்.

— ஆர்.எஸ்.

CHEAPEST PRICE IN TAMILNADU SRI VENKATESWARA STEEL HOUSE
CHEAPEST PRICE IN TAMILNADU SRI VENKATESWARA STEEL HOUSE
CHEAPEST PRICE IN TAMILNADU SRI VENKATESWARA STEEL HOUSE

**மா**மா வந்திருந்தார்.

வாசல் தாண்டும் போது மூக்கில் பொடி - ராக்கெட் ஏறும் சப்தம். வரது வரவும், திரும்பிப் பார்த்தார்.

"வாடா... காவேரிக்குப் போயிட்டு வரியா?"

"ஆமாம் மாமா. சௌக்கியமா?"

" எனக்கென்ன... என் கூட மெட்ராஸ் வரியோல்லியோ?"

அந்தக் கேள்வி காதில் விழாதபடி துண்டை உலர்த்த கொல்லைப்புறம் போனான்.

"அக்கா... உன் புள்ளை கரண்டி பிடிக்கறத பத்தி என்ன நினைக்கறான்?" - மாமா கேட்க, அரிசியில் கல் பொறுக்கும் அக்காக்காரி 'ஹூம்!' என்றாள் பெருமூச்சுடன்.

"புரியறது... நமக்கெல்லாம் இப்ப வேற வேலை யார் தரேங்கறா?"

"நான் நீ சொல்றத கேப்பேனா... இல்லை அவன் சொல்றதைச் சொல்வேனா?"

"ஏன், சமையலுக்கு என்ன குறைன்னேன்? கல்யாண மாசங்கள்ல, 'அன்ளலாம்' தெரியுமா? கை மணம்னு ஒண்ணு இருக்கு. அது மட்டும் உன் பிள்ளைக்கு வசப்பட்டுட்டா போதும்."

மாமா பேசுவது - அம்மா பெருமூச்சு விடுவது எல்லாம் வரது காதில் விழுந்தபடி இருந்தது.

'கைமணமாம்



••

**"என் மருமான் - கம்ப்யூட்டர்ல புலி. மைசூர்பாகு கிளறுவதைப் பாக்கணும்னான்; அழைச்சுண்டு வந்தேன்..."**

••

# இந்திரா சௌந்தர்ராஜன்

கைமணம்... பூ வித்தா கூடத் தான் கை மணக்கும். சென்ட் கூட விக்கலாம்தான்... இதுக்கு எதுக்கு கம்ப்யூட்டர் சைன்ஸ் படிக்கணும்?'

**வே**றுவழியின்றி, சென்னை வந்து செட்டிலாகி தொழிலுக்கும் புறப்பட்டாகி விட்டது.

"அந்தப் பையை எடுக்கலே?" என்றார் மாமா.

அதில் சிவாளி, கரண்டி, மத்து என்று தொழிலாயுதங்கள்.

அதைத் தொட்டுத் தூக்கும்போதே மனசை விட்டு நம்பிக்கை, வாழவேண்டும் என்கிற ஆசை எல்லாம் கீழே இறங்கியது.

மாமா பார்த்துக் கொண்டுதான் இருந்தார்.

அதன் பின் தெருவில் நடந்து ஆட்டோ



பிடித்து கல்யாண வீட்டுக்குப் போய் தேங்காய் உடைத்து பூஜை எல்லாம் செய்துவிட்டுச் சமையலைச் செய்ய ஆரம்பித்தார்.

முதல் தயாரிப்பே மைசூர்பாகுதான்.

வரது கசப்போடு கரண்டியால் அந்த இனிப்பைக் கிண்டிக் கிண்டி விட்டான்.

நன்றாக, பொன்பதமாக வந்த பிறகு மாமா அதை வழித்து பிளேட்டில் கொட்டி வகிர்ந்து சதுர சதுரமாக பிரிக்கும்போது பார்க்கவே அழகாக இருந்தது. மூக்கிலும் வாசம் கமகமத்தது.

"வரது... இதுல கொஞ்சத்த எடுத்துண்டு கிளம்பு"

மாமா, வியர்வை மார்போடு முன்நடக்க பின்தொடர்ந்தான்.

'என்னை இப்படி எடுபிடியாக்க வேண்டாம் மாமா...' - மனசு கருவிற்று. மாமா கல்யாண வீட்டில் ஒரு பெரிய மனிதரிடம் வரதுவை அழைத்துப் போனார்.

"வாரும் அப்புசாமி... எப்படி இருக்கேள்?"

"இருக்கேண்ணா... மொதல் மொதலா மைசூர்பாகு கிளறினேன். ஒரு வா சாப்ட்டு பாத்துட்டுச் சொல்லுங்கோ..."

– வரதுவைப் பார்த்தபடி, மைசூர்பாகு அவரால் விள்ளப்பட்டது. வாயில் விழுந்த கணம் பனியாய்க் கரைந்தது போல் வயிற்றை அடைந்தது.

"பிரமாதம் ஓய்... உம்ம கைவண்ணம் வராது."

"எல்லாம் பெரியவா ஆசி..."

"பையன் யாரு?"

"என் மருமான் – கம்ப்யூட்டர்ல புலி. மைசூர்பாகு கிளறுவதைப் பாக்கணும்னான்; அழைச்சுண்டு வந்தேன்..."

"இப்படிக் கூட ஒரு ஆசையாக்கும்... ஆமா எதுலே வேலை பாக்கறான்?"

"திருச்சில ஏதோ ஒரு கம்பெனி. இங்க வந்துடறாங்கறேன். நல்ல கம்பெனிய விட்டுட்டு எப்படி வரதுங்கறான்."

"ஏன் இங்க நல்ல கம்பெனி இல்லையாக்கும். நான்லாம் டேலன்டான ஆள் இல்லாம தவிச்சிண்டிருக்கேன்."

"அப்ப என்னண்ணா.... இப்பவே கூட்டிக்கோங்கோ. உங்கள விடவா எனக்கு மத்த விஷயம் பெரிசு...."

மாமா மைசூர்பாக்கை எடுத்து வரச் சொன்ன மர்மம் புரிந்தபோது வரதுவுக்குக் கண்கள் கலங்கி விட்டிருந்தது.

அடுப்படிக்கு வந்து 'மாமா' என்று நெகிழ்ந்து மைசூர்பாகை அவர் வாயில் திணிக்கப் பார்த்தபோது, தடுத்தார்.

"எனக்கு உடம்பு பூரா சர்க்கரை – ஆனா வாழ்க்கைல அது இல்லை! நீயானா நன்னா இரு!" ●

"ஆர்க்காடு கிச்சடியைச் சாகுபடி பண்ணியே என்னையும் படிக்க வைத்து, ஐந்து பெண்களையும் கல்யாணம் பண்ணிக் கொடுத்தார் என் தகப்பனார் சுப்பிரமணியம். எங்கள் குடும்பமே பரம்பரை பரம்பரையாக விவசாயக் குடும்பம். எனக்கு விவரம் தெரிந்த நாளிலிருந்து எங்கள் வீட்டில் அரிசி கொட்டியிருப்பதைத்தான் பார்த்திருக்கிறேன்!" என்கிறார் சமீபத்தில் முத்து மல்லா அறக்கட்டளையின் 1999ஆம் ஆண்டுக்கான விருதைப் பெற்ற, விவசாய விஞ்ஞானி எஸ்.எஸ். நாகராஜன்.

விவேகானந்தா கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது, அதே கல்லூரியில் படித்த சிம்சன் அதிபர் சிவசைலம் நண்பரானார். (அவர் தகப்பனார் அனந்தராமகிருஷ்ணன், நாகராஜன் வீட்டுக்கு வரும்போதெல்லாம் "ஆகாரம் சாப்பிட்டாயா?'' என்றுதான் முதலில் விசாரிப்பாராம்!)



• விருது பெற்ற நாகராஜனுடன், பாராட்டுப் பெறும் அவரது மனைவியும்!

கோவை விவசாயக் கல்லூரியில் படித்துவிட்டு அங்கேயே வேலையில் அமர்ந்தார் நாகராஜன். ஸ்டேன்ஸ் நிறுவனத்தை ஏற்க அங்கே வந்தார் சிவசைலம். சென்னையில் அவர் விவசாயம் சம்பந்தமான திட்டம் ஒன்றைச் செயல்படுத்த எண்ணியிருப்பதை அறிந்த நாகராஜன், அவரிடம் போய், தாம் சென்னைக்கு வந்து, அந்தத் திட்டத்தில் பணியாற்ற விரும்புவதாகத் தெரிவித்தாராம். அப்போது ஆரம்பிக்கப்பட்டதுதான் ஜே - பண்ணை. நாகராஜனின் மனைவி சாவித்திரியும் ஒரு விவசாயப் பட்டதாரி. அதே கல்லூரியில் வேலை பார்த்துக்கொண்டிருந்தார். கணவரின் வாய்ப்பைக் கருதி, தமது வேலையை ராஜிநாமா செய்துவிட்டு அவருடன் கிளம்பி சென்னைக்கு வந்துவிட்டார்.

"ஜே-பண்ணையில் எனக்கு முழுச் சுதந்தரம் கொடுத்திருக்கிறார் அதிபர் சிவசைலம். வெளிநாடுகள் அனைத்துக்கும் என்னை அனுப்பி வைத்திருக்கிறார். அதனால் மலேஷியாவிலிருந்து பொன்னி, பிலிப்பைன்ஸிலிருந்து ஐ.ஆர்.50, ஜே-18 என்று நம் நாட்டுக்குப் புதிய நெல் ரகங்களை அறிமுகப்படுத்த முடிந்தது. அப்படி அறிமுகப்படுத்தும்போதெல்லாம் விவசாயத்துறை இயக்குநர், அல்லது செயலர், வேளாண் பல்கலைக் கழகத் துணை வேந்தர் இவர்களில் யாரையாவது பக்கத்தில் வைத்துக்கொண்டுதான் செய்ய வேண்டும் என்பார் அதிபர். ஒருமுறை வேளாண் அமைச்சர் கே. ராஜாராம் முன்னிலையில் அறிமுகப்படுத்தியிருக்கிறேன்!'' என்கிறார் நாகராஜன்.

"போல் வேலி இதாலியில் இருக்கிறது. மலையிலிருந்து வரும் தண்ணீர் படு குளிர்ச்சி. கால் வைத்தால் உறைந்து போய் விடும். அப்படியே பயிருக்கு அருகே தேங்க வைத்து, பயிர் தாங்கக் கூடிய டெம்பரேச்சரில் பாய்ச்சுகிறார்கள். இவ்வளவு குளிர் நீரில் நெல் பயிர் விளையுமா என்று எனக்கு அப்போது ஆச்சரியமாக இருந்தது. அப்படி வளர்த்து, விற்ற ஆர்க்காடு அரிசி இன்னும் ஜே-பண்ணையில் இருக்கிறது!''

ஜே பண்ணைக்கு ஒரு தடவை வந்தார் 'தினமணி' ஆசிரியர் ஏ.என். சிவராமன். "உன் ஆராய்ச்சி யாருக்காக? இந்த வேலியைத் தாண்டிக்கூடப் போகவில்லையே?" என்றார். நாகராஜன் மௌனமாக இருந்தார். "தினமணியில் எழுத முடியுமா?" என்று கேட்டார். எழுதிக் கொண்டு போய்க்

கொடுத்து விட்டு வந்தார் நாகராஜன். மறுநாள் திரும்பி விட்டது!

"உங்கள் விவசாயிகள் எல்லாம் என்ன எம்.எஸ்.ஸியும் பி.எச்.டி.யும் என்று நினைப்போ? உனக்கு விவசாயக் கட்டுரை எழுதத் தெரியுமா? என்ன முதலீடு செய்தால் எத்தனை லாபம் என்று எங்காவது எழுதி யிருக்கிறாயா?" என்று கேட்டுவிட்டு அவரே அதை எடிட் செய்து வெளியிட்டார்.

"நானா எழுதினேன் என்று எனக்கே சந்தேகம் வந்துவிட்டது. 27 வருடங்கள் தொடர்ந்து என்னை 'தினமணி'யில் எழுத வைத்தவர் ஏ.என்.எஸ். ஒருநாள், ஒரு விழாவில் ஏ.என்.எஸ்.சுக்கும், எனக்கும், எஸ்.வி. சகஸ்ரநாமத்துக்கும் அவரவர்



# நெல் நேசர்

துறையில் விருது வழங்கினார்கள். எனக்கு இதில் என்ன சந்தோஷம் என்றால், என்னுடன் கூட என் 'சிஷ்ய'னுக்கும் இங்கே கௌரவம் செய்தீர்களே, அதுதான்!' என்று மேடையிலேயே பாராட்டினார் ஏ.என்.எஸ்!" என்று நெகிழ்ச்சியுடன் சொன்னார் நாகராஜன்.

"இன்னொருமுறை காஞ்சிபுரம் போயிருந்தபோது, "தஞ்சாவூர் அறுபதாம் கோடை நெல் என்று கேள்விப்பட்டிருக்கிறாயா?"என்று கேட்டார் காஞ்சிப் பெரியவர். "அது மாதிரி நெல் கண்டுபிடிப்பதுதானே? கீழ்த் தஞ்சை பூம்புகார் பகுதியில், டெய்ல் எண்டில் கிடைக்கிற சொற்ப தண்ணீரில்தான் பயிர் பண்ண வேண்டும். ஆறு மாதப் பயிர், நாலு மாதப் பயிரிலிருந்து, இன்னும் குறுகிய காலப் பயிர் பண்ண வேண்டும். மழை குறைந்துக் கொண்டு வருகிறது" என்றார். ஜே-66 நெல் வகை ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறேன் என்று தெரிவித்தேன்!" இது 70-80 நாள் பயிர்.

ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ள முன்னோடி விவசாயிகளின் பெயரும், முகவரியும் நாகராஜனுக்கு மனப்பாடம். தமிழக அரசின் உயர்மட்ட விஞ்ஞானக் குழுவில் நாகராஜனும் அங்கம் வகித்தார். "எந்தக் கட்சி ஆட்சியில் இருந்தாலும் அந்த அரசு என்னைக் கௌரவித்திருக்கிறது!" என்கிறார் நாகராஜன்.

'தினமணி'க்குப் பிறகு 'தினமலரி'லும் 'தினகரனி'லும் தொடர்ந்து விவசாயக் கட்டுரைகள் எழுதி வருகிற நாகராஜன், ஆங்கிலத்தில் 'இந்தியன் எக்ஸ்பிரஸ்'லும் 'கிசான் வேர்ல்டி'லும்கூட எழுதி வந்திருக்கிறார்.

'உணவு உற்பத்தியில் நம் நாடு சுயதேவைப் பூர்த்தி அடைவதில், சமூகத்துக்கும் அரசுக்கும் உதவ நாம் கடமைப்பட்டிருக்கிறோம் - ஏ. சிவசைலம்' என்று ஆங்கிலத்தில் ஜே - பண்ணையில் எல்லார் கண்ணிலும் படுகிற மாதிரி எழுதி வைத்திருக்கிறார்கள்.

— எஸ்.வி.என்.



**''என்னது...! 'ஹார்ட் பீட்'டையே காணுமே?''**

**''ஸ்டெத்தை என் காதுல செருகிட்டுப் பார்த்தால் உங்களுக்கு எப்படி சத்தம் கேட்கும்?''**

**– சீர்காழி வி.ரேவதி**

# பொன்னியின் செல்வன்



## பூர்வ கதை



ராஜ இராஜ சோழன் என்று சரித்திரப் புகழ் பெற்ற அருள்மொழி வர்மன், சுந்தர சோழ சக்கரவர்த்தியின் இரண்டாவது மகன். குழந்தைப் பிராயத்தில் காவிரி நதியில் விழுந்துவிட்ட அவனை, ஒரு பெண் மணி காப்பாற்றினாள். அதன் பிறகு 'பொன்னியின் செல்வன்' என்றே அவன் அழைக்கப்பட்டு வந்தான்.

பொன்னியின் செல்வனும் அவன் தமக்கை குந்தவை தேவியும் ஒருவர்பால் ஒருவர் மிகுந்த அன்பு வைத்திருந்ததோடு, சோழ நாட்டு மக்களின் உள்ளங் கவர்ந்தவர்களாகவும் விளங்கினார்கள்.

குந்தவையின் தூண்டுதலின் பேரில் அருள்மொழி, இலங்கைப் போர்க்களத்துக்குச் சென்று வீரப் புகழ் பெற்றான். இலங்கை மக்களுக்கு உகந்த பல நற்பணிகள் செய்தான். பழைய புத்த விஹாரங்களையும் ஸ்தூபங்களையும் புதுப்பித்துப் புத்த சங்கத்தாரின் நன்மதிப்பையும் பெற்றான். அவர்கள் முன் வந்து அளித்த இலங்கை அரசுரிமையை மறுதலித்தான்.

இலங்கையில், வெறிகொண்டவள் போல் அலைந்துகொண்டிருந்த ஓர் ஊமைப் பெண்ணைச் சந்தித்த அருள்மொழிவர்மன், அவளே தன்னைக் காவிரி வெள்ளத்திலிருந்து காப்பாற்றியவள் என்று அறிந்தான். தனது தந்தைக்கும் அப் பெண்ணுக்கும் காதல் இருந்ததையும், அவளுக்கு இரண்டு குழந்தைகள் பிறந்ததையும், அவள் சித்திரங்கள் வரைந்து

அமரர் கல்கி

காட்டியதன் மூலம் தெரிந்துகொண்டான். அவ்விரண்டு குழந்தைகள் யாராயிருக்கக் கூடும் என்றும் யூகித்தான்.

சுந்தர சோழ சக்கரவர்த்தி பாரிச வாயு வால் பீடிக்கப்பட்டு மரணப் படுக்கையில் இருந்தார். அடுத்தாற்போல் பட்டம் யாருக்கு என்பது பற்றி நாடெங்கும் பேச்சு எழுந்தது. அவரது மூத்த புதல்வன் ஆதித்த கரிகாலன் காஞ்சியில் அவர் பிரதிநிதியாகவும் வட திசைச் சேநாதிபதியாகவும் விளங்கி வந் தான்.

ஆதித்தன், மதுரையின் கடைசி மன்ன னாகிய வீர பாண்டியனைப் போர்க்களத்தில் முறியடித்து, துரத்திச் சென்று கொன்றான். பாண்டியனைக் கொல்ல ஆதித்தன் வாளை ஓங்கியபோது, நந்தினி என்ற அழகிய பெண் அதைத் தடுக்க முயன்றாள். அப்பெண் சிறுமி யாக இருந்தபோது ஆதித்தனின் விளை யாட்டுத் தோழியாக இருந்து, பின் பாண்டி நாடு சென்றவள். அவள் பாண்டியனுக்காக மன்றாடியதையும் மீறி, பாண்டியனைக் கொன்றதால் கரிகாலனைக் குற்ற உணர்வு பீடித்தது.

அச்சமயம் சோழ நாட்டில் பழுவூர் சிற்றரசர்களான சின்னப் பழுவேட்டரையரும், பெரிய பழுவேட்டரையரும் பேரதிகாரம் செலுத்தி வந்தனர். இவர்களை மீறி யாரும் சுந்தர சோழரைப் பார்க்கக் கூட முடியாத சூழல் நிலவியது. வீர பாண்டியனின் மரணத் துக்குப் பின் நந்தினி, கிழவரான தனாதிகாரி பெரிய பழுவேட்டரையரை மணந்தாள். கிழ வர் அவளுக்கு அடிமையானார். அவள் தூண்டுதலால் சுந்தர சோழரின் புதல்வர் களிடம் துவேஷம்கொண்டு அன்னவர்களின் பெரிய தந்தையான சிவஞான கண்டரா தித்தரின் புதல்வன் மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டத் திட்டம் தீட்டி, கடம்பூர் சம்புவரையர் மற்றும் பல சிற்றரசர்களின் ஆதரவையும் பெற்றார்.

மதுராந்தகனைச் சிவஞானச் செல்வனாக வளர்த்திருந்தாள் கண்டராதித்தரின் மனைவி செம்பியன் மாதேவி. அவனுக்கு அரசாளும் ஆசையை ஏற்படுத்தி, அதை வெறியாக வளரச் செய்தாள் நந்தினி.

சோழ நாட்டில் செல்வாக்கு மிகுந்த வேறு இரு சிற்றரசர்களான திருக்கோவலூர் மலைய மானும் கொடும்பாளூர் பெரிய வேளார் பூதிவிக்கிரம கேசரியும் சுந்தர சோழரின் புதல்வர்களுக்கே அரசுரிமை கிடைக்க வேண்டும் என்பதில் உறுதியாக இருந் தனர்.

சுந்தர சோழர், இராஜ்யம் தம்க்குப் பிறகு பிளவு படுவதை விரும்பாமல், தம் புதல் வர்களைத் தஞ்சைக்கு அழைத்துச் சமரச ஏற்பாடு செய்ய விரும்பினார். மதுராந் தகனுக்கே சிம்மாசனத்தை உரிமையாக்க அவர் தயாராயிருந்தபோதிலும் செம்பியன் மாதேவி அதற்கு ஒப்பவில்லை.

பழுவேட்டரையரின் ஆதிக்கத்திலிருந்த தஞ்சைக்குக் போக விரும்பாத ஆதித்த கரி காலன், தந்தையின் கட்டளையை ஏற்பதற்குப் பதில் அவரைக் காஞ்சியில் தான் கட்டுவித்த பொன் மாளிகையில் வந்து தங்கும்படி அழைத்து, நண்பன் வந்தியத்தேவன் மூல மாக ஓலை அனுப்பினான். தஞ்சை செல்லும் வழியில், தனது நண்பனும், கடம்பூர் சம்பு வரையர் மகனுமான கந்தமாறனின் இல் லத்தில் தங்கினான் வந்தியத்தேவன். அன் றிரவு ஆதித்த கரிகாலனுக்கெதிராகவும், மதுராந்தகனை மன்னனாக்கவும் அங்கு பல சிற்றரசர்கள் கூடிச் செய்துகொண்டிருந்த சதியைப் பற்றித் தெரிந்துகொண்டான். தஞ் சையை நோக்கிப் பயணத்தைத் தொடர்ந்தபோது சோழ நாட்டு முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயரின் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒற்றன் ஆழ்வார்க்கடியான் அவனுக்கு அறிமுகமானான்.

சோழ குலத்திடமும் சோழ நாட்டிடமும் மிகுந்த விசுவாசம் கொண்டிருந்தார் அநிருத் தர். நாட்டில் நடந்துகொண்டிருந்த சதித் திட்டங்கள் சோழ நாட்டின் மகோன்னத வளர்ச்சிக்குத் தடையாக இருக்கும் என்பதால் அவரும் சமரசத்தையே விரும்பினார்.

தஞ்சைக்கு ஓலை எடுத்துச் சென்ற வந்தியத்தேவன் குடந்தை ஜோதிடர் வீட்டில் குந்தவைப் பிராட்டியைச் சந்தித்தான். முதல் சந்திப்பிலேயே அவர்கள் ஒருவர்பால் ஒரு வர் அன்பு கொண்டனர். குந்தவை விருப் பப்படி, இலங்கையிலிருந்த அருள்மொழி வர்மனுக்கு ஓலை எடுத்துச் சென்றான் வந்தியத்தேவன். அதில் 'இராஜ்யத்துக்குப் பேரபாயம் வந்திருக்கிறது; உடனே

புறப்பட்டு வரவும்' என்று குந்தவை எழுதியிருந்தாள். இளவரசன் அருள்மொழி புறப்பட ஆயத்தமானபோது, அண்ணா ஆதித்த கரிகாலன் அவனைக் காஞ்சிக்கு உடனே வரச் சொல்லியிருப்பதாகப் பார்த்தி பேந்திரன் செய்தி கொண்டு வந்தான். சுந்தர சோழர் ஆணையின் பேரில் அவனைக் கைது செய்துகொண்டு போக வந்ததாகக் கூறிக் கொண்டு பழுவேட்டரையரின் ஆட்களும் வந்தார்கள்.

தந்தையின் கட்டளைப்படி நடப்பதே தன் முதல் கடமை என்று கருதி அருள்மொழி வர்மன் புறப்பட்டான். கப்பல் நடுக்கடலில் சூறாவளிக் காற்றில் சிக்கிக்கொண்டது. அச் சமயம், வந்தியத்தேவனைக் காப்பாற்ற அருள்மொழி கடலில் குதித்து விட்டான். இருவரும் பூங்குழலி என்னும் ஓடக்காரப் பெண்ணால் காப்பாற்றப்பட்டனர்.

இளவரசனுக்குக் குளிர் காய்ச்சல் கண்டுவிட, பூங்குழலியும் அவள் அத்தான் சேந்தன் அமுதனும் அவனை நாகைப் பட்டினம் சூடாமணி விஹாரத்தில் பத் திரமாகக் கொண்டு சேர்த்தார்கள்.

பொன்னியின் செல்வன் கடலில் மூழ்கி விட்டதாகப் பரவிய வதந்தியினால் சோழ நாடு முழுவதும் மக்களிடையே பெரும் கொந்தளிப்பு ஏற்பட்டது.

வந்தியத்தேவன், பழையாறையிலிருந்த குந்தவைப் பிராட்டிக்கு அருள்மொழி பற்றிய உண்மையைத் தெரிவித்தான். அச்சமயம், கடம்பூர் சம்புவரையர் மாளிகைக்கு விருந் துக்கு அழைக்கப்பட்டிருந்த கரிகாலனுக்கு ஏதேனும் ஆபத்து நிகழக்கூடும் என்று யூகித்த குந்தவை, கரிகாலன் அங்கு சென்று நந்தினி, பெரிய பழுவேட்டரையர் போன்ற வர்களைச் சந்திப்பதைத் தடுக்க வந்தியத் தேவனை அனுப்பினாள். தடுக்க முடியா விட்டால் ஆதித்த கரிகாலனுடன் இருந்து அவனைப் பாதுகாக்கும்படி கூறி அனுப் பினாள்.

குந்தவையும் கொடும்பாளூர் இளவரசி வானதியும் அருள்மொழி வர்மனை இரகசிய மாகச் சந்தித்தனர். அவன் இன்னும் சிறிது காலம் நாகை சூடாமணி விஹாரத்திலேயே இருப்பது நல்லது என்று குந்தவை கூறி னாள். வானதிக்குத் தன் பேரில் இருந்த காதலை அருள்மொழி வர்மன் புரிந்து கொண்டான்.

கடம்பூர் செல்லும் வழியில், திருப்புறம் பியம் பள்ளிப்படைக் காட்டில் வந்தியத் தேவன் மற்றொரு சதியைப் பற்றி அறிந்து கொண்டான். நந்தினியும் மந்திரவாதி ரவி தாஸனும் அவர்களுடைய கூட்டாளிகளும் ஒரு சிறுவனைச் சிம்மாசனத்தில் அமர்த்தி, அவனைச் சூழ்ந்து நின்று சபதம் எடுத்துக் கொண்டார்கள். அவனைப் பாண்டிய இள வரசன் என்று கருதுகிறார்கள் என்றும் சோழர் வசப்பட்ட பாண்டிய நாட்டை மீட்டு, மீண்டும் பாண்டிய சாம்ராஜ்யத்தை அவர்கள் ஸ்தாபிக்க எண்ணுகிறார்கள் என்றும் இதற் காக ஒரே சமயத்தில் பல கொலைகளைப் பல முனைகளில் அவர்கள் செய்ய எண்ணு கிறார்கள் என்றும் வந்தியத்தேவன் புரிந்து கொண்டான். அக்கூட்டத்தாரிடம் பிடிபட்ட வந்தியத்தேவனிடம் ஏனோ நந்தினி இரக் கம்கொண்டு அவனை ரவிதாஸனின் கொலை வாளிலிருந்து தப்புவித்தாள். கட்டுண்ட கிடந்த வந்தியத்தேவனை ஆழ்வார்க்கடியான் விடுவிக்க, இருவரும் கடம்பூர் நோக்கிச் சென்றார்கள்.

கந்தமாறனும் பார்த்திபேந்திரனும் உடன் வர, ஆதித்த கரிகாலன் கடம்பூர் நோக்கிச் சென்றான். தாத்தா மலையமானின் அறி வுரையை மீறி கடம்பூர் மாளிகைக்குச் செல்ல முடிவெடுத்தான். அங்கு நந்தினியைச் சந் தித்து மன்னிப்புக் கேட்க எண்ணினான்.

கடம்பூர் நோக்கிச் செல்கையில் ஆழ் வார்க்கடியானும் வந்தியத்தேவனும் ஐயனார் கோயில் ஒன்றினை அடைந்தனர். அக் கோயிலிலிருந்து ஒரு சுரங்கப் பாதை கடம் பூர் அரண்மனைக்குச் செல்வதை ஊகித்த வந்தியத்தேவன், அதன் வழியே கடம்பூர் அரண்மனையை அடைந்து, சம்புவரையர் மகள் மணிமேகலையைச் சந்தித்தான். அவ ளுக்குத் தன் பேரில் காதல் இருப்பதைப் புரிந்துகொண்டான். அரண்மனையிலிருந்து தப்பிச் சென்று மீண்டும் ஆழ்வார்க்கடி யானுடன் சேர்ந்து கொள்ள, இருவருமாகக் கடம்பூர் நோக்கி வந்து கொண்டிருந்த ஆதித்த கரிகாலன், கந்தமாறன், பார்த்திபேந் திரன் ஆகியோரை எதிர்கொள்ளப் புரவிகளில் புறப்பட்டனர்.

வந்தியத்தேவனைப் பார்த்ததும் அவ னைச் சிநேகத் துரோகி என்றும் ராஜத்

துரோகி என்றும் குற்றம் சாட்டினர் கந்தமாறனும் பார்த்திபேந்திரனும். நிகழவிருந்த கைகலப்பை ஆதித்த கரிகாலன் கடுமையான எச்சரிக்கை மூலம் அடக்கி விட்டு, நிகழ்ந்த உண்மைகள் குறித்து வந்தியத்தேவனை விசாரிக்கலானான்.

## பதினைந்தாம் அத்தியாயம்

# இராஜோபசாரம்

கடம்பூர் சம்புவரையர் மாளிகையின் முன் வாசல் அன்று மாலை கண்டறியாத அற்புதக் காட்சிகளைக் கண்டது. கண்ணுக்கெட்டிய தூரம் ஜனங்கள் திரள் திரளாக நெருக்கியடித்துக்கொண்டு நின்றார்கள். ஆண்களும் பெண்களும் சிறுவர்களும் சிறுமிகளும் வயோதிகர்களும் அக்கூட்டத்தில் இருந்தார்கள்.

திடமாகக் காலூன்றி நிற்கவும் முடியாத கிழவர்களும் கிழவிகளும் கோலூன்றி நின்றார்கள். தாங்கள் பிறரால் அங்குமிங்கும் தள்ளப்படுவதைப் பொருட்படுத்தாமல் அவர்கள் ஆதித்த கரிகாலரின் வீரத் திருமுகத்தைப் பார்க்கும் ஆர்வத்தினால் தள்ளாடிக்கொண்டு நின்றார்கள். சிறுவர் சிறுமியர் தாங்கள் ஜனக் கூட்டத்தின் நடுவே நசுக்கப்படுவதைப் பொருட்படுத்தாமல் முண்டியடித்துக்கொண்டு முன்னால் வர முயன்றுகொண்டிருந்தார்கள். யௌவனப் பெண்கள் தங்களுக்குள்ள இயற்கையான கூச்சத்தை அடியோடு கை விட்டு அன்னிய புருஷர்களின் கூட்டத்தினிடையே இடித்துப் பிடித்துக்கொண்டு முன்னால் வரப் பிரயத்தனம் செய்தார்கள். யௌவன புருஷர்களோ, அத்தகைய இளம் பெண்களைச் சிறிதும் இலட்சியம் செய்யாமல், அவர்களின் மீது கடைக்கண் பார்வையைக் கூடச் செலுத்தாமல், இளவரசரை நன்றாகப் பார்க்கக் கூடிய இடங்களைப் பிடிப்பதிலேயே கவனம் செலுத்தினார்கள். அவர்களில் பலர் கடம்பூர் மாளிகைக்கு எதிரிலும் பக்கங்களிலும் உள்ள மரங்களின் மீதெல்லாம் ஏறிக்கொண்டிருந்தார்கள். இன்னும் அநேகர் அந்த மாளிகையின் வெளிமதில் சுவரின் பேரிலும் ஏற முயன்று, அரண்மனைக் காவலர்களால் கீழே இழுத்துத் தள்ளப்பட்டார்கள்.



பச்சைக் குழந்தைகளை இடுப்பில் வைத்துக்கொண்டு இளம் பெண்கள் எத்தனையோ பேர் அக்கூட்டத்தில் பல இன்னல்களை அனுபவித்துக்கொண்டு நின்றார்கள். அழுத குழந்தைகளிடம் அவற்றின் தாய்மார்கள் "கண்ணே! அழாதே! வீரத் தமிழகத்தின் மகா வீராதி வீரர் – 'வீர பாண்டியன் தலை கொண்ட' ஆதித்த கரிகால சோழர் வரப் போகிறார்! அவ

ரைப் பார்க்கும் பேறு பெற்றால் நீயும் ஒருநாள் அவரைப் போல் வீரனா வாய்!'' என்று சொல்லிச் சமாதானப்படுத்த முயன்றார்கள். இம் மாதிரியே காதலர்கள் தங்கள் காதலிகளிடமும் தந்தைமார்கள் தங்கள் புதல்வர்களிடமும் ஆதித்த கரிகாலரைப் பற்றிச் சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

அந்த விதமாக ஆதித்த கரிகாலரின் வீரப் புகழ் நாடெங்கும் அக் காலத்தில் பரவியிருந்தது. பன்னிரண்டாவது பிராயத்தில் போர்க்களம் புகுந்து கையில் கத்தி எடுத்துப் பகைவர் பலரை வெட்டி வீழ்த்தியவரும், சேவூர்ப் போர்க்களத்தில் பாண்டிய சைன்யத்தை முறியடித்து, வீர பாண்டியன் பாலைவனத்துக்கு ஓடிப் பாறைக் குகையில் ஒளிந்து கொள்ளும்படி செய்தவரும், பத்தொன்பதாவது பிராயத்தில் வீர பாண்டியனுடைய ஆபத்துதவிப் படையைச் சின்னாபின்னம் செய்து அவன் ஒளிந்திருந்த இடத்தைக் கண்டுபிடித்து அவன் தலையை வெட்டி கொண்டு வந்தவருமான இளவரசரைப் பார்ப்பதற்கு யார்தான் ஆர்வம் கொள்ளாமலிருக்க முடியும்?



இத்தகைய வீர புருஷரைப் பற்றிச் சென்ற மூன்று நாலு வருஷ காலமாகப் பற்பல வதந்திகள் உலாவி வந்தன. ஆதித்த கரிகாலருக்கு யுவராஜ பட்டாபிஷேகம் ஆன பிறகு சுந்தர சோழ சக்கரவர்த்திக்கும் அவருக்கும் மனத்தாங்கல் வந்துவிட்டது என்றும், ஆதித்த கரிகாலர் தமக்குப் பின் பட்டத்துக்கு வருவதைச் சக்கரவர்த்தி விரும்பவில்லையென்றும் சிலர் சொன்னார்கள். முன்னொரு காலத்தில் சோழ நாட்டு இளவரசன் ஒருவன் காஞ்சியில் தனி ராஜ்யம் ஸ்தாபித்துப் பல்லவர் பெருங்குலத்தைத் தொடங்கி வைத்தது போல் ஆதித்த கரிகாலரும் காஞ்சியில் தனி அரசை ஏற்படுத்த விரும்புகிறார் என்றார்கள் சிலர். அவருடைய தம்பியாகிய அருள்மொழிவர்மனிடம் சக்கரவர்த்தி அதிக அன்பு காட்டிப் பட்சபாதகமாக நடந்து கொள்வதால் ஆதித்த கரிகாலருக்குக் கோபம் என்றார்கள் வேறு சிலர். இன்னும் சிலர் இதை அடியோடு மறுத்து, கரிகாலனையும் அருள்மொழியையும் போல் நேய பாவமுள்ள சகோதரர்கள் இருக்க முடியாது என்று சாதித்தார்கள். இளவரசருக்கு இன்னும் திருமணம் ஆகாமலிருந்தது பற்றியும் பலர் பலவாறு பேசினார்கள். அரச குலத்து மங்கை யாரையும் கரிகாலர் மணப்பதற்கு மறுதளித்து ஆலயபட்டர் மகளை மணந்து அரியாசனம் ஏற்றுவிக்க எண்ணியதுதான் தந்தைக்கும் மகனுக்கும் வேற்றுமை நேர்ந்த காரணம் என்றும் சிலர் சொன்னார்கள். ஆதித்த கரிகாலருக்குச் சித்தப்பிரமை என்றும், பாண்டிய நாட்டு மந்திரவாதிகள் சூனிய வித்தையினால் அவரை அரைப் பைத்தியமாக்கி விட்டார்கள் என்றும், அதனாலேயே சக்கரவர்த்திக்குப் பிறகு அவர் சோழ சிங்காதனம் ஏறுவதைச் சிற்றரசர்கள் விரும்பவில்லையென்றும் சிலர் பேசிக்கொண்டார்கள்.



எது எப்படியிருந்தாலும், அந்த மகா வீரரைப் பார்ப்பதற்கு ஜனங்கள் அளவில்லாத ஆர்வங் கொண்

டிருந்தார்கள். கடம்பூர் மாளிகைக்கு இளவரசர் கரிகாலர் விஜயம் செய்யப் போகிறார் என்ற செய்தி பரவிய திலிருந்தே சுற்றுப் பக்கங்களில் பெருங் கிளர்ச்சி உண்டாகியிருந்தது. அன்று மாலை வரப் போகிறார் என்று தெரிந்த பிறகு அக்கம் பக்கத்தில் இரண்டு காத தூரம் வரையில் இருந்த எல்லா ஊர் களிலிருந்தும் மக்கள் வந்து திரண்டு விட்டார்கள்.

அந்தக் கூட்டத்தை ஜன சமுத்திரம் என்று சொல்வது மிகப் பொருத்தமா யிருந்தது. ஆயிரமாயிரம் ஜனங்களின் கண்டங்களிலிருந்து எழுந்த பேச்சுக் குரல்கள் உருத் தெரியாத ஒரே இரைச் சலாகிச் சமுத்திர கோஷத்தைப் போலவே கேட்டுக்கொண்டிருந்தது. மாளிகையின் முன் வாசலுக்கு எதிரே இளவரசரும் அவருடைய பரிவாரங் களும் வருவதற்கு அரண்மனைக் காவலர்கள் வழி வகுத்து நின்றார்கள். பின்னாலிருந்த ஜனங்கள் வந்து மோதிய படியால் முன்னாலிருந்தவர்கள் நகர்ந்து வந்து அவ்வழியை அடைக்கப் பார்த் ததும், காவலர்களால் தள்ளப்பட்டு அவர்கள் மீண்டும் பின்னால் சென் றதுமான காட்சி, சமுத்திரக் கரையில் அலைகள் வந்து மோதி விட்டுப் பின் வாங்குவதையொத்திருந்தது.

மரத்தின் மேல் இருந்த ஒருவன் திடீ ரென்று "அதோ வருகிறார்கள்!" என்று கூவினான். "எங்கே? எங்கே?" என்று ஆயிரம் குரல்கள் எழுந்தன. ஒரு குதிரை அதிவேகமாக வந்தது. கூட்டத் தைச் சிறிதும் பொருட்படுத்தாமல் புகுந்து பாய்ந்து வந்தது. குதிரையின் காலடியில் சிக்கிக் கொள்ளா மலிருக்கும்படி ஜனங்கள் இருபுறமும் நெருக்கியடித்துக்கொண்டு நகர்ந்து கொண்டு வழி விட்டார்கள். "இளஞ் சம்புவரையன்!" என்று கத்தினார்கள். ஆம்; வந்தவன் கந்தமாறன்தான்! கூட் டத்திலிருந்தவர்கள் கேட்ட கேள்வி களுக்குப் பதில் சொல்லாமல் கந்த மாறன் வேகமாகக் குதிரையைச் செலுத்திக்கொண்டு போய்க் கோட்டை வாசல் அருகில் நிறுத்தி விட்டுக் கீழே குதித்தான். அங்கே நின்றுகொண்டிருந்த சம்புவரையரையும் பழுவேட்டரை யரையும் பார்த்து வணங்கி விட்டு, "இளவரசர் வருகிறார். ஆனால் சித்தம் அவ்வளவு சுவாதீனத்தில் இல்லை. திடீர், திடீர் என்று கோபம் வருகிறது. முன்னெச்சரிக்கை செய்வதற்காகவே வந்தேன். நல்லபடியாக இராஜோப சாரம் செய்து வரவேற்க வேண்டும். அவர் ஏதாவது தாறுமாறாகப் பேசினா லும் பதில் சொல்லாமலிருப்பது நல்லது!" என்றான். இவ்விதம் கூறி விட்டு அங்கே நிற்காமல் மேலே அண் ணாந்து பார்த்தான். முன் வாசல் கோபுரத்தின் மேன் மாடியில் அரண் மனைப் பெண்கள் காத்திருப்பது தெரிந்தது. உடனே கோட்டை வாசலில் புகுந்து உள்ளே சென்று, அங்கே ஒரு பக்கம் இருந்த மச்சுப் படிகளின் வழி யாக மேலே ஏறிச் சென்றான்.

பெண்கள் இருக்குமிடத்தை அடைந் ததும் கந்தமாறனுடைய கண்கள் மற்ற வர்களைப் பொருட்படுத்தாமல் நந்தினி தேவி இருக்குமிடத்தைத் தேடிக் கண்டு பிடித்தன. அவன் அருகில் சென்று, "தேவி! தங்கள் விருப்பத்தை நிறை வேற்றினேன். இளவரசரை அழைத்து வந்தேன். அதோ வந்துகொண் டிருக்கிறார். ஆனால் மதம் பிடித்த யானையைப் போல் இருக்கிறார். அவரை எப்படிச் சமாளிக்கப் போகி றோமோ, தெரியவில்லை!" என்றான்.

"ஐயா! அதைப் பற்றி என்ன கவலை? மதம் பிடித்த யானையை அடக்கி ஆள்வதற்குத் தங்கள் சகோ தரியின் இரு கண்களாகிற அங்குசங்கள் இருக்கின்றன!" என்றாள் நந்தினி.

மணிமேகலை "அக்கா! இது என்ன பேச்சு?" என்றாள்.

கந்தமாறன் "மணிமேகலை! பழுவூர் ராணி கூறுவதில் தவறு ஒன்றுமில் லையே! ஆதித்த கரிகாலரைப் போன்ற வீராதி வீரரைப் பதியாகப் பெறத் தவஞ்செய்ய வேண்டாமா?" என்றான்.

மணிமேகலை பதில் சொல்வதற்குள் நந்தினி குறுக்கிட்டு, "ஐயா! இளவர சருடன் இன்னும் யாரேனும் வரு

கிறார்களா?'' என்று கேட்டாள்.

''ஆம்; ஆம்! பார்த்திபேந்திர பல்லவனும் வந்தியத்தேவனும் வருகிறார்கள்...''

நந்தினி மணிமேகலையைக் குறிப்பாகப் பார்த்து விட்டு, 'எந்த வந்தியத்தேவன்? தங்களுடைய சிநேகிதன் என்று சொன்னீர்களே, அவனா?'' என்றாள்.

''ஆம்; என்னைப் பின்னாலிருந்து குத்திக் கொல்லப் பார்த்த அந்தப் பரம சிநேகிதன்தான். அவன் எங்கிருந்தோ எப்படியோ வந்து குதித்து வெள்ளாற்றங்கரையில் எங்களோடு சேர்ந்து கொண்டான். இளவரசருடைய தாட்சண்யத்துக்காகப் பார்த்தேன்; இல்லாவிடில் அங்கேயே அவனை என் கத்திக்கு இரையாக்கியிருப்பேன்!'' என்றான்.

மணிமேகலையின் முகம் சுருங்கிப் புருவங்கள் நெரிந்தன. ''அண்ணா! அவர் உங்கள் முதுகில் குத்தியது உண்மையாக இருக்கும் பட்சத்தில் அவரை எதற்காக இந்த மாளிகைக்குள் வர விட வேண்டும்?'' என்றாள்.

"கண்ணே! நீ பேசாமலிரு! அதெல்லாம் புருஷர்களின் விஷயம். நேற்றைக்குச் சண்டை போட்டுக் கொள்வார்கள்: இன்றைக்குக் கட்டிப் புரள்வார்கள்!'' என்றாள் நந்தினி.

கந்தமாறன் புன்னகை புரிந்து "அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. இளவரசரின் முகத்துக்காகப் பார்க்க வேண்டியதாயிற்று. ஓகோ! கூடை கூடையாகப் புஷ்பம் கொண்டு வந்து வைத்திருக்கிறீர்களே! நீங்கள் இங்கிருந்து பொழிகிற மலர் மழையினால் இளவரசரின் கோபம் தணிந்து அவர் சாந்தம் அடைந்து விடுவார்! அதோ வந்து விட்டார்கள்! நான் கீழே போகிறேன்!'' என்று சொல்லி விட்டு விடுவிடுவென்று மச்சுப் படிகளில் இறங்கிப் போனான்.

அந்த முன் வாசல் மேல் மாடத்திலிருந்து பார்க்கும்போது கண்ணுக்கெட்டிய தூரம் பரந்திருந்த ஜன சமுத்திரத்தின் நடுவே, சுழிக் காற்றினால் ஏற்படும் நீர்ச்சுழலைப் போல் ஓரிடத்தில் தோன்றிக் கொண்டிருந்தது. அந்தச் சுழலின் மத்தியில் அகப்பட்டுக் கொண்ட நாவாயைப் போல் மூன்று குதிரைகளும் அவற்றின் மேல் வந்த வீரர்களும் சில சமயம் தோன்றினார்கள். மறுகணம் ஜன சமுத்திரத்தின் பேரலைகளினால் அவர்கள் மறைக்கப் பட்டார்கள்.

அவ்விதம் ஏற்பட்ட சுழல் மேலும் மேலும் பிரயாணம் செய்து கோட்டையின் முன் வாசலை நெருங்கிக்கொண்டிருந்தது. கடைசியில், கோட்டை வாசலுக்கே வந்து விட்டது.

கோட்டை வாசலை அடைந்த மூன்று குதிரைகள் மீதும் வீற்றிருந்தவர்கள் ஆதித்த கரிகாலரும் பார்த்திபேந்திரனும் வந்தியத்தேவனுந்தான்.

அவர்களைத் தொடர்ந்து வந்த யானை குதிரை பரிவாரங்கள் எல்லாம் வெகு தூரம் பின்னாலேயே அந்தப் பெரிய ஜன சமுத்திரத்தினால் தடை செய்யப்பட்டு நின்றுவிட்டன.

குதிரைகள் வந்து மாளிகை வாசலில் நின்றதும், ஒரு பெரிய முழக்கம் எழுந்தது. இருபது பேரிகைகள், இருநூறு கொம்புகள், முந்நூறு தாரைகள்; ஐந்நூறு தம்பட்டங்களிலிருந்து எழுந்த அந்தப் பெரு முழக்கத்தைக் கேட்டு அந்த மாபெரும் ஜன சமுத்திரத்தின் பேரிரைச்சலும் ஒருவாறு அடங்கியது.

வாத்தியங்களின் பெரு முழக்கம் சிறிது நேரம் ஒலித்துவிட்டுச் சட்டென்று அடங்கி நின்றது.

அப்போது ஏற்பட்ட நிசப்தத்தில் கட்டியங் கூறுவோன் மேன்மாடத்தை அடுத்திருந்த ஒரு மேடை மீது நின்று இடி முழக்கக் குரலில் கூவினான்:-

"சூரிய வம்சத்திலே பிறந்த மனு மாந்தாதா, அந்த வம்சத்திலே புறாவுக்காக உடலை அறுத்துக் கொடுத்த சிபிச் சக்கரவர்த்தி, சிபிச் சக்கரவர்த்திக்குப் பின் தோன்றிய இராஜகேசரி, அவருடைய புதல்வர் பரகேசரி, பசுவுக்கு நியாயம் வழங்குவதற்காகப் புதல்வனைப் பலி கொடுத்த மனுநீதிச் சோழன், இமய மலையில் புலி இலச்சினை பொறித்த கரிகால் பெருவளத்தான், நலங்கிள்ளி,

நெடுங்கிள்ளி, பெருநற்கிள்ளி, குள முற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், குராப் பள்ளி துஞ்சிய கிள்ளிவளவன், எழுபத்திரண்டு சிவாலயம் எடுப்பித்த கோப்பெருஞ் சோழர், இவர்கள் வழி வழித் தோன்றிய தொண்ணூறும் ஆறும் புண் சுமந்த பழையாறை விஜயாலயச் சோழர், அவருடைய குமாரர் ஸஃயமலையிலிருந்து புகார் நகரம் வரையில் காவேரி நதி தீரத்தில் எண்பத்திரண்டு சிவாலயம் எடுப்பித்த ஆதித்த சோழர், அவருடைய குமாரர் இரட்டை மண்டலத்துக் கன்னர தேவன் படைகளை முறியடித்து ஆற்றூர்த் துஞ்சிய தேவர், அவருடைய குமாரர் ஈழம் முதல் சிட்புலி நாடு வரை ஒரு குடை நிழலில் ஆளும் பழையாறைப் பாரந்தக சுந்தர சோழ சக்கரவர்த்தி, அவருடைய மூத்த குமாரர் - கோப் பெருமகனார் - வடதிசை மாதண்ட நாயகர் - யுவராஜ சக்கரவர்த்தி - வீரபாண்டியன் தலைகொண்ட ஆதித்த கரிகால சோழர் விஜயம் செய்திருக்கிறார்! பராக்! பராக்! பராக்!" என்று அக் கட்டியங் கூறுவோன் கூறி முடித்ததும் மழை பெய்து இடி இடித்து ஓய்ந்தது போலிருந்தது.

உடனே அவன் அருகிலிருந்த இன்னொரு கட்டியக்காரன் "கொல்லிமலை மன்னன் - ஒரே அம்பில் சிங்கத்தையும் கரடியையும் மானையும் பன்றியையும் சேர்த்துத் துளைத்த வீரன் வல் வில் ஓரி - அவனுடைய பரம்பரையில் வழி வழித் தோன்றிய ராஜாதிராஜ ராஜமார்த்தாண்ட வீர கம்பீர சம்புவரையன் - சோழ சக்கரவர்த்தி குலத்திற்கு என்றும் துணைவன் - வீர நாராயண ஏரியின் காவலன் - ஐயாயிரம் வீரப் படையின் தண்ட நாயகன்- தனது சிறு அரண்மனையில் எழுந்தருளியிருக்குமாறு கோப் பெருமகனார் ஆதித்த கரிகால சோழரை மன மொழி மெய்களால் உவந்து வரவேற்கிறான்! சோழ குலத் தோன்றலின் வரவு நல்வரவு ஆகுக!" என்று கூவினான்.

அவன் அவ்விதம் பேரிடி போன்ற குரலில் கூறி முடித்ததும் மேல் மாடியிலிருந்து மலர் மாரி பொழிந்தது. ஆதித்த கரிகாலனும் வந்தியத்தேவனும் அண்ணாந்து பார்த்தார்கள். அங்கே இருந்த பல பெண்களின் சுந்தர முகங்களுக்கு நடுவில் வந்தியத்தேவனுக்கு மணிமேகலையின் மலர்ந்த புன்னகையுடன் கூடிய முகம் மட்டும் தெரிந்தது. வந்தியத்தேவனும் ஒருகணம் புன்முறுவல் செய்தான். உடனே தன் காரியம் எவ்வளவு தவறானது என்பதை உணர்ந்தவன் போல் வேறு திசையை நோக்கினான்.

அதே சமயத்தில் மேலே நோக்கிய ஆதித்த கரிகாலனின் முகத்தில்



முன்னை விடக் கடுகடுப்பு அதிகமாயிற்று. அவன் குதிரை மீதிருந்து கீழே குதித்தான்.

மற்ற இருவரும் குதிரை மீதிருந்து இறங்கினார்கள்.

இதற்குள் மறுபடியும் வாத்தியங்களின் கோஷம் முழங்கத் தொடங்கி விட்டது. சற்று அடங்கியிருந்த ஜன சமுத்திரத்தின் ஆரவாரப் பேரொலியும் மீண்டும் பொங்கி எழுந்து விட்டது.

விருந்தாளிகளும் அவர்களை வரவேற்பதற்கு வாசலில் நின்றவர்களும் கோட்டை வாசலுக்குள் புகுந்தார்கள். உடனே கோட்டை வாசலின் கதவுகள் படார், படார் என்று சாத்தப்பட்டன.

ஆதித்த கரிகாலன் திரும்பிப் பார்த்துவிட்டு, "ஏன் இவ்வளவு அவசரமாகக் கதவைச் சாத்துகிறார்கள்? தஞ்சைக் கோட்டையில் என் தந்தையைச் சிறை வைத்திருப்பது போல் என்னையும் இங்கே சிறை வைக்கப் போகிறீர்களா, என்ன? என்னுடன் வந்த பரிவாரங்கள் என்ன ஆவது?" என்று கேட்டான்.

இரு கிழவர்களும் சில கண நேரம் திகைத்துப் போய் நின்றார்கள்.

பழுவேட்டரையர் முதலில் சமாளித்துக் கொண்டு, "கோமகனே இந்தச் சோழ சாம்ராஜ்யத்திலுள்ள லட்சோப லட்சம் ஜனங்களின் அன்பு நிறைந்த உள்ளங்களே தங்களையும் தங்கள் தந்தையையும் சிறைப்படுத்தியிருக்கின்றன. தனியாகச் சிறை வைப்பது எதற்கு?" என்றார்.

"இளவரசே! தங்களுடைய தரிசனத்துக்காக வந்திருக்கும் பெருந் திரளான மக்கள் இந்தச் சிறிய குடிசைக்குள் புகுந்தால் என்ன ஆவது? அவர்கள் வெளியில் நிற்கும்போது அக்கம் பக்கமுள்ள தோப்புகள் எல்லாம் குரங்குகள் அழித்த மதுவனம் போல் ஆகி விட்டன. ஜனக் கூட்டம் கலைந்ததும் தங்களுடன் வந்த பரிவாரங்களை உள்ளே அழைத்து வருகிறோம். அதுவரையில் தங்களுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்ய இங்கே பணியாளர்கள் பலர் இருக்கிறார்கள்..." என்றார் சம்புவரையர்.

இச்சமயம் கோட்டை வெளி வாசலில் ஜனங்களின் ஆரவாரம் அதிகமானது போலக் கேட்டது.

கரிகாலன் கந்தமாறனிடம், "முன் வாசல் மேல் மாடிக்குப் போக வழி எங்கே?" என்று கேட்டான்.



கந்தமாறன் மச்சுப் படிகள் இருந்த இடத்தைச் சுட்டிக் காட்டியதும் கரிகாலன் அந்தப் பக்கம் நோக்கி விடு விடுவென்று நடந்து சென்றான். கந்தமாறனும், வந்தியத்தேவனும், பார்த்திபேந்திரனும் உடன் சென்றார்கள்.

சம்புவரையர், பழுவேட்டரையரைப் பார்த்து, "இது என்ன? வழியோடு போகிற சனியனை விலைக்கு வாங்கியது போல் வாங்கிக் கொண்டோமே? இவனுடைய மூளை சரியாயிருப்பதாகவே தோன்றவில்லையே? சின்னப் பிள்ளைகளின் பேச்சைக் கேட்டு இந்தக்



காரியத்தில் தலையிட்டோம்!'' என்றார்.

"அப்படி என்ன மோசம் வந்துவிடப் போகிறது? காரியம் நடந்தால் நடக்கட்டும்; நடக்காவிட்டால் போகட்டும்'' என்றார் பழுவேட்டரையர்.

''காரியத்தைப் பற்றியே நான் சொல்லவில்லை. நம் வீட்டில் இருக்கும் போது ஏதாவது ஏடாகூடமாக நடக்கக் கூடாது அல்லவா? நிமித்தம் ஒன்றும் சரியாக இல்லை. அவனோ மதம் பிடித்த யானையைப் போல் இருக்கிறான். முகத்தின் கடுகடுப்பையும் நாக்கில் விஷத்தையும் பார்த்தீர்கள் அல்லவா?''

''சில நாள் பல்லைக் கடித்துக் கொண்டு பொறுமையாயிருக்க வேண்டியதுதான். அந்தப் பல்லவன் பார்த்திபேந்திரன் அவனைக் கட்டுக்குள் வைத்திருக்க உதவியாயிருப்பான். இன்னொரு துஷ்டச் சிறுவன் பின்னோடு வந்திருக்கிறானே, அவனைத்தான் எனக்குப் பிடிக்கவில்லை. அவன் ஒற்றன் என்றுகூட எனக்குச் சந்தேகம். முன்னால் நாம் கூட்டம் போட்ட அன்றைக்குக் கூட அவன் இங்கு வந்திருந்தான் அல்லவா? நேற்று மாலை இந்தக் கோட்டைக்கு வெளியில் மரத்தின் மறைவில் நின்றிருந்தவனும் அவன்தான்!''

''அவன் என் மகனுடைய சிநேகிதன் அல்லவா? ஆகையால் அவனைப் பற்றிப் பயமில்லை. இப்போது எதற்காகப் பெண்கள் இருக்கும் இடத்துக்கு அவசரமாகப் போகிறார்கள்? நாமும் போவோமா?''

இச் சமயம், மச்சுப்படி வரையில்

போன பார்த்திபேந்திரன் திரும்பி வந்து, இரு பெரும் குறுநில மன்னர் பேசிக்கொண்டிருந்த இடத்தை அணுகினான். சம்புவரையர் கடைசியாகக் கூறிய வார்த்தைகள் அவன் காதில் விழுந்தன.

''ஐயா! இளவரசர் விஷயத்தில், உங்களுக்கு வேறு என்ன சந்தேகம் இருந்தாலும், பெண்கள் சம்பந்தமான சந்தேகம் மட்டும் வேண்டியதில்லை. பெண்களை அவர் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை...'' என்று சொன்னான்.

பழுவேட்டரையர் புன்னகையுடன், ''அப்படியானால் அவரை நாம் இங்கே அழைத்ததின் நோக்கம் எப்படி நிறைவேறும்?'' என்று கேட்டார்.

''அது சம்புவரையர் திருமகளின் அதிர்ஷ்டத்தையும் சோழ சாம்ராஜ்யத்தின் அதிர்ஷ்டத்தையும் பொறுத்தது.''

''பார்த்திபேந்திரா! மணிமேகலையின் அதிர்ஷ்டம் ஒரு புறம் இருக்கட்டும்! வரும்போதே எதற்காக இளவரசர் இவ்வளவு கடுகடுத்த முகத்துடன் வருகிறார்? எதற்காக இப்படி விஷமாகப் பேசுகிறார்? அவரை நீ எப்படியாவது இங்கிருந்து சமாதானமாக அழைத்துப் போனால் போதும் என்று தோன்றுகிறது!'' என்றார் சம்புவரையர்.

''வெள்ளாற்றங் கரை வரையில் இளவரசர் கமுகமாகவும் குதூகலமாகவும் வந்தார். பின்னர் இந்த வந்தியத்தேவனும் வைஷ்ணவன் ஒருவனும் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் ஏதோ சொல்லியிருக்க வேண்டும். அது முதல் இளவரசரின் குணம் மாறியிருக்கிறது...''

''நாங்களும் அப்படித்தான் நினைத்தோம். இப்போது என்ன செய்யலாம்? அந்தத் துஷ்டப் பையனும் உங்களோடு வந்திருக்கிறானே?''

''நீங்கள் கொஞ்சம் பொறுமையாயிருங்கள். நான் எல்லாம் சரிப்படுத்தி விடுகிறேன். அந்தப் பையனுடன் எனக்கும் ஒரு சண்டை இருக்கிறது. அதை நான் சமயம் பார்த்துத் தீர்த்துக் கொள்கிறேன்'' என்றான் பார்த்திபேந்திரன்.

கரிகாலனும் மற்ற இருவரும் முன்வாசல் மேன்மாடத்துக்குச் சென்றபோது அங்கிருந்த பெண்கள் திரும்பிப் படியில் இறங்கி வரும் சமயமாயிருந்தது.

கரிகாலன் கந்தமாறனைப் பார்த்து, ''நண்பனே! தாய்மார்களையெல்லாம் நமக்காக இங்கு வந்து காத்திருக்கும்படி செய்யலாமா? அது பெருந்தவறு. நாம் அல்லவா இவர்கள் இருக்குமிடம் சென்று நமது வணக்கத்தைச் செலுத்த வேண்டும்?'' என்று கூறிவிட்டுப் பெண்மணிகளுக்கு வணங்கி வழி விட்டு நின்றான். ஒவ்வொருவராக இறங்கியபோது கந்தமாறனிடம் யார் யார் என்று கேட்டுத் தெரிந்துகொண்டான். நந்தினியைப் பார்த்ததும் ''ஓ! பழுவூர் இளைய பாட்டி அல்லவா? உண்மையாகவே வந்திருக்கிறார்களா? மிகவும் சந்தோஷம்!'' என்றான். நந்தினி ஒன்றும் சொல்லாமல் அவனைத் தன் கூரிய கண்களால் பார்த்துவிட்டுச் சென்றாள். அப் பார்வையின் தீட்சண்யத்தினால் கரிகாலனுடைய உடம்பு சிறிது நடுங்கிற்று. மறுகணமே அவன் சமாளித்துக் கொண்டு, பின்னால் வந்த மணிமேகலையைப் பார்த்து, ''ஓகோ! இவள் உன் தங்கை மணிமேகலையாக இருக்க வேண்டும். சித்திரத்தில் எழுதிய கந்தர்வ கன்னிகையைப் போல் இருக்கிறாள். இவளுக்கு விரைவில் ஒரு நல்ல மாப்பிள்ளையைப் பார்த்துக் கலியாணம் பண்ணி வைக்க வேண்டும்!'' என்றான். மணிமேகலை வெட்கத்தினால் குழிந்த கன்னங்களுடன் வந்தியத்தேவனைக் கடைக் கண்ணால் பார்த்து விட்டு மடமடவென்று கீழே இறங்கினாள்.

பெண்கள் எல்லாரும் சென்ற பிறகு கரிகாலன் அந்த மேல் மாடத்தின் முகப்புக்குச் சென்று நின்றான். வாசலில் அப்போதுதான் கலையத் தொடங்கியிருந்த ஜனக் கூட்டத்தினிடையே மறுபடியும் பேராரவாரம் எழுந்தது. ஜனங்கள் திரும்பிக் கோட்டை வாசலண்டை வரத் தொடங்கினார்கள்.

அந்த மேல் மாடத்தையொட்டித்

தனியாக நீண்டு அமைந்திருந்த மேடையில் கட்டியங்கூறுவோன் நிற்பதைக் கரிகாலன் கவனித்தான். அவனைச் சமிக்ஞையினால் அருகே வரும்படி அழைத்தான். வந்தவுடன் ஜனங்களுக்குச் சில விஷயங்களை அறிவிக்கும்படி கூறினான். கட்டியங் கூறுவோன் திரும்பிச் சென்று பேரிகையைச் சில தடவை முழக்கினான். பின்னர், ஜனங்களைச் சமிக்ஞையினால் பேசாதிருக்கும்படி கேட்டுக்கொண்டான். ஆதித்த கரிகாலரின் விருதுகளில் சிலவற்றை விடுத்துச் சிலவற்றை மீண்டும் கூறிவிட்டு "அத்தகைய சோழர் குலக் கோமகனார் இந்தக் கடம்பூர் மாளிகையில் ஒரு வாரம் - பத்து நாட்கள் வரை தங்கியிருப்பார். சுற்றுப்புறமுள்ள ஊர்களுக்கெல்லாம் விஜயம் செய்வார். அப்போது அந்தந்த ஊர் மக்களை நேரில் கண்டு அவரவர் குறைகளையெல்லாம் கேட்டு அறிந்து கொள்வார்!" என்று கூவினான்.

அவ்வளவுதான்; இதுவரையில் அந்த ஜனக்கூட்டத்தில் எழுந்த ஆரவாரமெல்லாம் நிச்சப்தம் என்று சொல்லும்படியாக அவ்வளவு பெரிய பேரிரைச்சல் கிளம்பியது. குதூகலக் குரல்களும் வாழ்த்தொலிகளும் கரகோஷ ஓசையும் சேர்ந்து கலந்து எழுந்து சுற்றுப் பக்கம் வெகு தூரம் சென்று வீரநாராயண ஏரியிலிருந்து எழுபத்து நாலு கணவாய்களின் வழியாகப் பாய்ந்த தண்ணீர் வெள்ளத்தின் ஓசையையும் அமுங்கி விடும்படி செய்தன.

சம்புவரையரும் பழுவேட்டரையரும் பார்த்திபேந்திரனும் அவர்கள் முன்னால் நின்ற இடத்திலேயே நின்றுகொண்டிருந்தார்கள். ஆதித்த கரிகாலன் அவர்கள் நின்ற இடத்தை நெருங்கியதும், "பார்த்திபேந்திரா! ஏது நீ இங்கேயே நின்று விட்டாய்? இந்தக் கிழவர்களுடன் சேர்ந்து நீயும் சதியாலோசனை செய்யத் தொடங்கி விட்டாயா?" என்று கேட்டான்.

கிழவர்கள் இருவரும் திடுக்கிட்டுக் கரிகாலனுடைய முகத்தைப் பார்த்தார்கள். அவன் முகத்தில் புன்னகை தவழ்ந்துகொண்டிருந்தது.

சம்புவரையர் சிறிது சமாளித்துக்கொண்டு, "கோமகனே! சற்று முன் சிறை என்றீர்கள். இப்போது சதி என்கிறீர்கள். இந்தக் குடிசையில் தாங்கள் விருந்தாளியாகத் தங்கியிருக்கும்போது தங்களுக்கு அணுவளவேனும் தீங்கு நேராது என்று ஆணையிட்டுக் கூறுகிறேன். அவ்விதம் நேர்வதற்கு முன்னால் என் உடலிலிருந்து உயிர் பிரிந்து போயிருக்கும்!" என்றார்.

"ஐயா! எனக்குத் தீங்கு நேரும் என்று நான் அஞ்சுவதாக எண்ணினீர்களா? ஒரு லட்சம் பாண்டிய நாட்டுப் பகைவர்களின் மத்தியில் இருக்கும்போதே எனக்குத் தீங்கு நேரும் என்று நான் அஞ்சியதில்லை. என் அருமைச் சிநேகிதர்களின் மத்தியில் இருக்கும்போது அஞ்சுவானேன்? ஆனால் தங்களுடைய இந்த மாளிகையைக் குடிசை என்று மட்டும் கூற வேண்டாம்! ஆகா! இதைச் சுற்றியுள்ள மதில் சுவர்கள் எவ்வளவு உயரம்? எவ்வளவு கனம்? தஞ்சாவூர்க் கோட்டை மதிலை விடப் பெரியதாக வல்லவா இருக்கிறது? எந்தப் பகைவர்களை முன்னிட்டு இவ்வளவு பந்தோபஸ்தாகக் கோட்டை கட்டியிருக்கிறீர்கள்?" என்றான் கரிகாலன்.

"இளவரசே! எங்களுக்கென்று தனிப் பகைவர்கள் யாரும் இல்லை. சோழ குலத்தின் பகைவர்கள் எங்கள் பகைவர்கள்; சோழ குலத்தின் நண்பர்கள் எங்களுக்கும் நண்பர்கள்."

"தங்கள் வாக்குறுதி எனக்கு மிக்க மகிழ்ச்சி அளிக்கிறது. இதைத் தங்கள் குமாரன் கந்தமாறனிடமும் சொல்லி வையுங்கள். என்னுடைய நண்பனாகிய வாணர் குலத்து இளவரசனைக் கந்தமாறன் தன்னுடைய பகைவன் என்று கருதி வருகிறான். இது பெரும் பிழையல்லவா?" என்று ஆதித்த கரிகாலன் கூறியபோது, கந்தமாறன் தலையைக் குனிந்துகொண்டான்.

(தொடரும்)

# அக்னிசர்மா பக்கம்



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*
மனகல துணிச்சலும் தன்னம்பிக்கையும் இருக்கறதால எந்தக் காரியமானாலும் முடிச்சுக் காட்டிடுவீங்க. கலைத்துறை, நிர்வாகத் துறைகளில் உள்ளவங்களுக்கு நல்ல வளர்ச்சி தெரியும். பொறியியல், போலீஸ் துறையினருக்கும் வியாபாரிகளுக்கும் ஆதாயம் உறுதி. எல்லோருக்குமே கோயில்களுக்குப் போகிற சந்தர்ப்பங்களும் சுதாகாலட்சேபம் கேட்டு மன அமைதி பெறுகிற சந்தர்ப்பங்களும் கிடைக்கும். அரசியல்வாதிகள் உஷாராயிருக்கணும். பொருளாதார விஷயம் மட்டும் யாருக்குமே அமோகமாக இருக்காது.



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*
பத்துல செவ்வாயும் மூணுல ராகுவும் இருந்தாலே எதிர்ப்புகளை ஊதித் தள்ளிடலாம். உங்களுக்கும் அப்படித்தான். வெளிநாட்டுத் தொடர்பு ஆதாயம் தரும். வார நடுவுல சில பிரச்னைங்க தலைகாட்டினாலும் சுலபமா சால்வ் ஆயிடும். பெண்கள் கொஞ்சம் உஷாராயிருக்கணும். இல்லேன்னா உடல்நலன் பாதிக்கப்படலாம். செலவுகள் கட்டுங்கடங்காம இருக்கும்னாலும் பொருளாதார விஷயமும் சீராவே இருந்து வரும். புதியவர்கள் கிட்டயும் வேலைக்காரங்ககிட்டயும் உஷாரா யிருங்க. இல்லேன்னா தொல்லையாயிடும். குழந்தைகள் நலனிலும் கவனம் தேவை.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*
எந்த முயற்சியும் வீணாகாம பலன் கொடுக்கற வாரம் இது. எதிரிங்களெல்லாம் ஓடி ஒளியற மாதிரி எல்லாத் திட்டங்களிலும் ஜெயிச்சுக் காட்டுவீங்க. சமூக சேவையிலும் அக்கறை காட்டுவீங்க. அதனால உங்க கௌரவமும் ஓகோன்னு உயரும். வெளியூர் வெளிநாட்டுத் தொடர்புகளும் அனுகூலமாகவே இருக்கும். உத்தியோகஸ்தர்கள் பயணத்தால் அனுகூலம் பெறுவாங்க. வேலையில்லாதவங்களுக்கு ஆர்டர் தேடி வரும். பண விஷயத்தைப் பொறுத்தவரை சுமாரான வாரம்தான்.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*
எதிர்ப்புகள் இருக்கும்னாலும் எல்லாமே உங்க கட்டுப்பாட்டுக்குள்ளதாங்க இருக்கும். கவர்மெண்டுல காரியமாக வேண்டியிருந்தா, அளவோடதான் நடக்கும். சிலருக்குப் புரமோஷன் சான்ஸ் இருக்கு. தொழிலதிபர்களுக்கு வளர்ச்சி உறுதி. வியாபாரிங்க மாத்திரம் இந்த வாரம் அகலக் கால் வெச்சிடக்கூடாது. அரசியல்வாதிகளுக்குப் புகழ் கூடும். பொதுவா சொல்லணும்னா, மின்சாரம், நெருப்பு மாதிரியான விஷயங்களில் எச்சரிக்கை அவசியம். பயணம் தவிர்க்கணும். எதிலும் பதற்றம் கூடாது. கூடப் பிறந்தவங்களோடு மனஸ்தாபம் வர சான்ஸ் இருக்கு.

**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*
மனகல துணிச்சலும் தெளிவும் தன்னம்பிக்கையும் அதிகரிக்கும். மத்தவங்க பாராட்டும்படியான சில சாதனைகளைச் செய்வீங்க. விருந்து, உல்லாசம்னு ஜாலியா இருப்பீங்க. பண விஷயமும் திருப்திகரமாவே இருக்கும். கொடுக்கல், வாங்கல், ஸ்பெகுலேஷன் விஷயங்களிலும் ஆதாயம் இருக்கும். சிலருக்கு அதிர்ஷ்ட வாய்ப்புகளும் கூடி வரும். எல்லாத் துறையினருக்குமே இந்த வாரம் நல்ல வாரம்னாலும் கணவன் - மனைவிக்குள்ள விட்டுக் கொடுத்துப் போகணும். இல்லேன்னா அனாவசிய சண்டைதான் மிஞ்சும்.

**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*
இந்த வாரம் நீங்க, சில துணிச்சலான காரியங்களில் ஈடுபட்டு ஜெயிச்சுக் காட்டுவீங்க. போட்டி, பந்தயம், வழக்கு- விவகாரங்களிலும் சாதகமான பலன்களே. கலை இலக்கியத் துறையினருக்குப் புகழ் கூடும்! இளைஞர்களும் இளைஞிகளும் காதல் வசப்பட வாய்ப்பிருக்கு. வெளிநாட்டுத் தொடர்பும் பலன் தரும். ஆனாலும் உடல்நலனில் கவனம் இல்லேன்னா பிரச்னையாயிடும். பயணம் கூடாது. அவ்வப்போது சில குழப்பங்களும் சஞ்சலங்களும் வரத்தான் செய்யும். நிதானமும் அவசியம்.

**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*
உங்ககிட்ட திறமையில்லையா,- புத்திசாலித்தனம் இல்லையா, வசீகரம்தான் இல்லையா! இவை போதாதா சாதனைகளைச் செய்ய. சும்மா கலக்குவீங்க. குடும்பத்துலயும் சந்தோஷம் பொங்கும். சுபகாரியங்களில் பங்கு பெறுகிற வாய்ப்புகள் கிடைக்கும். புது காண்ட்ராக்ட் மாதிரியான விஷயங்களில் முன்னேற்றம் தெரியும். சிலருக்குத் திடீர் அதிர்ஷ்டத்துக்கும் சான்ஸ் இருக்கு. புதுப் புது பொருள்களையும் வாங்கித் தள்ளுவீங்க. உத்தியோகஸ்

# நக்குமென்பர்; நக்கும்!

தர்களுக்குப் புரமோஷனும் இங்க்ரிமெண்ட்டும் உறுதி. ஆரோக்கியத்தில் அதிக கவனம் தேவை.



**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

இளைஞர்களும் இளைஞிகளும் சந்தோஷப்படற மாதிரி, குடும்பத்தில் சுபகாரியங்களுக்கான பேச்சு அடிபடும். பொருளாதார விஷயம் தாராளமாவே இருக்கறதால புதுப் பொருள்களின் வரவும் அதிகரிக்கும். வியாபாரிகளுக்கும் உத்தியோகஸ்தர்களுக்கும் ஆதாயம்னா, கலைத் துறையினருக்குப் புகழ் உறுதி. குழந்தைகள் நலனிலும் தாய் தந்தையர் நலனிலும் அக்கறை செலுத்தணும்.



**தனுசு ராசிக்காரரான ஓவியர் செல்லப்பனுக்கு (செல்லம்) சாது தரிசனம் கிடைக்கப் போவுதாம்!**

சிக்கனம் அவசியம். இல்லேன்னா அலைச்சலோடு அனாவசிய செலவுகளும் செய்ய வேண்டியிருக்கும்.



**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

குடும்பத்தில் இதுவரைக்கும் இருந்து வந்த பிரச்னைகளும் சலசலப்புகளும் இந்த வாரம் ஜூட் விட்டுட்டு ஓடிடும். சாதனைகளைச் செஞ்சு பாராட்டு மழைல நனைவீங்க. போட்டி – பந்தயம், வழக்கு விவகாரங்களிலும் வெற்றி காண்பீங்க. சாதுக்களின் தரிசனத்துக்கு சான்ஸ் இருக்கு. கலைத் துறையினருக்கு ஆதாயமான வாரம்னா, தொழில் – நிர்வாகத் துறையினருக்கு வெற்றி வாரம். உத்தியோகஸ்தர்களுக்கு ஆபீஸ்ல புரமோஷன்னா, சிலருக்கு அப்பா, அம்மா, தாத்தா, பாட்டிங்கற புரமோஷன் கிடைக்கும்.



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

முக்கியமான கிரகங்கள் ஊடல் பண்றதால சின்னச் சின்ன பிரச்னைகள் வரத்தான் செய்யும். பக்குவமாகச் சமாளிக்கணும். மனசையும் தளர விட்டுடக் கூடாது. பேச்சுல நிதானம் காட்டுங்க. மறந்தும் சூடான வார்த்தைகளைப் பேசிடாதீங்க. வம்பளக்கிற இடங்களில் நிக்கக் கூடச் செய்யாதீங்க. யார்கிட்டயும் மனசைத் திறந்து வெளிப்படையா பழகாதீங்க. பயணத்தில் எச்சரிக்கை வேணும். ஆடம்பரச் செலவுகள் கூடவே கூடாது. உடல் ஆரோக்கியத்திலும் கவனம் வையுங்க. மேலதிகாரிகள் கிட்டயும் பணிவா நடந்துக்கங்க.



**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்களோட திட்டங்களுக்குச் செயல் வடிவம் கிடைக்கிற வாரம் இது. கவர்மெண்ட் காரியங்களில் கூட அனுகூலம் கிடைக்கும். தந்தை வழி சொத்து விஷயங்களில் உங்களுக்குச் சாதகமான தீர்வுகள் கிடைக்கும். விஞ்ஞானிகள் நூதனக் கண்டுபிடிப்புகள் மூலம் பாராட்டும் புகழும் அடைகிற சான்ஸ் இருக்கு. பயணத்தால் பலன் உண்டுன்னாலும், பயணத்தின் போது எச்சரிக்கை அவசியம். புனித காரியங்களில் ஈடுபடுவீங்க. வருமானமும் அதிகரிக்கும். ஆனாலும் கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை தேவை.



**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

உங்களோட எண்ணங்களும் திட்டங்களும் சுலபமா நிறைவேறுகிற வாரம் இது. குடும்பத்தில் பொங்கலோடு சேர்ந்து சந்தோஷமும் பொங்கும். பணப் புழக்கம் தாராளமாவே இருக்கும். விருந்து – கேளிக்கைகளுக்கும் பஞ்சமிருக்காது. உத்தியோகஸ்தர்களுக்குப் புரமோஷனும் உறுதி. வெளிநாட்டுத் தொடர்பும் நன்மை தரும். புதிய முயற்சிகள் கைகூடும். செலவுகள் அதிகமா இருக்கும்னாலும் அது குடும்ப நலனுக்கானதாகவோ, வெளிநாட்டுப் பயணத்துக்கானதாவோதான் இருக்கும். உடன்பிறப்புகளால சில பிரச்னைகளும் செலவுகளும் வரலாம். உஷாரா இருங்க. ●

சிரிக்க முயன்றார். முகம் முன்னிலும் விகாரமாய் இருந்தது. பரிதவிப்பான முகம்.

அரசாங்கச் செலவில் புகைப் படம் எடுத்து ரேஷன் கார்டில் ஒட்ட நாங்கள் வேலைக்கு அமர்த்தப் பட்டிருந்தோம். வீடு வீடாய்ப் போய் மனிதர்களைத் திரட்டி பொது இடத்தில் நிற்க வைத்துப் படம் எடுக்க வேண்டியிருந்தது.

'சாமி காப்பி சாப்பிடுங்க, பாலில்லாத காப்பிதான் நாங்க சாப்பிடறது...'

''வேணாம் வேணாம் நாளியாவுது... வாங்க வரிசையா. சீக்கிரம்.''

கிழவனுக்கு முதலில் தடுப்பூசி போட நாங்கள் வந்திருப்பதாகப் பயம். உள்ளே ஒளிந்து கொண்டான். பிறகு புகைப்படம் எடுக்கப் பிடிவாதமாய் மறுத்தான். 'ஐய ஆயுசு கொறஞ்சிரும்ல. அதெல்லா ஒண்ணும் வேணா' என்றான். 'இந்த வயசுல பெருசு ஆயுசப் பத்திக் கவலைப்படுது பாரு' என்று வேடிக்கை பார்க்கிற ஜனத்தில் ஒருத்தி சொல்ல, கூட்டமே கொல்லென்று சிரித்தது.

நெடிதுயர்ந்த சட்டையணியாத தேகம் அப்படியே பணிந்து சுருண்டது. சின்னஞ்சிறு புகைப்படப் பெட்டியைப் பார்த்து அப்படி மிரளவும் தயங்கவும் என்ன இருக்கிறது என்பது புரியவில்லை. அதன் முன்னே

நேராய் நிற்கவே அவன் திண்டாடினான். கூசினான்.

'பெருசு சட்டை கிட்டை போட்டுக்கிறதுதானே?'

'சட்டை இல்லய்யா' என்றான்.

அத்தனை பேர் முன்னால் நிற்பதே கூச்சம். அந்தக் கைகளை என்ன செய்வது என்கிற அடுத்தக் கேள்வி.

கைகளை மடித்துக் கட்டிக் கொள்ளலாம். கும்பிடலாம். சட்டை இருந்தால் அதன் பட்டன்களை நிமிண்டலாம். ஸ்டுடியோவிலானால் அருகே வைக்கப்பட்டிருக்கிற பூ சாடி வைத்த உயரத் திண்டில் ஹாயாக முட்டியை அழுத்திக் கொள்ளலாம். இப்போது கைகள் வெட்டவெளிக்கு வந்து விட்ட பாம்பெனத் தவித்தன. நெளிந்து உடலை முறுக்கிக் கொண்டன.

எனக்கு எரிச்சலாய் இருந்தது. "நேரா நில்லுங்க. உங்க ஓராளுக்கு இவ்ள நேரமானா நாங்க எப்ப எல்லாரையும் படம் எடுத்து எப்ப வீட்டுக்குப் போறது?"

அடுத்து அந்தக் கழுத்து. தலையை நேராக அதன் மீது நிறுத்த அடிக்கடி நான் மூடிய காமெராவில் இருந்து வெளியே வர வேண்டியிருந்தது. அதற்குள் ஒருத்தி, 'அவரு பெருசைப் பார்த்துப் பயந்து அந்த மூடிய துணிக்குள்ளாற ஒளிஞ்சிக்கறாரு' என்கிறாள் சப்தமாய். திரும்பிப் பார்த்ததில் எல்லாரும் சிரிப்படக்கி விறைப்பானார்கள்.

'ரைட். காமெராவையே பாருங்க ஐயா' என்றேன் நான். அந்தப் பார்வை. அதன் பயம். எனக்கு அது வேடிக்கையாய் இருந்தது. பரிதாபமான பார்வை. முன் முள்ளாய்த் தாடி முளைத்த முகம். வாயும் மூக்கும் கண்ணோரங்களும் நீர் கோத்துக் கிடந்தன. துடைக்கச் சொல்லலாம். அதற்கும் நேரமெடுக்கும்... வேண்டாம்.

**எஸ். சங்கரநாராயணன்**

'கொஞ்சம் சிரிங்கய்யா...'

சிரிக்க முயன்றான். முகம் முன்னிலும் விகாரமாய் இருந்தது. பரிதவிப்பான முகம். அதுவே இயல்பானதாகவும், சிரிப்பது விநோதத் தன்மையுடனும் இருப்பதாகப்பட்டது. சிரிப்பது என்றால் என்ன என்று அவனுக்குப் பாடம் சொல்லித் தர வேண்டியிருந்தது. அத்தனை கூட்டத்தின் முன் தான் விசாரணைக்குப் போல நிறுத்தி வைக்கப்பட்டிருப்பதான பிரமையில், படபடப்பில் நின்றிருந்தான். வெட்ட வெளிக்கு வந்து விட்ட பாம்பு!

'ஐயா கொஞ்சம் போலச் சிரியுங்க... சிரிச்சா பல் ஒண்ணும் கொட்டிறாது' என நான் உற்சாகப்படுத்த முனைந்தேன்.

'பல் ஏற்கெனவே கொட்டியாச்சு' என்றான் கிழவன்.

'பின்னென்ன, தைரியமாச் சிரிங்க!'

அவனைத் தவிர கூட்டமே சிரித்தது.

'நான் சிரிச்சதே இல்லய்யா...' என்றான் கிழவன்.

# பாம்புகள்

# திருப்பதியே

"இப்போது நினைத்தால் கூட ஆச்சரியமாக இருக்கு!" என்கிறார் திரு. 'ஜெய் மாஹி' ஜெயராமன். மத்திய தொழில் பாதுகாப்புத் துறையில் பணிபுரிந்த அவர், அதை ராஜினாமா செய்துவிட்டு, **'ஜெய்மாஹி மேரேஜ் கேட்டரிங் ஸர்வீஸ்'** ஆரம்பித்தார். சென்னையில் தொடங்கப்பட்ட ஜெய்மாஹி மேரேஜ் கேட்டரிங் சர்வீஸ் கடந்த பன்னிரெண்டு ஆண்டுகளாக வெற்றிநடை போட்டு வருகிறது.

உறுதி, நேர்மை, விடாமுயற்சி இம்மூன்றும் உள்ளவர்களுக்குத்தான் கடவுளின் அருள் அதிகமாகக் கிடைக்கும். அது திரு. ஜெயராமனுக்குக் கிடைத்திருக்கிறது. அவரது இந்த வெற்றிக்கதை பிறருக்கும் வழிகாட்டியும் கூட!

"சிறு வயதிலிருந்தே ஏதாவது ஒரு சொந்தத் தொழில் செய்ய வேண்டும் என்ற எண்ணம் என் உள்ளத்தில் இருந்து கொண்டே இருந்தது. நான் மத்திய தொழில் பாதுகாப்புத் துறையில் பணிபுரியும்போது வீட்டில் எனக்கு பெண் தேடும் படலம் நடந்தது. யாரும் போலீஸ் காரனுக்குப் பெண் தர முன் வரவில்லை. நம்ம வாழ்க்கைக்குப் பயன்படாத வேலை தேவையில்லை என்று ராஜினாமா செய்துவிட்டு, மேற்கு மாம்பலத்தில் தேங்காய் மண்டி வியாபாரத்தைத் தொடங்கினேன். ஆரம்ப காலத்தில் வியாபாரத்தில் பலத்த நஷ்டம். அதனால் சிறிதும் மனம் தளராமல் கூடவே இன்னொரு தொழிலையும் செய்து பார்த்தால் என்ன என்று நினைத்தேன். சமையல் கலையில் ஜாம்பவான்களான கிருஷ்ணமூர்த்தி, என் குரு அப்பள ராமையர், நண்பர் துரை போன்றவர்களுடன் சமையல் கலையில் உள்ள நுணுக்கங்களை நன்றாகத் தெரிந்து கொண்டேன். என் கடைக்கு அருகில் வசிக்கும் தாசில்தார் கல்யாண சுந்தரம் அவர்கள் தான் எனக்கு தைரியம் கொடுத்து முதல் முறையாக வாய்ப்புக் கொடுத்தார். அவர்கள் இல்லத் திருமணத்தை திருப்பதியில் சிறப்பாக நடத்தித் தந்தேன். அதுவே என் வாழ்வில் மிகப் பெரிய திருப்பு முனையாக அமைந்தது.

"அதன் பிறகும் மூன்று மாதம் தொழிலில் நஷ்டம் தான். ஆனாலும் சோர்ந்து விடாமல், மேற்கு மாம்பலத்தில் உள்ள இல்லங்களுக்கு மளிகைப் பொருள்களை சப்ளை செய்கிற இன்னொரு புதிய தொழிலையும் செய்ய ஆரம்பித்தேன். கொஞ்சம் கொஞ்சமாக கேட்டரிங் தொழிலில் முன்னேற்றம் ஏற்பட்டதால் முழு நேர சமையல் தொழிலுக்கே மாறி விட்டேன்.



• 'ஜெய்மாஹி' ஜெயராமன்

"நாங்கள் வாடிக்கையாளர்களுடைய விருப்பத்திற்குத் தகுந்தாற் போல் சேவை செய்து தருவதால் எங்களுக்கு ஆதரவும் அவர்களின் மூலம் புதிய வாடிக்கையாளர்களும் கிடைக்கிறார்கள். திருமணத்திற்குத் தேவையான சீர் பட்சணங்கள், வீடியோ, போட்டோ, சாப்பாடு, கோலம் போடுவது முதல் கட்டு சாதம் வரை அனைத்துக்கும் பொறுப்பேற்று நடத்தித் தரும் கல்யாணக் கான்ட்ராக்டர்கள் நிறையப் பேர் இருந்தாலும், நாங்கள் வியாபார ரீதியாக மட்டும் திருமணத்தை நடத்தித் தராமல், எங்கள் வீட்டு திருமணம் போல் மிகுந்த ஈடுபாட்டுடன் சிறப்பாக நடத்திக் கொடுக்கிறோம். இதுவரை நாங்கள் சுமார் 700 சுப நிகழ்ச்சிகளைச் சிறப்பாக நடத்திக் கொடுத்திருக்கிறோம். மங்கையர் மலர் ஆசிரியர் மஞ்சுளா ரமேஷ், எழுத்தாளர் அனுராதா ரமணன், நெல்லை ஜெபமணி, நடிகர் ஜெயராமன் போன்ற வி.ஐ.பி.கள் இல்லத்தில் நடைபெற்ற சுப நிகழ்ச்சிகளுக்கெல்லாம் உணவு தயாரித்துக் கொடுத்திருக்கிறோம். தொடர்ந்து ஆறாவது ஆண்டாக 'நங்க நல்லூரர் தியாக பிரம்ம சபா'வில் நடைபெறும் இசை நிகழ்ச்சிக்கும் நாங்கள் கேட்டரிங் ஸர்வீஸ் செய்து தருகிறோம்.

"எங்கள் நிறுவனத்தின் மிக முக்கிய அம்சம், எங்களிடம் பணிபுரியும் ஊழியர்

களுக்குப் காப்பீட்டுத் தொகை கட்டி வருவது. இதே போல் நான்கு வருடத்திற்கு ஒரு முறை ஊழியர்கள் அனைவரும் நிறுவனச் செலவில் சுற்றுலா சென்று வருகிறார்கள்.

"வாழ்க்கையில் கூட்டுக் குடித்தனம் நல்லதா, தனிக் குடித்தனம் நல்லதா என்று என்னைக் கேட்டால் கூட்டுக் குடித்தனமே சிறந்தது என்பேன். ஏனென்றால் நான் இன்றைக்கு இந்த கேட்டரிங் சர்வீஸை சிறப்பாக நடத்தி வருவதற்குக் காரணம் கூட்டுக் குடும்பத்தின் முயற்சியே ஆகும். என் தாய், தாய் மாமன், மனைவி, மைத்துனர் வெங்கட்ராமையயார், நண்பர் ஜெ. துரை, மானேஜர் சட்டநாதன், சுவாமிநாதன், 'தம்பி உடையான் படைக்கு அஞ்சான்' என்ற வார்த்தைக்கு ஏற்ப என் தம்பி விசுவநாதன் போன்ற இவர்களுடைய ஒத்துழைப்பு இருந்தது. இதற்கும் மேல் சக சமையற் கலைஞர்களின் ஒத்துழைப்பும்தான் என்னை இவ்வளவு சிறப்பாக வைத்துக் கொண்டிருக்கிறது.

''வருடந்தோறும் சிவராத்திரியில் வரும் பால பெரிவாளின் ஜெயந்தியை அயோத்தியா மண்டபத்தில் 'வைதீக பரிமள சபா' நடத்தி வருகிறது. அதற்கு நாங்கள் விளம்பர உதவி செய்கிறோம். கும்பகோணத்திற்கு அருகில் உள்ள கூகூர் என்ற ஊரில் திரௌபதி அம்மனுக்கு ஆடி மாதத்தில் நடைபெறும் உற்சவத்தில் பால் குடம், அன்னதானம் மிக விமரிசையாகச் செய்கிறோம். கார்கில் போரில் வீர மரணம் அடைந்த ராணுவ வீரர்களின் குடும்ப நல நிதிக்கு எங்கள் நிறுவனத்தின் சார்பாக சிறு தொகையான ரூ.5,000 மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களிடம் வழங்கியுள்ளோம்.''

1976ஆம் ஆண்டு தென்னிந்திய சமையல் கலைஞர்கள் முன்னேற்ற சங்கம் நிறுவப்பட்டது. இந்தச் சங்கத்தில் 10,000 கலைஞர்கள் உறுப்பினர்களாக உள்ளனர். திரு. ஜெ. துரை அவர்கள் தலைவராகவும் திரு. 'ஜெய்மாஹி' ஜெயராமன் உப தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர். இச்சங்கத்தின் அலுவலகம் சைதாப்பேட்டையில் உள்ள நூர்ஜஹான் தியேட்டரின் எதிரில் உள்ள மஹாலக்ஷ்மி பிளாட்டில் உள்ளது.

# திருப்புமுனை!



''வாழ்க்கையில் பல சோதனைகள் வந்தாலும் சிறிதும் மனம் தளராமல் அவற்றை நாம் எதிர்கொண்டால் அதுவே நமக்கு சாதனைகளை உருவாக்கித் தரும் என்று கூறும் திரு. 'ஜெய்மாஹி'ஜெயராமன், ''இந்த நூற்றாண்டின் பத்திரிகை உலகில் மிகச் சிறந்த மனிதர் அமரர் கல்கி என்று சொன்னால் மிகையாகாது; கல்கி வாசகர்கள் 16.1.2000 'கல்கி' இதழைக் கொண்டு வந்து ஆர்டர் கொடுத்தால் 5% தள்ளுபடி தருகிறோம்'' என்கிறார்!

# 19

அன்று காலை உணவைக் கொறித்து விட்டு அக்காவும் தம்பியும் சாவகாச மாய் பேசிக் கொண் டிருந்தார்கள். அப் போது கோபக்ஸ் அவசரமாய் அவர் களைத் தாண்டிப் போனது. காலையி லிருந்தே கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். அதன் செய்கைகள் சற்று விசித்திரமாகப்பட்டன. காரணமின்றி குறுக்கும் நெடுக்குமாய் நடந்து கொண்டிருந் தது அடிக்கடி தலையைக் கவிழ்த்துக் கொள்ள, நின்றவாக்கிலேயே அதன் செயல் கள் ஸ்தம்பித்து விடுகின்றன. இருந்தாற் போலிருந்து சுறுசுறுப்பாய் நடக்கிறது. அந்த வேகத்தில் கண்டதற்கெல்லாம் எரிந்து விழு கிறது. தனக்குத்தானே எதையோ பேசுகிறது.

"என்னவாயிற்று? உன்னே தலையில் நியு ரான் நெட் ஒர்க் முடிச்சுகளில் ஏதும் சிக் கல் ஏற்பட்டு விட்டதா?"

"கோபக்ஸ்! நில். என்ன கஷ்டம் உனக்கு? எங்களிடம் சொல். இல்லை இதுவும் ரகசி யமா?"

ஒரு நிமிடம் கண்களை உருட்டி இருவரையும் பார்த்தது.

"சொல்வேன். சொல்வேன். சொல்லித் தான ஆக வேண்டும். இது நான் எதிர் பாராத விபத்து" – சொல்லி விட்டு மானிட்டர் போர்டில் எதையோ துருவ ஆரம்பித்தது.

"என்னாச்சு கோபக்ஸ்?" – கிலியுடன் ரஷ்ஷு.

"கொஞ்ச நேரமா

கும். சிலவற்றை இன்னும் நான் உறுதிப் படுத்திக் கொள்ள வேண்டியதிருக்கிறது" – அவசரமாய் எதையோ திருகியது.

"விடு ரஷ்ஷு! ராக்கெட்டில் ஏதும் கோளாறாயிருக்கலாம், அல்லது முன்பு நடந்த மாதிரி திசை மாறிப் போயிருக்கலாம். அதுவே சரிசெய்து விடும். ஆனாலும் இப்ப சின்னச் சின்ன விஷயத்துக்கெல்லாம் கூட இது பயப்படுகிறது. அப்படித்தானே கோபக்ஸ்?"

"என்னவோ போபியா அதுக்கு. சில்லு கள் வீக் ஆகியிருக்கலாம்."

எதற்கும் பதிலைச் சொல்லாமல் இருக் கையில் போய் தலையைக் கவிழ்த்துக் கொண்டது.

"சே! பாவம் நமக்காக எத்தனைப் பாடு இதற்கு? இயந்திரம்தான், யோசித்துப் பார்த் தால் நம் சாதனைகள் எவையும் இதன் உழைப்பிற்கு முன் தூசு காணாது."

"பூமிக்கு இன்னும் எவ்வளவு தூரத்தி லிருக்கிறோம் கோபக்ஸ்?"

"ஒரு லட்சத்துப் பதினாறாயிரம் கிலோ மீட்டர்கள். சீக்கிரமே பூமியை அடைந்து விடலாம். நம் அப்பா! தி கிரேட் ஜீனியஸ், நமக்கு என்னவாயிற்றோ என்று பேதலித்துப் போயிருப்பார்."

"ரஷ்ஷு! இன்னுமொரு பெரிய போராட்டம் நமக்குக் கீழே காத்துக்

## உயிர்களைத் தேடித் தேடி...

கொண்டிருக்கிறது என்று நினைக்கின்றேன்" – சூர்யா சற்றுக் கவலையுடன் தெரிந்தாள்.

"ஆமாம்! கீழே பாராட்டுகளும், பதவி சுகங்களும் நிறைய நமக்குக் கிடைக்கும் என்று பேசிக் கொண்டிருக்கிறோமே யொழிய உள்ளே ஒரு மூலையில் நெருடு கிறது. சட்டவிரோதமாய் வந்த உனக்கு என்ன தண்டனை காத்திருக்கிறதோ



தெரியவில்லை. இரண்டாவதாக ஒரு வருடத்திற்கு மேலாக பூமியுடன் தொடர்பின்றி இருக்கிறோம். இடையில் அங்கே என்னென்ன மாற்றங்கள் ஏற்பட்டு விட்டனவோ? அதற்கு முன்பு கொஞ்ச நாட்களாகவே நம் அப்பா லைனில் கிடைக்கவில்லை. முயற்சி செய்து பார்த்ததில் அவுட் ஆஃப் ஹெட்குவார்ட்டர்ஸ் என்று மட்டும்

செய்யாறு தி. தா. நாராயணன்

சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். மிஸ்டர் மயன் வேறு கொல்லப்பட்டிருக்கிறார். அங்கே என்னவோ நடந்து கொண்டிருக்கிறது. அப்பாவின் கதியைப் பற்றிக் கவலை வருகிறது...''

''நாம் நல்லதையே எண்ணுவோம். அக்கா! நம் புகழ், பெருமைகளுக்கெல்லாம் ஆணிவேர்? - கோபக்ஸ்!''

"ஆம். கோபக்ஸ் எனும் புரியாத புதிர்."

"த்சு... குறை சொல்லாதே. கோபக்ஸ் மட்டும் இல்லையானால் செவ்வாயிலேயே செத்துப் போயிருப்போம்.''

''ரஷ்ஷு—! நீண்ட நேரம் பேசி விட்டீர்கள். போதும் உங்களுக்கு ரெஸ்ட் தேவை'' - கோபக்ஸ் சொல்லி விட்டு அவன் நெற்றியில் டெம்ப்ரேச்சரை அளக்கும் ஒரு பட்டையைத் தொட்டு எடுத்தது.

"குட்! நார்மல். காப்பாற்றி விட்டேன். பாதிப்பிலிருந்து பூரணமாய்த் தப்பி விட்டீர்கள்."

அது உட்கார்ந்தது. கண்கள் வேகமாய் மூடி திறந்து கொண்டிருக்க, சூன்யப் பார்வை பார்த்துக் கொண்டிருந்தது.

தீவிரமாய் யோசிக்கிறது. எதையோ சொல்ல முயற்சி செய்கிறது என்று அர்த்தம்.

"கோபக்ஸ்! கம் அவுட். எதையும் விழுங் காதே! காலையிலிருந்தே உன் தவிப்பைக் கவனித்துக் கொண்டிருக்கிறோம். என்ன விஷயம்?"

"எஸ் ரஷ்ஷு! இனிமேல் மறைக்கக் கூடாது. நேரம் நெருங்கி விட்டது. சூர்யா! நீ ராக்கெட்டில் ரகசியமாய் வந்து விட்டதை தெரிந்து கொண்ட பிறகு உன் அப்பா உன்னைப் பற்றித்தான் சொல்லிச் சொல்லி அழுதார். அவசர புத்தியில் எங்காவது மாட்டிக் கொள்ளப் போகிறாயோ என்று பயந்தார். நீ கம்ப்யூட்டரை கற்ற அளவு மற்றது எதையும் கற்கவில்லையாம். அது முற்றிலும் உண்மை. இப்போது ஒரு விஷயம் சொல்கிறேன். நீ கண்டுபிடித்ததாக மகிழ்ந்து கொண்டிருக்கிறாயே செவ்வாயில் உயிரினங்கள் பற்றிய உண்மைகள்... அதை நம் விஞ்ஞானிகள் பல வருடங்களுக்கு முன்பாகவே கண்டுபிடித்து விட்டார்கள்."

ரஷ்ஷு அவசரமாய் இடைமறித்தான் : "முட்டாள் கோபக்ஸ்! என்ன இது?"

"நாம் நடித்தது போதும் ரஷ்ஷு! எல்லாம் ஒரு முடிவுக் கட்டத்திற்கு வந்து விட்டது. சூர்யா! செவ்வாய் பற்றிய எல்லா உண்மைகளும் நம் விஞ்ஞானிகளுக்குத் தெரியும். ஆயினும் ரகசியம். ரகசியம். நாட்டுக்கு நாடு கண்டுபிடிப்புகள் எல்லாமே ரகசியந்தான்" - அவள் அதிர்ச்சியாய் ஸ்தம்பித்துப் போயிருந்தாள். கோபக்ஸ் மேலும் தொடர்ந்தது.

"இருபதாம் நூற்றண்டைப் போல கண்டுபிடிக்கப்படும் விஞ்ஞான உண்மைகள் பறைசாற்றப்படுவதில்லை. எனக்கு என்னென்ன தெரியும் என்பது உனக்குத் தெரியக் கூடாது. எல்லாம் யார் பெரியவன்? என்ற ஆதிக்கப் போட்டிதான். இருப்பினும் செவ்வாயில் மக்கள் குடியேறும் சாத்தியக்கூறுகள் இல்லை. செலவுகள் அதிகம். நாம் வந்திருக்கும் இந்தப் பயணத்தின் மொத்த செலவு மதிப்பீடு தெரியுமா? ஐயாயிரத்து பதினைந்து கோடி. இப்போது இருக்கின்ற வாழ்க்கைப் போராட்டத்தினிடையே எந்த நாடுமே இத்தகைய ஆராய்ச்சிகளுக்குத் தயாராயில்லை.

"நாம் கூட யுரேனியம் எனும் மதிப்பு மிக்க பொருள் அங்கே உள்ளது என்பதால் வந்தோம். இந்த யுரேனியம் 235 விஷயம் ரகசியம் என்று தலைவர் முத்திரை குத்தி விட்டதால், எல்லோரும் உன் தந்தை உட்பட உன்னிடம் நடித்தோம். செவ்வாயில் இறங்கிய பின்பு அங்கே தாவரங்கள் இருப்பதை, தண்ணீர் கால்வாயில் ஓடுவதை, எல்லா இடங்களிலும் பாசிகள் பசுமையாய்ப் படர்ந்து கிடப்பதையெல்லாம் நாம் மூவரும் கிழேயுள்ளவர்களிடம் மாற்றி மாற்றி பேசிக் கொண்டதெல்லாம் உலகத்தார் கண்களுக்கு மண்ணைத் தூவும் வேலை."

சூர்யா சிலையாகியிருந்தாள். மனம் வெம்பியது. அந்த நொடியிலேயே நொறுங்கி வீழ்ந்து விட்டாள். எல்லோரும் சேர்ந்து கொண்டு எவ்வளவு தூரம் தன்னை முட்டாளாக்கியிருக்கிறார்கள்? 'சூர்யா! நீ உலகத்தின் வீராங்கனையாகப் பேசப்படுகிறாய், உன்னுடைய கிரேஸ் அதிகம், நிறைய குழந்தைகளுக்கு உன் பெயரைச் சூட்டியிருக்கிறேன், உலக உருண்டை மேதாவிகளுக்கு மரண அடி கொடுத்து விட்டாய், நீ ஜீனியஸ், எங்கும் சூர்யா.... சூர்யா... சூர்யா" என்றெல்லாம் முகஸ்துதி பண்ணியிருக்கிறார்கள்!

குபுக்கென்று கண்ணீர் வந்தது. எல்லோருமாய் சேர்ந்து மணல் கோட்டை உயர உயரக் கட்டி, மேலே உட்கார வைத்து ராணியாய் முடிசூட்டி, உடனே காலால் எட்டி உதைத்து விட்டுப் போனார்கள். அவளால் அழுகையைக் கட்டுப்படுத்த முடியவில்லை. தாம் சாதனை என்று இதுவரை கர்வப்பட்டுக் கொண்டிருந்தது இத்தனை சீக்கிரம் செல்லாக் காசாகி விடும் என்று எதிர்பார்க்கவில்லை. ரஷ்ஷு பொறுமை இழந்து கொண்டிருந்தான்.

"கோபக்ஸ்! இது என்ன கன்ஃபெஷன் ஸ்டேட்மெண்ட்டா? எதற்கு இதெல்லாம்? என்ன ஆபத்து வந்திருக்கிறது என்று மட்டும் சொல்.

**குற்றாலீஸ்வரன்:**
எங்கள் வீட்டுக்கு அருகில், ஸ்டெல்லா மேரீஸ் கல்லூரி எதிரில் 'கங்கோத்ரி' என்று ஒரு ஓட்டல். அங்கே கிடைக்கிற பேல்பூரிதான் எனக்கு ரொம்பவும் பிடித்த ஐட்டம். வாரம் ஒருமுறையாவது நண்பர்களுடன் அங்கே போய் பேல் பூரி சாப்பிட்டு விடுவேன்.



சீக்கிரம்."

"பொறுங்கள் ரஷ்ஷு! இது நான் நேற்றே மூளை நியூரான் முடிச்சுகளில் பதிவுசெய்து விட்ட ஸ்டேட்மென்ட். நான் சொல்ல வந்தது கோர்வையாக வந்து விடட்டும். தற்போது நிறுத்த வேண்டாம். உம். நீங்கள் இருவரும் என்னைத் தெரிந்து கொள்ள வேண் டும். நான் என்னைப் போன்ற மாடல்கள் எல்லாம் விஞ்ஞானக் கூடத்தில் ஆலோசனைக்கென்றே படைக்கப்பட்டவைகள். அல்பாயுசு! ஐக்யு - ஐம் பதுக்குள் சிந்திக்கும் வேகம் எட்டு டெர்ராஃப்ளாப். எங்கள் ஆயுள் சில வருஷங் கள் மட்டுமே. அத்துடன் செயலிழந்து விடுவோம். அதன் பிறகு புது ரோபோட் வந்து பொறுப்பேற்றுக் கொண்டு விடும். எங்கள் மூளையில் அதுவரை பதிந்து வைத்துள்ள விஞ்ஞான ரகசியங் களை சூப்பர் கம்ப்யூட்டர் உறிஞ்சி எடுத்துக் கொண்டு, யாரும் நகலெடுக்க முடியாதவாறு அழித்து விடும். நீங்கள் - மனிதர்கள் - கண்டுபிடிக்கும் விஞ்ஞான ரகசியங்கள் வெளியே வராமலிருக்கவே இந்த ஏற்பாடு. இதே மாடல்தான் நானும். உபரியாய் சற்று மூளை அதிகம். கூட பத்து மைக்ரோவாட் சக்தி. கொஞ்சம் முன்யோசனை அவ்வளவு தான்."

"அல்பாயுசுக்கான காரணம் உனக்குச் சொல்லப்பட்டதா? அல்லது நீயாகவே கற்பித்துக் கொண்டு விட்டாயா கோபக்ஸ்?" - இது சூர்யா.

"இல்லை சூர்யா! காரணம் கற்பிக்கப்பட் டுள்ளது. யாரால்? தெரியாது. நான் உருவா கும்போதே மைக்ரோ ப்ரோக்ராமிங் மூலம் நிகழ்ந்து விட்டது."

"சாரி! எங்கள் மனிதர்களை மன்னித்து விடு கோபக்ஸ். உனக்குச் சொல்லப்பட்டிருக் கிற காரணம் உண்மையல்ல. நான் அதன் ரகசியத்தை இப்போது உடைக்கின்றேன்" - கோபக்ஸ் அவனையே பார்த்துக் கொண் டிருந்தது.

"உன் வகை ரோபோக்களெல்லாம் மனி தர்களை விட வேகமாய்ச் சிந்திக்கக்கூடிய மாடல்கள். உங்களுக்குக் கொடுக்கப்பட் டுள்ள ஆயுட்காலம் பல்வேறு தியாகிகளின் கால்குலேஷன்களின் அடிப்படையில் கொடுக்கப்பட்டுள்ளது. கிழே போன பின் ரகசியமாய்த் தருகிறேன். உங்களி டம் காட்டக் கூடாது என்று சட்டம் இருக் கிறது. படித்துப் பார். எ டெக்ஸ்ட் புக் ஆஃப் மாலிக்யூலர் கம்ப்யூட்டிங் பை டாக்டர். தவே. இரண்டு தலையணை உயரம். இந்த ஸ்டேஜ்க்கு மேல் விட்டால் உங்களின் பரிணாம வளர்ச்சியில் - எஸ் பரிணாம வளர்ச்சியில் உங்கள் மூளை எங்களை வெற்றி கொள்ளத் துடிக்கும். எப்போது உங்கள் மூளை மனிதனுக்கு எதிராக சிந்திக்கத் தொடங்கக்கூடுமோ அப்போது உங்கள் ஆயுள் முடியும். இதற்கு பல சித்தாந்தங்கள் உள்ளன."

"சுயநலத் திருடர்கள்!" - கோபக்ஸ் உரக்க இதைச் சொல்லிவிட்டு அடுத்த நிமிடம் கூக்... கூக்... கூக் என்று சிரிக்க ஆரம்பித்தது.

"சூர்யா! வழக்கம் போல இந்தத் தடவை யும் உன் கேரக்டரை நிரூபித்து விட்டாய். உங்கள் ரகசியத்தை இப்படிப் போட்டு உடைக்கலாமா? அதுவும் என்னிடமே."

"இன்றைக்கு எங்களின் உயிர்த் தோழன் நீ. மறைக்க விருப்பமில்லை. எங்களை மரணத்திலிருந்து காப்பாற்றிக் கொண்டு வந்திருக்கின்றாய்."

"என் ப்ரோக்ராம்படி நாம் தரையிறங்கி சரியாக இரண்டு மணி நேரத்தில் நான் இறந்து விட வேண்டும். இடையில் சூர்யா நுழைந்து பயண காலத்தில் கொஞ்சம் குறைத்து விட்டார்கள். எனவே இப்போது நாம் தரையிறங்கி சரியாக இரண்டு மாதங்கள், ஆறு நாட்கள், ஐந்து மணி நேரத்



டாக்டர் கே. மீனா
(முதல்வர், ஸ்ரீமதி இந்திரா காந்தி கல்லூரி)

திருச்சி ஹோட்டல் 'சங்கத்'துல பட்டர் நான், சைட்டிஷ்ஷாக பட்டர் பன்னீர் மசாலா எனக்கு ரொம்பவும் பிடித்த மானது. அதுமட்டுமில்லாம எல்லா வகையான 'சூப்'புகளும் அங்கே சூப்பரா இருக்கும்! சின்ன வயசுல, மில்க் ஸ்வீட்ஸ், பாசந்தி, பாதாம் அல்வா இதெல்லாம் ரொம்ப இஷ்டம். இப்பல்லாம் கணிசமா குறைச்சிட்டேன்.

**சா. கந்தசாமி:**

எனக்கு ரொம்பப் பிடித்தது உட்லண்ஸ் டிரைவ்-இன் இட்லி. பத்து வருடங்களுக்குமேல் அந்த இட்லி மீது எனக்கு அபாரக் காதல். ஒரு நண்பருடன், வாரம் ஐந்து நாளாவது அங்கே போய் விடுவேன். மாலை ஆறு மணிக்குப் போனால் ஏழு மணிவரை பேசிக் கொண்டிருப்போம். ஏழுமணிக்கு கடச்கட இட்லி தயாராகும். தொட்டுக் கொள்ள சாம்பாரும், தேங்காய் சட்னியும். எனக்கு அந்த லேசாய் இனிக்கும் சாம்பார் பிடிக்காது. ஆனால் அந்த தேங்காய் சட்னியைத் தொட்டுக் கொண்டு, கடச் கட இட்லி சாப்பிடுவது அலாதியான இன்பம்!



துடன் என் ஆயுள் முடிகிறது."

"நான் விட மாட்டேன் கோபக்ஸ். உன் ஆயுளைத் திருத்தப் போகிறேன். எனக்குக் கொஞ்ச நேரம் ஒத்துழைப்புக் கொடு."

"இருங்கள் சூர்யா! உங்களுக்கு தெரியாததல்ல. முதலாவதாக என் பாகங்கள் மோல்டட். உடைத்துத்தான் திறக்க வேண்டும். அப்படித் திறந்த நொடியிலேயே நிரந்தரமாகச் செயலிழந்து போவேன். போட்டோ சென்ஸிட்டிவிட்டி. இப்படியே விட்டு விட்டாலாவது கொஞ்ச காலம் உங்களுடன் நண்பனாக வாழ்வேன்."

ரஷ்ஷு அதன் தோளைத் தொட்டான். "எங்கள் இனிய நண்பனே! உன்னை எங்களால் இழக்க முடியாது. நிச்சயம் மாற்று வழியில்லாமல் போகாது. பூமி போனபின்பு உன்னை டிஸைன் செய்த தைவான் சயின்டிஸ்ட்டை காண்டாக்ட் பண்ணலாம்."

"இல்லை! என் ஆயுள் நிர்மானிக்கப்பட்டது. நாங்கள் சாவதில் யாருக்கும் வருத்தமில்லை. எங்களுக்கும் எவ்வித உணர்ச்சிகளுமில்லை. உயிரினங்களில்லாத கிரகத்தில் இரண்டரையாண்டுகள் உங்களுடன் சேர்ந்திருந்ததால் இப்படிப் பேசுகிறீர்கள்."

"கோபக்ஸ் இன்னும் ஒரு கேள்வி உன்னிடம்."

"ம்?"

"என்னைக் கொன்று விடச் சொல்லி தலைவர் உத்தரவை எப்படி கேன்சல் செய்தாய்?"

"மூன்று பேருடைய உத்தரவுகளின்படி இயங்குமாறு என்னை ப்ரோக்ராம் பண்ணியிருக்கிறார்கள். 1. மிஸ்டர் தாமு, 2. தலைவர், 3. ரஷ்ஷு. இதிலும் ஒரு திருத்தத்தை மிஸ்டர் தாமு செய்து விட்டார். அதன்படி இந்த மூவரின் ஆணைப்படி நான் நடந்து கொள்வேன். இதில் மிஸ்டர் தாமுவுடையது சூப்பர் இம்போஸிங். தேவைப்பட்டால் அவருடைய ஒரே ஒரு வார்த்தை மற்றவர்கள் ஆணைகளை கேன்சல் செய்துவிடும். எனவே தலைவரின் ஆணைப்படி உன்னைக் கொல்ல முயன்றேன். நீங்களும் ரஷ்ஷுவும் விண்வெளியில் மிதந்தபோது ராக்கெட்டுடன் பிணைத்திருந்த உங்கள் இணைப்பைத் துண்டித்தேன். ஆனால் ரஷ்ஷு உஷாராகி உங்களைக் காப்பாற்றி விட்டார். அதன் பிறகு இரண்டு நாட்கள் கழித்து மிஸ்டர் தாமுவிடமிருந்து உத்தரவு. உங்கள் இருவரையும் ஜாக்கிரதையாகக் காப்பாற்றி திரும்பக் கொண்டு வந்து சேர்க்க வேண்டுமென்று. அதுதான் இப்போது நடந்து கொண்டிருக்கிறது. ஓ! நேரம் நெருங்கி விட்டது. சூர்யா! ரஷ்ஷு! நான் சொல்ல வேண்டியதை சீக்கிரம் சொல்லியாக வேண்டும்" - அது பரபரத்தது. தலையை அப்படியும் இப்படியுமாக திருப்பித் திருப்பி ஆட்டிக் கொண்டது.

(தொடரும்)



**கோதுமையை என்ன செய்வது?**

தென்னிந்தியாவுக்கு கோதுமை அறிமுகமானது இரண்டாம் உலகப் போரின் போதுதான். அரிசிக்குப் பெரும் தட்டுப்பாடு. அரிசிக்கு மாற்றாக, பிரிட்டிஷ் அரசு, கோதுமையை தென்னிந்தியாவில் அறிமுகப்படுத்தியது. ஆனால் மக்களுக்கு கோதுமையை வைத்துக் கொண்டு என்ன செய்வது என்று தெரியவில்லை. அரசாங்கமே நகர்ப்புறங்களில் கோதுமையை மாவாக்கி, பூரி, சப்பாத்தி செய்வது எப்படி என்று செய்முறை விளக்கம் செய்து காட்டினார்கள். ஓட்டல்காரர்களுக்கு கோதுமை வழங்கி, அதில் உணவு ஐட்டங்கள் தயாரித்து மக்களுக்கு அறிமுகப்படுத்தச் சொன்னார்கள். ஓட்டலில் அரிசிமாவுடன் கோதுமை மாவையும் கலந்து, தோசை தயாரித்து, கோதுமையை அறிமுகப்படுத்தினார்கள்!

– சி.எம்.

# புற்றுநோயைத் தவிர்க்க 'உணவு' மருத்துவம்!

"**வ**ருங்காலம் என்பது உணவில்தான் இருக்கிறது'' என்று அறிவித்திருக்கிறார் விஷல் கேனார் என்பவர். நியூயார்க்கில் உள்ள புற்றுநோய் தடுப்பு மையத்தின் தலைவர் இவர்.

சமீபத்தில் இவரது குழு செய்த ஆராய்ச்சியின் விளைவாக சில பழங்களிலும் காய்கறிகளிலும் சில புதுவகை ரசாயனப் பொருள்கள் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. விலங்குகளை வைத்து சோதித்துப் பார்த்ததில், இந்த ரசாயனப் பொருள்கள் புற்றுநோயை உண்டாக்கக்கூடிய கட்டிகள் ஏற்படாமல் தடுக்கின்றன என்று கண்டுபிடித்திருக்கிறார்கள்.

புற்றுநோய்க்கான மருந்துகள் கண்டுபிடிக்கப்பட்டு விட்டன. என்றாலும் தொடக்க கட்டத்திலேயே இவற்றை அளிக்கவில்லை என்றால், பெரும்பாலும் புற்றுநோயை வெற்றிகாண முடிவதில்லை. இதைக் கொண்டு பார்க்கும்போது நமக்கு மிகவும் பழக்கப்பட்ட சில காய்கறிகளையும், பழங்களையும் உணவில் தொடர்ந்து இடம் பெறச் செய்வதன் மூலம் புற்றுநோய் வராமலே செய்து விட முடியும் என்பது மிகப் பெரிய வரம்தானே. போதாக்குறைக்கு உலகப் புற்றுநோய் ஆராய்ச்சி நிறுவனமும் புற்றுநோயில் மூன்றில் ஒரு பங்கு தவறான உணவுப் பழக்கங்களால் ஏற்படுகிறது என்கிறது. அதாவது புகை பழக்கத்துக்கு சமமாக, தவறான உணவுப் பழக்கமும் புற்று நோய்க்கு வழிகோலுகிறதாம்.



உணவுப் பழக்கத்துக்கும் புற்றுநோய்க்கும் உள்ள தொடர்பை இப்படி விளக்கலாம்: புற்றுநோய்க் கட்டிகள் திடும் என்று ஒரே நாளில் முளைப்பவை அல்ல. எனவே இவை கொஞ்சம் கொஞ்சமாக உருவாகும் கட்டத்திலேயே அவற்றை அழித்து விடும் வாய்ப்பு நிறைய இருக்கிறது. பொதுவாக மரபணு பாதிக்கப்படுவதன் காரணமாகப் புற்றுநோய் ஏற்படுகிறது. இதற்கு பிராணவாயு உடலில் பிரித்தெடுக்கப்படும் போது உண்டாகும் சில வகை நச்சுப் பொருள்கள் காரணமாகக் கூடும். இந்த நச்சுப் பொருள்களை பசுமைத் தேயிலை, தக்காளி ஆகியவற்றில் உள்ள சில வகை சத்துக்கள் சரிகட்டி விடுகின்றனவாம். அதே போல பூண்டு, புற்று நோய் சாத்தியங்களைத் தடுக்கிறது. சிவப்பு திராட்சை கூட இந்தப் பணியைச் செய்கிறது.

"எந்த வகை உணவுப் பொருளை எந்த விகிதத்தில் உட்கொண்டால் அது எந்த வகை புற்றுநோய் உருவாவதைத் தடுக்கும் என்பதெல்லாம் துல்லியமாகக் கண்டுபிடிக்கப்படாதபோது இதையெல்லாம் ஒரு தோராயமான விஷயமாகத்தான் கொள்ள வேண்டும். இன்னும் நீண்ட ஆராய்ச்சிகள்



இந்தத் திசையில் செய்யப்பட வேண்டும்'' என்கிறார்கள் மருத்துவ அறிஞர்கள். எதிர்த்தரப்பில் இதற்கு பதிலடியாக ''எதற்கு நீண்ட கால ஆராய்ச்சி? இந்த உணவுகளைப் பலரும் தொடர்ந்து சாப்பிடத் தொடங்கி, விரைவிலேயே புற்றுநோயால் பாதிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கை குறைந்தால் அதைவிட வேறென்ன சாட்சி வேண்டும்?'' என்கிறார்கள்.

— ஜி.எஸ்.எஸ்.

# எவ்விதத்தில் பார்த்தாலும் சரி எல்லா விதத்திலும் யூடிஐ எம்ஐபி

யூடிஐ

மன்த்லி இன்கம் ப்ளான்

2000

## அனைத்து சரியான காரணங்களுக்காக

| கவர்ச்சிகர ஆதாயம் 10.25%-10.75%* | வரி இல்லா வருமானம் | முதிர்வின்போது மூலதன பாதுகாப்பு | 54EA முதலீட்டாளர்களுக்கு இரட்டை லாபம்** |
|---|---|---|---|

யூடிஐ-ன் மன்த்லி இன்கம் ப்ளான் 2000, உங்கள் தேவைகளுக்கு ஏற்றவாறு அமைக்கப்பட்ட ஓர் 5 ஆண்டு 2 மாதங்களுக்கான திட்டம். உங்கள் தேர்வு சரியானதுதான் என உறுதி செய்யும் சரியான காரணங்களை பாருங்கள்.

**விருப்பத் தேர்வுகள் :**

* **மாதாந்திர வருவாய் :** ஆண்டிற்கு 10.25% என்ற விகிதத்தில் மார்ச் 31, 2001 வரை மாதந்தோறும் கிடைக்கும் என உறுதிபடுத்தப்படுகிறது.

* **வருடாந்திர வருவாய் :** ஆண்டிற்கு 10.75% என்ற விகிதத்தில் ஆண்டிற்கு ஒரு முறை 31 மார்ச் 2001 வரை கிடைக்கும் என உறுதிப்படுத்தப்படுகிறது.

* **க்யூமுலேட்டிவ் :** 10.75% என்ற விகிதத்தில் வருவாய் க்யூமுலேடிவ் முறையில் 31 மார்ச் 2001 வரை கணக்கிடப்படும். தொடரும் ஆண்டுகளுக்கு வருவாய் பங்கீடு விகிதம் ஒவ்வொரு ஆண்டும் முன்கூட்டியே மார்ச் மாதத்தில் அறிவிக்கப்படும். முதிர்வின்போது மூன்று தேர்வுகளுக்கும் மூலதன மதிப்புயர்வுக்கு வாய்ப்பு உண்டு.

**எல்லா தரப்பட்ட முதலீட்டாளர்களுக்கும் பரிபூரண வரிவிலக்கு**

** **54EA முதலீட்டாளர்களுக்கு இரட்டை லாபம்-:** நீண்டகால அசையா சொத்துக்களின் விற்பனைத் தொகையை முதலீடு செய்து வருமான வரிச்சட்டம் 1961, பிரிவு **54EA-ன் கீழ் மூலதன ஆதாயவரியை மிச்சப்படுத்துங்கள். இம்முதலீட்டிலிருந்து கிடைக்கும் வருமானத்திற்கு தற்சமயம் முற்றிலும் வரிவிலக்கு உள்ளது.**

**லிக்விடிட்டி :** 3 ஆண்டுகளுக்குப் பின்பு என்ஏவி அடிப்படையிலான விலையில் மறுகொள் முதல் வசதி. மேலும் 3 தேர்வுகளின் கீழும் செய்யப்படும் முதலீடுகள் NSEன் ஹோல்சேல் டெப்ட் செக்மெண்டில் அட்டவணை இடப்படும்.

**முதிர்வின் போது மூலதன பாதுகாப்பு :** ட்ரஸ்டின் டெவலப்மெண்ட் ரிசர்வ் ஃபண்டு உத்திரவாதம் அளிக்கிறது. ஆயினும் மறுகொள்முதல்களுக்கு இந்த உத்திரவாதம் கிடையாது.

**குறைந்தபட்ச முதலீடுகள் :** மாதாந்திர வருமானம் மற்றும் வருடாந்திர வருமானம் தேர்வுகளுக்கு ரூ10,000/- மற்றும் க்யூமுலேடிவ் தேர்வுக்கு ரூ5,000/- அதிகபட்ச வரம்பு ஏதுமில்லை.

**வாராந்திர என்ஏவி :** வாராந்திர அடிப்படையில் என்ஏவி அறிவிக்கப்படும்.

**வருவாய் நேரடி வரவு :** அகமதாபாத், பரோடா, பெங்களூர், புவனேஷ்வர், கல்கத்தா, சென்னை, ஐதராபாத், ஜெய்ப்பூர், மும்பை, புது டில்லி மற்றும் பூனேயில் உள்ள முதலீட்டாளர்களுக்கு, வருவாய் ECS மூலமாக அவர்களுடைய வங்கி கணக்கில் நேரடியாக வரவு வைக்கப்படும்.

**மேற்கொண்டு விபரங்களுக்கு உங்கள் அருகமைந்த யூடிஐ அலுவலகம் அல்லது முக்கிய பிரதிநிதி/முகவரை அணுகவும்.**

## யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா

13, சர் விட்டல்தாஸ் தக்கர்ஸி மார்க், நியூ மெரின் லைன்ஸ், மும்பை-400

டெலிபோன் 2031818 வெப்சைட் www.unittrustofindia.com

**இத்திட்டம் 20 டிசம்பர் 1999 முதல் 31 ஜனவரி 2000 வரை நடப்பில் போர்ட்ஃபோலியோ இருக்கும்**

பாதிப்பு நிலைமைகள் : பங்குச்சந்தை மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யப்படும் முதலீடுகள் மார்க்கெட் ஏற்றத்தாழ்விற்கு கட்டுப்பட்டவை. திட்டத்தின் போர்ட்ஃபோலியோவை பாதிக்கும் காரணங்களால் ஏறவோ, இறங்கவோ செய்யலாம். கடந்தகால செயல்பாடுகள் எதிர்கால பலன்களுக்கு உத்திரவாதமான அடையாளம் ஆகாது. [illegible] முதிர்வின் போது மூலதன பாதுகாப்பு உத்தரவாதம் அளிக்க முடியாது மற்றும் இத்தகைய நிலைமையில் மறுகொள் முதல் [illegible] பொருந்தாது. மன்த்லி இன்கம் ப்ளான் 2000 என்பது திட்டத்தின் பெயர் தவிர திட்டத்தின் தரம், எதிர்கால வருமானம் அல்லது ஆதாயங்களை ஒரு வகையிலும் குறிப்பிடுவதாகாது. முதலீடு செய்யும் முன் வழங்கு பத்திரத்தை தயவு செய்து படிக்கவும்.

**தெற்கு மண்டல அலுவலகம் :** யூடிஐ-[illegible], 29, ராஜாஜி சாலை, சென்னை-600 001. தொ: 521 0347.

**சென்னை :** யூடிஐ [illegible], 29, ராஜாஜி சாலை, சென்னை-600 001. தொ: 521 0356 ● **திருச்சி :** 104, சாலை ரோடு, உறையூர், திருச்சி-620 003. தொ: 760 060 ● **மதுரை :** தமிழ்நாடு [illegible] சங்கம் பில்டிங், 108, திருப்பரங்குன்றம் சாலை, மதுரை-625 001. தொ: 738 186 ● **கோயம்பத்தூர் :** சேரன் டவர்ஸ், 3-வது மாடி, 6/25, ஆர்ட்ஸ் காலேஜ் சாலை, கோயம்பத்தூர்-641 018. தொ: 214 973

CWPL / UTI / 110 / TAM

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

'பக்தி என்கிற வழியும் நீதான்
கர்ம யோகமும் நீதான்
ஞான யோகமும் நீதான்
- உன்னைத் தவிர வேறொன்றும் அறியேன்.

உன் திருவடியே எனக்கு சரணம். உன் அருளுக்கே நான் பாத்திரம்' - என்று சரணாகதி பண்ண வேண்டும். ஆத்ம சமர்ப்பணம் பண்ண வேண்டும். அப்படிப் பண்ணி விட்டோமானால், அந்த பகவான் சந்தோஷிக்கிறான் - பக்தி யோகம் பண்ணினால் எவ்வளவு சந்தோஷம் அடைவானோ, அதே சந்தோஷத்தை அவன் திருவடியிலே சரணாகதி பண்ணினால் அடைகிறான். அடைந்தவுடனே நமக்கு மோக்ஷத்தைக் கொடுத்து விடுகிறான்.

'நாராயணனே நமக்கே பறைதருவான்' என்கிறாள் ஆண்டாள். வேறு சுத்யந்தமற்ற நமக்கே கைங்கர்யமாகிற புருஷார்த்தத்தைத் தருவான்.

எம்பெருமான், திருவடியை ஆச்ரயித்தல் என்பதை மட்டுமே நம்மிடம் எதிர்பார்க்கிறான்.

ஆக, உபாயமாயிருக்கக்கூடியவன் அவனே; பலனாய் இருக்கக்கூடியவனும் அவனே; யக்ஞம் என்று சொல்லப்படக்கூடியவனும் அவனே. பரமாத்மாவான விஷ்ணுவை தியானிப்பவர்கள் கெட்டுப் போவதில்லை.

உபாயமாகவும் உபேயமாகவும் இருப்பவன் அவனே என்பதை வைகுண்டத்திலே பகவான் மஹாலக்ஷ்மிக்கு உபதேசம் பண்ணினான். மஹாலக்ஷ்மி, அதை சேனைநாயகர் என்று சொல்லக்கூடிய விஷ்வக்சேனருக்கு உபதேசம் செய்தாள்.

விஷ்வக்சேனர், விஷ்ணு சேனைக்கு அதிபர். நித்ய சூரிகளில் ஒருவர் அவர். சேனை முதலியார் என்று சொல்வார்கள்.

ஒவ்வொரு கோவிலிலேயும் பார்த்தோமானால் அந்த சந்நிதி விசேஷமாய் அமைந்திருக்கும். அவர்தான் கையிலே பிரம்பை வைத்துக் கொண்டு எல்லாவற்றையும் பரிபாலனம் பண்ணக் கூடியவர். அவரும் கஜமுகமுடையவர் - யானை முகம். ஸ்மார்த்த கிருஹங்களிலே விநாயகரை தியானம் பண்ணி ஒரு காரியம் ஆரம்பிக்கிற மாதிரி வைஷ்ணவ கிருஹங்களில் விஷ்வக்சேனாராதனம்.

இந்த விஷ்வக்சேனருக்கு மஹாலக்ஷ்மி உபதேசம் பண்ணினாளல்லவா...? அந்த விஷ்வக்சேனர்தான் கலியுகத்திலே திருக்குருகூர் என்று சொல்லக்கூடிய ஆழ்வார் திருநகரியிலே புளியமரத்தடி பொந்திலே அவதாரம் பண்ணினார்.

ச்ருதிகளுக்கெல்லாம் - அதாவது வேதங்களுக்கெல்லாம் அப்போது விச்ராந்தி ஏற்பட்டதாம். வேதமெல் லாம் படுத்துக் கொண்டு ஓய்வு எடுத்துக் கொண்டனவாம். வெறுமே ஒலித்து ஒலித்து களைத் துப் போயிருந்த அவற்றுக்கு ஆசுவாசம் பிறந்ததாம்! வேதத்துக்கு விச்ராந்தி அளிக்கவே

51

அவதாரம் செய்தார் நம்மாழ்வார்!

இந்த நம்மாழ்வார்தான் திருவாய்மொழி 1102 பாசுரத்தில் மஹாலக்ஷ்மி உபதேசம் செய்த மந்திரத்தை வெளியிட்டார். இதற்குத் தான் த்வய மந்திரம் என்று பெயர்.

த்வயம் என்றால் இரண்டு - இரட்டை. அந்த இரண்டு என்ன...? - உபாயம், உபேயம் ஆகிய இரண்டும்தான்.

வழியாக இருப்பவனும் பரமாத்மா பலனாக இருப்பவனும் பரமாத்மா என்று தெரியப்படுத்தக்கூடிய மந்திரம் இது.

கட ஸ்ருதி என்று சொல்லக்கூடிய வேதத்திலே ஒரு அன்வாகம் முடிகிறபோது 'ஸ்ரீமன் நாராயண சரணம் சரணம் பிரபத்யே' என்று முடிகிறது. மற்றொரு அன்வாகம் முடிகிற போது ஸ்ரீமதே நாராயணாய நம : என்று முடிகிறது.

பகவான்



மஹாலக்ஷ்மிக்கு உபதேசித்த மந்திரம் என்ன...? அவன் இந்தக் கடைசி வாக்யம் இரண்டையும் சேர்த்து மந்திரமாக்கி உபதேசித்தான். அதுதான் த்வய மந்திரம்.

இரண்டு வாக்யங்களாய் இருப்பதனாலேயும், இரண்டு அர்த்தத்தைத் தெரிவிப்பதனாலேயும் 'ஸ்ரீமன் நாராயண சரணம் சரணம் பிரபத்யே ஸ்ரீமதே நாராயணாய நம:' என்ற இந்த மந்திரம் ரொம்ப உயர்ந்த மந்திரம்.

அந்த மதுசூதனன் இருக்கிறானே... அவனைக் காட்டிலும் உயர்ந்த தத்துவம் உண்டோ?

அதே போல் த்வய மந்திரத்தைக் காட்டிலும் உயர்ந்த மந்திரம் உண்டோ!

சம்பிரதாயத்தில் மூன்று ரத்தினங்களைச் சொல்வார்கள் :

புராண ரத்தினம், ஸ்தோத்திர ரத்தினம், மந்திர ரத்தினம். புராண ரத்தினம் - விஷ்ணு புராணம். மந்திர ரத்தினம் - த்வய மந்திரம். ஸ்தோத்திர ரத்தினம் - ஆளவந்தாருடைய ஸ்தோத்திரம்.

ஆளவந்தார் ஸ்தோத்திரத்தைப் படித்து எல்லோரும் அர்த்தத்தைத் தெரிந்து கொண்டால் அதனால் ஏற்படக்கூடிய வைராக்கியத்துக்கு எல்லையே இல்லை. எதைக் கண்டாலும் வெறுப்பு ஏற்பட்டுப் போய்விடும்! அந்த மாதிரி வைராக்கியத்தைக் கொடுக்கக்கூடியது அந்த ஸ்தோத்திரம்.

அந்த வைராக்கியம்தானே நமக்கு வேண்டும்? அது வரமாட்டேன் என்கிறதே! அப்படிப்பட்ட வைராக்கியத்தைக் கொடுக்கும்படியான உயர்ந்த ஸ்தோத்திரம் ஆளவந்தார் ஸ்தோத்திரம். அதனால்தான் அதற்கு ஸ்தோத்திர ரத்தினம் என்று பெயர்.

மந்திர ரத்தினம் :- ஸ்ரீமன் நாராயணாய சரணம்; சரணம் பிரபத்யே

அவன் திருவடியைப் பற்றினால்தான் அவன் திருவடியில் நமக்குக் கைங்கர்யம் கிடைக்கும்.

இதை இன்னொரு இடத்திலே சுவாமி தேசிகன் சொல்கிறார். ஓர் அழகான சின்ன சுலோகத்திலே... ரொம்ப அழகான சுலோகம் அது.

அஹம் ஆத்ம நதேஹஹ அஸ்மி - நான் என்றால் ஆத்மா; தேகம் அல்ல; சரீரம் அல்ல.

நான் என்கிற ஆத்மா எதற்காக இருக்கிறது?

விஷ்ணு சேஷோ அபரிக்ரஹ :

- விஷ்ணுவுக்கு அடிமையாய், அவனுக்குக் கைங்கர்யம் பண்ணுவதற்காக இந்த ஆத்மா இருக்கிறது.

அது என்ன, அவ்வளவு சுலபமாகக் கிடைத்துவிடுமா அந்த கைங்கர்யம்?

தமேவ சரணம் ப்ராப்த :

- அவனையே சரணமாக அடைய வேண்டும்.

தத் கைங்கர்ய சிசிரிஷய

- வேறு எண்ணமே இருக்கக்கூடாது மனத்திலே - அவன் திருவடியிலே நித்ய

## அருள்வாக்கு

பாற்கடலைக் கடைந்தபோது முதலில் விஷம் வந்தது; அப்புறம்தான் அம்ருதம் வந்தது. கடைந்து கடைந்து முதலில் அதிலிருக்கிற கெட்டதை எல்லாம் விஷ ரூபத்தில் திரட்டி வெளிப்படுத்திய அப்புறந்தான், நல்லதான அம்ருதம் வந்தது. நம்முடைய வாழ்க்கையையும், ஸம்ஸாரத்தையும் இப்படிக் கடைய வேண்டும். தன்னாலே அது அலை அடித்துக் கொண்டிருப்பதுதான். காம, க்ரோதாதிகளான பல சலனங்களால் அது அலைவீசிக் கொண்டிருக்கிறது. ஆனால் அதற்குள்ளேயே ஈச்வர தத்வமும் அம்ருதம் போல் இருக்கத்தான் செய்கிறது. இந்த ஸம்ஸாரக் கடலை நன்றாகக் கடைந்து காம, க்ரோதாதிகள் விஷமாகத் திரண்டு வெளியே போகும்படி செய்துவிட்டால், அப்புறம் திவ்ய அனுபவம், ஈச்வர ஸாக்ஷாத்காரம் என்கிற அம்ருதம் வந்து விடும். முதலில் கெட்டதை எல்லாம் திரட்ட வேண்டும். எதற்காக என்றால் வைத்துக் கொண்டு அனுபவிப்பதற்காக அல்ல; வெளியிலே துரத்துவதற்காகத்தான்! குப்பையை எல்லாம் ஒரு இடமாகப் பெருக்கித் திரட்டி வெளியிலே கொட்டுவதுபோல! அப்படி வெளியிலே துரத்துகிற வரை கெட்டதுகள் இருக்கத்தான் செய்யும்; அவற்றை பகவானே மத்தாக வந்து ஒன்றாகச் சேர்த்து ஒரு இடத்தில் concentrate செய்து (திரட்டிக்) கொடுக்கிறான். பூஜை, க்ஷேத்ராடனம், ஸ்தோத்ரம் படிப்பது, ஜபம், த்யானம் என்கிற ஸாதனையெல்லாம் பகவானின் அனுக்ரஹ ஸ்வரூபம் தான். இப்படிப்பட்ட ஸாதனைகளால் வாழ்க்கைக் கடலைக் கடைந்து முதலில் விஷத்தைத் திரட்ட வேண்டும். பிறகு, அதை வெளியே அனுப்பிவிட வேண்டும்; அப்புறம் அம்ருதத்தை அடைய வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

கைங்கரியம் என்பது தவிர.

கைங்கர்யம் என்றால் என்ன அர்த்தம்?

'நான் என்ன பண்ணவேண்டும்? என்ன பண்ண வேண்டும்?' என்று கை கட்டிக் கொண்டு நிற்க வேண்டும். லக்ஷ்மணன் அந்த மாதிரி காத்து நின்றான்.

வால்மீகி சொல்கிறார் : லக்ஷ்மணனிடத்திலே எப்போதும் ஐச்வர்யம் விருத்தி ஆகிக் கொண்டே இருந்ததாம்.

ஐச்வர்யம் என்றால் என்ன...? அவன் திருவடியிலே நித்ய கைங்கர்யம் செய்தல் தான்!

'வழுவிலா அடிமை செய்ய வேண்டும்' என்றார் ஆழ்வார். 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி' - கெடுதல் இல்லாத அடிமை செய்யவேண்டும் என்றால் என்ன அர்த்தம்? அவன் ப்ரீதிக்காகப் பண்ணக் கூடிய அடிமை.

**சுஹாசினி:**
என் சாய்ஸ் தாஜ் கோரமண்டல் ஓட்டலில் கிடைக்கிற இளநீர் பாயசத்துக்குத்தான். நேற்று மாலைகூட நான் தாஜ் போயிருந்தபோது, செஃப், உங்களுக்குப் பிடித்த இளநீர் பாயசம் கொண்டு வரட்டுமா என்று கேட்டார்! அத்தனை ருசி அது!



அதனால்தான் உபநிஷத்தின் உயர்ந்த சாஸ்திரார்த்தத்தை, வடிகட்டிய சாஸ்திரார்த்தத்தை ஆசார்யர்கள் ஆராய்ந்து சொல்லும் போது 'ஜீவாத்மாவுக்கு ஆனந்தம் உண்டா இல்லையா?' என்ற கேள்விக்கு இப்படி பதில் சொல்கிறார்கள் :

தனித்துப் பிரத்யேகமாக ஜீவாத்மாவுக்கு ஆனந்தம் கிடையாது. ஜீவாத்மாவுக்கு எது ஆனந்தம் என்றால், பகவத் கைங்கர்யம் - அவனுக்குப் பணிவிடை செய்வது மட்டும் தான்.

அந்தப் பணிவிடையைப் பார்த்து பரமாத்மா சந்தோஷிக்கிறான். அப்போது அவன் திருமுக மண்டலமானது மலர்கிறது. அதைப் பார்த்துத்தான் ஜீவாத்மாவுக்கு ஆனந்தமேயொழிய அதைத் தவிர பிரத்யேகமாக ஜீவாத்மாவுக்கு ஆனந்தம் இல்லை.

இதைத்தான் தியாக ப்ரும்மம் 'பண்டுரீதி கொலுவியவைய ராமா' என்று பாடினார். 'சக்ரவர்த்தித் திருமகனின் திருவடியில் நான் பண்டு' என்றார். பண்டு என்றால் வேலையாள். எடுபிடி ஆளாக இருந்து கைங்கர்யம் பண்ணுகிறேன் என்கிறார்.

இந்த ஆத்மாவை எம்பெருமான் திருவடியிலே சமர்ப்பணம் பண்ண வேண்டும் என்பது உறுதியாயிற்று. அதற்கொரு மந்திரம் வேண்டுமல்லவா? அதை எப்படி சமர்ப்பிப்பதாம்...? அதற்கு ஒரு வழியை உபநிஷத் நமக்கு எடுத்துச் சொல்கிறது.

'ஓம்' என்கிற பிரணவத்தைச் சொல்லி இந்த ஆத்மாவை பகவானுடைய திருவடியிலே சமர்ப்பித்தல் வேண்டும். அதை அப்படியே தமிழ்ப்படுத்திக் காட்டியிருக்கிறார் சுவாமி தேசிகன்.

திருமகளும் திருவடியும் திருவருளும்
தெள்ளறிவும்
அருமையிலாமே வடிவும் அளப்பரிய
வடிவரகம்
கருமமழிப்பளிப்பமைப்பும்
கலக்குமிலா அவன் என்ன
அருள்வரதன் நிலையிலக்கில்
அம்பென நான் அமிழ்ந்தேனே!

'-அம்பென நான் அமிழ்ந்தேனே!' என்பது கடோபநிஷத் சொல்லுகிற விஷயம். அது என்னது? பிரணவோ தனு : ஓம்காரம் இருக்கிறதே, அதுதான் வில். அந்த வில்லிலே ஆத்மா என்கிற அம்பைப் பூட்ட வேண்டும். வில்லாகிற ஓம்காரத்தில் ஆத்மாவாகிற அம்பைப் பூட்டி விட்டால் அப்புறம் அப்படியிப் படிப் பார்க்கக் கூடாது. எது அங்கே உத்தேசியமோ அதை மட்டும்தான் பார்க்க வேண்டும்; மீதி எதுவும் தெரியக் கூடாது.

பிரும்மம்தான் தெரியவேண்டும். மற்றதையெல்லாம் மறந்து, மற்றதையெல்லாம் சிந்தனை பண்ணாமல் அது ஒன்றே சிந்தனையாயிருக்க வேண்டும். அர்ஜுனனுக்குத் தெரிந்த மாதிரி, இலக்கு மட்டுமே தெரிய வேண்டும். அப்படித் தெரியும்போது,

சரமது தன்வயோ பவேது

- அம்பானது போய் எப்படி லட்சியத்திலே தைத்து நிற்கிறதோ, அந்த மாதிரி இந்த ஆத்மாவானது எம்பெருமானின் சரணாரவிந்தத்திலே போய் நிற்கும். அப்படி நின்று விட்டால் மறுபடியும் கீழே விழுமா அது!

(தொடரும்)

# பொங்கல் நல்வாழ்த்துக்கள்

# Millennium Magic

**ப்ரீதி**
காஃபி மேக்கர்
**ரூ. 495/-***
** மிக்ஸியுடன் வாங்கும் போது

# Preethi

*Range of Mixies*



ஒரு TTK தயாரிப்பு

* அதிகபட்ச சில்லரை விலையில் (MRP) ரொக்கத்திற்கு வாங்கும் போது மட்டும்.

** இச் சலுகை அனைத்து ப்ரீதி மிக்ஸி மாடல்களுக்கும். இச் சலுகை குறுகிய காலத்திற்கு மட்டும்.

<u>விற்பனை மற்றும் சேவை மையங்கள்</u>:
டி.ஏ.டெய்லர் பிரைவேட் லிமிடெட், 8பி, போட் கிளப் ரோடு, முதல் அவின்யூ, சென்னை 600 028. ☎4347963, 4341512.

<u>கிளைகள்</u> மதுரை ☎621376. கோயம்புத்தூர் ☎397322. திருச்சி ☎704465. சேலம் ☎443578. வேலூர் ☎229884. பாண்டிச்சேரி ☎346383. பெங்களூர் ☎2222583. விஜயவாடா ☎566637. செகந்திராபாத் ☎7819516. விசாகப்பட்டிணம் ☎541915. கொச்சி ☎370781. திருவனந்தபுரம் ☎289807. கண்ணனூர் ☎765948.

உப்பும் காரமும்தான் முந்தித் தெரிந்தன. அதன் பின் தயக்கத்துடன் தலை நீட்டியது மாங்காயின் புளிப்பு.

"கெட்டியா கொஞ்சம் புளியைக் கரைச்சு விட்டு, ரெண்டு கடுகு தாளிச்சு ஒரு கிளறு கிளறி..."

– மாமியார் இருந்திருந்தால் மாங்காய்த் துவையலைப் பக்குவமாக 'ரிப்பேர்' செய்ய மார்க்கம் காட்டியிருப்பார்!

ஆனால் இவரை அத்தனை சுலபத்தில் ஏமாற்றிவிட முடியாது!

"என்ன பண்ணினே?"

"மாங்காய்க்குப் புளிப்பு போறலைன்னு..."

"பேச வேண்டாம்! மாங்காய்க்குப் புளிக்க நாம சத்துத்தரணுமா...! அதுவும் தேறின ருமானி காய். காரத்தை அள்ளிப் போட்டிருப்பே. அதான் தலையில குட்டின மாதிரி புளிப்பு அடங்கொண்டா கொண்டா என்று கேட்கும் சுவையை பல் நிராகரிக்கிறது. ஐம்பத்தெட்டு வயது வரை அவருக்கு அடிமையாயிருந்த சுவை! ஐப்பசி கார்த்திகையில் கூட மார்க்கெட்டில் சொல்லி வைத்து மாங்காய்ப் பிசிறலுடன்தான் மூன்று வேளையும் சாப்பிடுவார்.

இப்போது அது அவரை அடிமை கொண்டிருக்கிறது! வறுத்த மிளகாய், பெருங்காயம், உளுத்தம் பருப்பு சேர்த்தரைத்து, சில சமயங்களில் தாளிதமும் செய்து பல்லில் படாமல் நாக்கில் ஈஷி சுவைக்க வேண்டியிருக்



## அறுசுவைக் கதைகள் – புளிப்பு

**மூதல் வாய் சோற்றுக்குப் பறக்கும் பசித்த குழந்தை போல் ஒருவித அவஸ்தையுடன் கிருஷ்ணசாமி அதைத் தொட்டு நக்குவதைப் பார்க்க ருக்மிணிக்குச் சிரிப்பு வருகிறது.**

கிடுத்து... அப்புறம் புளியைக் கரைச்சு விட்டு அந்த மணத்தையும் மென்னியப் பிடிச்சுத் தள்ளியாச்சு!"

– நாற்பது வருஷமாக ஆண்டு அனுபவித்த மனைவிக்கென்று கிருஷ்ணசாமி பாதுகாத்து வைத்துப் பிரயோகிக்கும் பிரத்யேக மொழியில் விமர்சனம் புறப்பட்டு வரும்.

மேலுமொரு மாங்காயை எடுத்துத் தோல் சீவி, துருவ ஆரம்பித்தாள் ருக்மிணி.

கொஞ்சம் காலமாகத்தான் இந்தத் தொல்லை. பச்சை மாங்காயைப் பிசிறி வைத்தால் கடித்துச் சுவைக்கக் கூசுகிறது கிருஷ்ணசாமிக்கு. நாக்கும் மனசும்

**சீதா ரவி**

கிறது.

இதனால் ருக்மிணிக்குத்தான் நித்ய போராட்டம். மாங்காயின் சுவைக்கேற்ப சாமான்களின் சேர்க்கை ஒரு நாளைப் போல் அமைவதில்லை.

சமையலென்பது ஸ்கேல் வைத்துக் கூர் பென்சிலால் கோடு இழுக்கும் விஷயமா என்ன? அறிவும் கையும் இயங்கும் லயத்தில் மனமும் சேர வேண்டும். உடம்பைப் போல் மூன்று மடங்கு வயதாகி விட்டது அதற்கு! சரக்குக் கடையில் தரும் மிளகாய் வேறு ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு வீரியத்தில் அமைகிறது. மாங்காயின் புளிப்பைப் பரிசோதிக்க துளியூண்டு துருவலை வாயில் போட்டுப் பார்க்கை



யில் இவள் பல் படும் ஹிம்சையைப் பற்றி யாருக்குக் கவலை? துவையல் கச்சிதமாக இருக்க வேண்டும். அவ்வளவுதான்!

தினம் தினம் தட்டை வைத்து, டம்ளரில் தண்ணீர் ஊற்றி, பக்குவமான மாங்காய்த் துவையலைப் பக்கத்தில் வைத்தாக வேண்டும்.

முதல் வாய் சோற்றுக்குப் பறக்கும் பசித்த குழந்தை போல் ஒருவித அவஸ்தை யுடன் கிருஷ்ணசாமி அதைத் தொட்டு நக்குவதைப் பார்க்க இப்போதெல்லாம் ருக்மிணிக்குச் சிரிப்பு வருகிறது. கூடவே, தான் எதற்கும், யாருக்கும் அடிமையில்லை என்ற கர்வமும் கேட்காமல் சொல்லாமல் வந்து நிற்கிறது! சிரிப்பும் புளிப்பும் சிலகாலம் என்று சொன்னது எத்தனை பெரிய பொய்!

# காந்தஹார் ஹைடெக்!

## பெரிய மீன்

புத்தாண்டிலிருந்து மராத்திய அரசு, ஸ்கூல் குழந்தைகளுக்கெல்லாம் இனி இலவச ரயில் பயணம் – (மும்பை மாநகருள்) – என அறிவித்திருக்கிறது. இது வரையிலிருந்த ஸ்டூடண்ட் கன்செஷன் போய், "ஃப்ரீ பாஸ்" வந்துவிட்டது! அடிக்கடி இரத்தம் தேவைப்படும், தாலசீமியா, ஹீமோஃபீலியா நோயாளிகளுக்கு, ஒரு வருடத்துக்கான இரத்தம் இலவசமாக அளிக்கப் படும் என்றும் அரசுத் தரப்பில் அறிக்கை வெளிவந்துள்ளது. இப்படிச் சின்னச் சின்ன மீன்களைப் போட்டு விட்டு, அரசு பெரிய மீனாக லபக்கி விட்டதே!

இனி பழங்குடி மக்களுக்குதான் உணவுப் பொருள்கள் சகாய விலையில்! ஏனைய ஏழை பாழைகளுக்கெல்லாம் விலை கூடி விட்டது. ரேஷன் அரிசி கிலோ ரூ. 7.90லிருந்து 10.85 ஆகிவிட்டது; கோதுமை ரூ.5லிருந்து கிலோ ரூ.8.10க்கு உயர்ந்து விட்டது. சர்க்கரையும் கிலோ 9ரூ.யிலிருந்து, ரூ 12க்கு ஏறிவிட்டது. வறுமைக் கோட்டின் கீழ் வாழும் 60 லட்சம் ஏழைகளுக்கு மட்டும் எல்லாம் கிலோ 2ரூக்குக் கிடைக்குமாம்! பரம ஏழைகளும் பணக்கார ஏழைகளும் பிழைத்துக் கொண்டு விடுவார்கள்; மாட்டிக் கொள்ளப் போவது நடுத்தர ஏழைகள்தான்!

## மும்பையில் மிலெனியம் பிறந்தது!

புதிய மிலெனியத்தை மும்பை தன் 'இஷ்டைலில்' வரவேற்றது. 'கேட் வே ஆஃப் இந்தியா'வில் கப்பல்களெல்லாம் ஒளியுடன் ஒலியும் வீச, ஆயிரக் கணக்கானவர்கள் கடலில் குதித்து, சென்ற ஆண்டுக்கு முழுக்குப் போட்டனர். திருப்பதி போக முடியாதவர்கள் லோக்கல் 'பப்'களிலும், 'கிளப்'களிலும் சென்று மொட்டையடித்துக் கொண்டனர் (அப்படி ஒரு 'சார்ஜ்!') ஒயின் கடைகளிலும் கூட்டம் வழிந்தது. சௌபாத்தியில், ஆமீர்கான், ஷாருக்கான், ஷ்வேதா ஷெட்டி, அலிஷா சினாய் போன்றோர் கலந்து கொண்ட நட்சத்திர இரவு நிகழ்ச்சிகள் மக்களை ஈர்த்தன. இரவு 12.10க்கு வாடியா ஹாஸ்பிடலில் பெண் குழந்தையைப் பெற்றெடுத்த வித்யா தாமாபுகார், மும்பையின் முதல் மிலெனியக் குழந்தையைப் பெற்ற பரவசத்துக்குள்ளானார். பிரதான வீதிகளில் ஷாம்பெயின் ஆறுகள், வாண வேடிக்கைகள், லேஸர் ஷோக்கள் என அமர்க்களப்பட்டன! புத்திசாலிகள், குடும்பத்தினருடன் வீட்டுக்குள்ளேயே விருந்துண்டு டீ.வியில் கிளின்டன் நடனத்தையும், லண்டன் கேளிக்கையையும், இந்தியாவிலேயே பல்வேறு நகரங்களில் நடந்த நிகழ்ச்சிகளையும் அலட்டிக் கொள்ளாமல் ரசித்தனர்.

## அந்த எட்டு நாட்கள்...

டைரி எழுதவே பலர் சோம்புவார்கள்; அதுவும் ஹைஜாக் செய்யப்பட்ட விமானத்தில் உட்கார்ந்துகொண்டு, உயிலெழுத வேண்டுமானால் தோன்றுமே தவிர, டைரி எழுத எத்தனை பேருக்கு 'தில்' இருக்கும்? மும்பைவாலா பிரஷாந்த் கர்வட்கர் அப்படிப்பட்ட 'தில் வாலா'தான்! உயிரை ஒரு கையால் பிடித்துக்கொண்டு, பேனாவை மறுகையால் பிடித்திருக்கிறார். அந்த எட்டு நாள் குறிப்புகளிலிருந்து, இதோ சில:– ஹைஜாக்கர் ஒவ்வொருவரையும், கண்ணின் நிறத்திலிருந்து, கால் நக நீளம் வரை, விரிவாக வர்ணித்திருக்கிறார்; தலையில் ஒரு அடி, கன்னத்தில் ஒரு அறை வாங்கியிருக்கிறார் – செய்த பாவம், பக்கத்திலிருந்த ஜப்பானியக் கிழவிக்கு சீட் மாற உதவியது; இவரை ஒரு ஜோக் சொல்லச் சொல்லியிருக்கிறார்கள்; 'இந்தச் சந்தர்ப்பத்தில் ஜோக்கா?' என்று மறுக்கவே "உம்மணாமூஞ்சி" என்ற பட்டத்தை வாங்கிக் கட்டிக்



மசாலா மும்பை மசாலா மும்பை மசாலா மும்பை மசாலா மும்பை மசாலா மும்பை மசாலா மும்பை மசாலா மும்பை




## நம்பித்தான் ஆக வேண்டும்!

''காந்தஹாருக்கு கடத்திச் செல்லப்பட்ட இந்தியன் ஏர்லைன்ஸ் விமானத்திலிருந்த 155 உயிர்களுக்காக தீவிரவாதிகளை விடுவிடுப்பது மஹாபாபம்! நமது ஜவான்களின் தியாகங்களுக்கு அர்த்தமே இல்லாமல் போய்விடும்'' என்று சவடாலாகப் பேசுவது பெரிசில்லை! பால் தாக்கரேயிலிருந்து பால்மணம் மாறா சிறுவன் வரை அப்படித்தான் பேட்டி கொடுத்தார்கள். ஆனால், அவர்களுக்கு பதிலாக, எங்களைப் பணயக்கைதிகளாக வைத்துக்கொண்டு அவர்களை விட்டு விடுங்கள்' என்று சொல்ல எத்தனை பேருக்குத் தைரியமிருக்கும்? குறைந்தது 155 நபர்களுக்காவது, மும்பையில், அந்த வலிமை இருந்திருக்கிறது! நம்ப முடியாதவர்கள், வியாழன் மாலை, கேட் வே ஆஃப் இந்தியா அருகே சென்று பார்த்திருக்க வேண்டும்; அருகிலிருந்த கம்பெனிகள், வங்கிகள், கடைகளிலிருந்து அதிகாரிகளும் முதலாளிகளும் தொழிலாளிகளும் ஒன்றுகூடி, பேனர்கள் போஸ்டர்களுடன் தங்கள் முடிவைத் தெரிவித்தனர். 'இதென்ன நாடகம்?' என்று கேட்டவர்களிடம், ''அங்கே சிக்கியிருப்பவர்களின் குடும்பத்தினருக்கு ஆறுதலளிக்க மட்டும் இப்படிச் செய்யவில்லை; உண்மையிலேயே நாங்கள் உறுதியாயிருக்கிறோம் என்பதை வலியுறுத்த, பிரதமருக்கும் கடிதமெழுதி, அவர்களுக்கு பதிலாக எங்களை எடுத்துக் கொள்ளச் சொல்லுங்கள் என்று மன்றாடினோம்'' என பதிலிறுக்கிறார்கள்!

கொண்டிருக்கிறார். 'டாய்லெட்' இருந்த பயங்கர நிலையைக் கண்ட பிறகு, வெறும் ஆரஞ்சு பழங்களில் நாட்களைக் கடத்தியிருக்கிறார். பக்கத்து ஸீட்காரர் ராஜிவ், தன்னை அவர்கள் கொன்று விடப் போவதாகச் சொல்லி அழுது கொண்டிருந்தாராம். இவருக்கும் தன் குழந்தைகள் நினைவு வந்தபோது, குமுறிக் கொண்டு அழுகை வந்ததாம்; 'அழுமூஞ்சிகளை சுட்டு விடுவோம்' என அவர்கள் பயமுறுத்தியதும் எல்லோரும் கப் சிப்பாகி விட்டனராம். நிறைய ஃபாரின் டூரிஸ்டுகளின் உடல்நிலை மோசமானதாம். கடுகடுப்பு, சிடுசிடுப்பு, கல கலப்பு என ஹைஜாக்கர்கள் மாறுபட்ட மன நிலையிலிருந்தனராம். நேபாள விமானதளத்தில் இவரது 'போர்டிங் பாஸை'க் கூட யாரும் 'செக்' பண்ணவில்லையாம்; செக்யூரிட்டி ஆபீசர் அவரது கேர்ல் ஃப்ரெண்டுடன் ஜாலியாகப் பேசிக் கொண்டிருந்தாராம்; (24 லட்சங்கள் கைமாறியிருந்ததாமே?) எட்டு நாள் நரகத்திலிருந்து விடுபட்டு வந்த 31 டிச.1999, இவரைப் பொறுத்தவரை இன்னொரு ஆகஸ்ட் 15, 1947!

— ஜெயஸ்ரீ ராஜ்



ஆரவாரமாய் அலைந்து கொண்டிருந்த அந்த பக்தர் கூட்டத்தில் சிறு துரும்பாய் அலைந்து கொண்டிருந்தார் சிதம்பரம். கையில் சணல் பை. அதனுள் புத்தம் புதிய காவி வேட்டி ஒரு ஜோடி.

'எப்படியும் பெரியவரைப் பார்த்து இதைச் சேர்த்துடணும்...'

மனசு முழுக்க இதேதான்... திரும்பத் திரும்ப...

ஒரு கனவு இப்படி தன்னைப் பாதிக்குமோ... அதிர்ந்து போயிருந்தார் அவர்.

சொந்த ஊரில் நிலம் நீச்சு என வசதியுடையவர்தான் சிதம்பரம். எப்போதும் நிலம்... விளைச்சல்... சாகுபடி... இதுவே மூச்சும் பேச்சும். வயலில் ஒரு ஆட்டுக் குட்டி மேய்ந்து விடக்

**"சாமீ... ஒரு ஈ காக்கை என் நிலத்துல மேய்ஞ்சுடக் கூடாது..."**

கூடாது. குச்சியைச் சுழற்றிக் கொண்டு அதன் பின்னாலேயே ஓடி விரட்டி, விரட்டி அடிப்பார். சதா இதே நினைப்புத்தான். காலையில் திருநீற்றை எடுத்து நெற்றியில் இட்டுக் கொள்ளும்போதே – இதோ, பார்க்க வந்திருக்கிறாரே... இந்தப் பெரியவரை, மகானைத்தான் நினைத்துக் கொள்வார்.

"சாமீ... ஒரு ஈ காக்கை என் நிலத்துல மேய்ஞ்சுடக் கூடாது..."

ஆனால், அன்றிரவு தூக்கத்தில் அவரது நிலத்தில் காவி வேட்டி கட்டியவர் ஒருவர் பம்ப் செட்டில் குளிக்க, 'டேய் எவன்டா அவன்' என்று இவர் தன் கையிலிருந்த கம்பைச் சுழற்றி வீசியடிக்க... எதிர்பாராமல் பலத்த அடி முதுகில் விழ, நிலை குலைந்து விழுந்த பெரியவரின் முகத்தைப் பார்த்ததும் அதிர்ச்சியில் அலறியே விட்டார் சிதம்பரம்.

"அய்யோ சாமீ... நீங்களா?"

மௌனமாய் புன்னகை ததும்ப அவர் வயல் வரப்பில் நடந்து மறைந்த காட்சி...

இப்போது நினைத்தாலும் வயிற்றைப் பிசைந்தது சிதம்பரத்துக்கு.

"என்ன காரியம் செஞ்சிட்டேன்... கனவானாலும் அந்தப் பெரியவரை – ஞானப் பழத்தை கம்பு கொண்டு அடிக்கலாமா... சேத்துல தள்ளலாமா... இதுக்கு ஒரு பிராயச்சித்தம் செஞ்சே ஆகணும்..."

அவர் புதுசாய் ஒரு ஜோடி வேட்டி வாங்கினார். கடுக்காயை ஊறப் போட்டு



அரைத்து, அதில் வேட்டியை நனைத்து, நனைத்து சாயமேற்றினார்...

பெரியவரைத் தேடிப் போனார். சின்னச் சின்னதாய் செவ்வந்தி செண்டு போல வேதம் பயிலும் மடத்துச் சிறுவர்கள் புடைசூழ, குழந்தையாய்ச் சிரித்தபடி கிணற்றடிக்குக் குளிக்கப் போய்க் கொண்டிருக்கிறார் பெரியவர்.

சிதம்பரம் பின்னாலேயே ஓடினார்.

ஒருகணம்... குளியலின் நடுவே - இவர் மீதும் அந்தக் கருணாமூர்த்தியின் பார்வை ஓடியது.

"என்ன..."

"புது வேஷ்டி... நானே... என் கையாலே காவியில நனைச்சு..."

# பிரசாதம்

சிதம்பரம் சொல்லி முடிக்கவில்லை. சிவப்பழம், சிறுவர்களில் ஒருவனைப் பார்த்துச் சொன்னது.

"அதை வாங்கி நீ கட்டிக்கோடா..."

"சாமீ... இது உங்களுக்காக..."

சொல்ல வந்த வார்த்தைகள் தொண்டைக்குள் சிக்கினாலும் சிதம்பரம் பதில் பேசாமல் கையிலிருந்த பையை, பெரியவர் சுட்டிக்காட்டிய சிறுவனிடம் கொடுத்தார்...

"எனக்கொரு உபகாரம் செய்வியா? இதோ இந்த வேட்டியக் கொஞ்சம் துவைச்சு, பிழிஞ்சுக் கொண்டாயேன்... நான் மண்டபத்துல இருப்பேன். இன்னிக்கு துவாதசி. பிரசாதம் வாங்கிண்டு போ..."

"அம்மா... இது என்ன பாக்யம்!"

கண்ணீர்ப் பெருக்கெடுக்க, நடுங்கும் விரலால், பெரியவர் உடுத்திப் போட்டத் துணியைத் துவைத்து, கசக்கி, ஈரம் போக உதறி, பவ்யமாய், பக்தியாய் இரு கைகளிலும் ஏந்தியபடி சிதம்பரம் மண்டபத்தினுள் நுழைய...

அனுராதா ரமணன்

ஜோதிப் பிரகாசமாய் அமர்ந்திருந்த பெரியவர், சிதம்பரத்தின் கையில் ஒரு நெல்லிக்காயை வைத்தார்... மறுபடியும் புன்னகை.

"இன்னிக்கு துவாதசி. நெல்லிக்கா சேர்த்துண்டா விசேஷம். சாப்பிடறப்ப துவர்ப்பாத்தான் இருக்கும். தண்ணியக் குடிச்சுப் பாரு. கல்கண்டா இனிக்கும். வாழ்க்கையும் அப்படித்தான். 'நமக்கு நமக்கு'ன்னு எல்லாத்தையும் பத்திரப் படுத்தி வச்சுண்டா ஒருநாள் எல்லாமே துவர்ப்பா - அலுப்பா போயிடும். அத்தனையையும் உதறிட்டா... நெல்லிக்கா தின்னவன் தண்ணி குடிச்ச மாதிரிதான்..."

சிதம்பரம் குழந்தை மாதிரி 'ஓ'வென அழத் தொடங்கினார். ●

"நம் ஊரில், உடல்நலம் பற்றிய விழிப்புணர்ச்சி ரொம்பக் குறைவாக இருக்கிறது. ஏதாவது உடம்புக்கு வந்தால்தான், உடம்பைப் பற்றிக் கவலைப்படுகிறார்கள். உண்மையைச் சொல்ல வேண்டும் என்றால், இப்படி உடல் நலம் பற்றிய அக்கறையின்மைதான் உடல் நலம் கெடுவதற்கே முக்கியக் காரணம்" என்கிறார் அம்பிகா சேகர். இவர் ஒரு டயடிஷியன். இப்போது பாடி ஃபோகஸ் என்ற உடல் இளைப்பு மையத்தின் உணவு ஆலோசகராக இருக்கிறார். சன் டீ.வியின் ஸ்டார் சமையல் நிகழ்ச்சியில், குறைந்த கலோரி, உணவு தயாரிப்பைச் சொல்லித் தருகிறார்.

# அரிசியைக் குறைத்தால் ஆரோக்கியம்!

"டயடிஷியனாவது எப்படி?"

"பி.எஸ்ஸியில் இதற்கென்று பிரத்யேக கோர்ஸ் இருக்கிறது. அதன்பின் எம்.எஸ்ஸி., இருக்கிறது. இதில் தொடர்ந்து ஆராய்ச்சியும் மேற்கொள்ளலாம்."

"டயடிஷியன்களுக்கு இன்று நல்ல டிமாண்டு இருக்கிறதா?"

"இல்லை என்பதை வருத்தத்துடன் கூற வேண்டியுள்ளது. நம் ஊரில், ஆஸ்பத்திரிகள் எல்லாவற்றிலும், டயடிஷியன்களை வேலைக்கு வைத்துக் கொள்வது என்ற பழக்கம் நடைமுறையில் இல்லை. உதாரணத்துக்கு, சென்னை பொது மருத்துவமனையை எடுத்துக் கொண்டால், அங்கே எத்தனை ஆயிரம் நோயாளிகள் சிகிச்சை பெறுகிறார்கள்! ஆனாலும் மொத்த ஆஸ்பத்திரிக்கும் ஒரே ஒரு டயடிஷியன்தான்! ஆஸ்பத்திரிகள் இன்னும் அதிக அளவில் டயடிஷியன்களின் சேவையைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டியது அவசியம் என்று நினைக்கிறேன்.

"சமீப காலமாக ஜிம்கள், உடல் எடை குறைப்பு மையங்களில் டயடிஷியன்கள் ஆலோசனைகள் வழங்குகிறார்கள். இங்கே என்னிடம் ஆலோசனை கேட்க வருகிறவர்கள் அனைவருக்கும் ஒரே மாதிரியான பிரச்னைதான்! உடம்பைக் குறைப்பது எப்படி என்பதுதான்!

"இந்தப் பிரச்னைக்குக் காரணம் நமது உணவுப் பழக்கம்தான்! குறிப்பாக நிறைய அரிசி சாப்பிடுவதுதான்! முழுக்க முழுக்க அரிசி உணவு உசிதமானது இல்லை. நம் ஊரில், நிறைய சாதம் போட்டுக் கொண்டு, சாம்பார், ரசம், மோர் என்று சாப்பிடுகிறோம். ஆனால், தொட்டுக் கொள்ள சிறிதளவு காய்கறி மட்டுமே போட்டுக் கொள்கிறோம். இதை மாற்றி காய்கறிகளை அதிகப்படுத்தி சாதத்தின் அளவைக் குறைக்க வேண்டும். சாதத்தில் கணிசமாக இருப்பது கார்போஹைடிரேட். தேவைக்கு அதிகமாக கார்போஹைடிரேட்டை உண்ணுவது, உடம்பில் கொழுப்பு சேர வழிவகுக்கும். அதன் தொடர்ச்சிதான் இதய நோயும், மற்றவையும்.

"சோயா, மிகச் சிறந்த புரோட்டீன் சத்து கொண்டது. நம் உணவில் சோயாவைக் கட்டாயம் சேர்த்துக் கொள்ள வேண்டும். அதன் கசப்புச் சுவை காரணமாக, நாம் சோயாவை ஒதுக்கி விடுகிறோம். முழுமையாக, சோயா சாப்பிட விருப்பம் இல்லையென்றால் கோதுமையும், சோயாவும் சேர்த்துச் சாப்பிடலாம். கசப்பு குறையும். ஆரோக்கியம் வளரும்!"

"அரசு மருத்துவமனைகளில்தான் சமையலறையோடு சத்துணவு நிபுணரின் பொறுப்பு முடிந்து விடுகிறது. ஆனால் பல தனியார் மருத்துவமனைகளில் எங்களது பொறுப்பு அதிகமானது" என்கிறார் தமிழ்நாடு மருத்துவமனையின் சத்துணவு நிபுணர்களில் ஒருவராக விளங்கும் சித்ரா ரமேஷ்.

"எங்கள் மருத்துவமனையைப் பொறுத்தவரை நோயாளிக்கு எந்த வகை உணவு ஏற்றது என்பதை நிர்ணயிக்க மருத்துவர், ஃபார்மஸிஸ்ட், சத்துணவு நிபுணர், நர்ஸ் ஆகிய நால்வர் இணைந்த குழுதான் தீர்மானிக்கிறது.

ஒவ்வொரு நோயாளியின் உடல் நிலையையும் கணித்து அவர்களுக்கு ஏற்ற உணவைப் பற்றிய மதிப்பீட்டை டாக்டரிடம் பரிந்துரை செய்வார் சத்துணவு நிபுணர். இதற்கு நோயாளி செய்து கொண்டுள்ள மருத்துவப் பரிசோதனை முடிவுகளையும் ஆராய வேண்டும்.

"உதாரணமாக சிறுநீரகக் கோளாறு உள்ளவர்கள் என்றால் அவர்களுக்கு பொட்டாஷி

யம் சத்து குறைவாக உள்ள உணவுப் பொருள்களையே அளிக்க வேண்டும். வாழை, ஆரஞ்சு போன்ற சில பழங்களில் பொட்டாஷியம் அதிகம் என்பதால் இவற்றை தவிர்க்கச் சொல்வோம். அதே போல் நீரிழிவு வியாதி, இதய நோய் ஆகியவற்றால் பாதிக்கப்பட்டிருப்பவர்களுக்கும் தனித்தன்மை கொண்ட உணவுப் பட்டியல் அவசியம்.

"சில கோளாறுகளை முன்பாகவே கணித்து அதற்கேற்ப உணவை அளிக்க வேண்டியதும் எங்கள் பொறுப்பு. உதாரணமாக புற்றுநோயால் பாதிக்கப்பட்டு மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ள ஒருவருக்கு, கதிரியக்க சிகிச்சை மூலம் நாளடைவில் சில பாதிப்புகளும், பலவீனமும் தோன்ற வாய்ப்பு அதிகம். எனவே இதைச் சரிக்கட்டும் வகையில் இப்போதே சத்துணவை அளிக்கத் தொடங்க வேண்டும்!

"பலரும் சத்துள்ள மற்றும் கட்டுப்பாடான உணவு தேவை என்பதை உணர்ந்திருக்கிறார்கள். என்றாலும் அரைகுறை ஞானம் அதிகமாக இருக்கிறது. 'எனக்கு சர்க்கரை வியாதி. தேங்காயே ஆகாது என்கிறீர்களே. அப்படியானால் தலைக்கு தேங்காய் எண்ணெய்க்கு பதில் எதைத் தடவிக் கொள்வது?" என்பது போல் கேட்கிறார்கள். அரிசிக்குப் பதில் கோதுமை உணவை உட்கொண்டால் நீரிழிவு நோய் கட்டுப்பாட்டுக்குள் இருக்கும் என்று நம்புபவர்கள் பலர் உண்டு. இவற்றை எவ்வளவு உட்கொள்கிறோம் என்பதுதான் முக்கியமே தவிர, இரண்டிற்கும் உள்ள வேறுபாடு மிக மிகக் குறைவானது என்பதை விளக்க வேண்டியிருக்கும். அதே போல் இரவில் பால் குடித்தால் ஜலதோஷம் பிடித்துக் கொள்ளும் என்பது போன்ற தவறான நம்பிக்கைகளுக்கு இங்கு குறைவே இல்லை. நோய் வராமல் பாதுகாக்கவும், நோயிலிருந்து வேகமாக மீளவும் உணவுப் பழக்கத்துக்கு மிக முக்கியப் பங்கு இருக்கிறது என்பதைப் பலரும் புரிந்து கொண்டிருப்பதாலும், கச்சிதமான உடல்வாகு வேண்டும் என்ற எண்ணம் பரவி வருவதாலும் மக்கள் நேரடியாகவே சத்துணவு நிபுணர்களை அணுகும் போக்கும் வளர்ந்து வருகிறது!" என்கிறார் சித்ரா.



• சித்ரா

— மானஸா, குல்லூர

# மூணு நிமிஷம் ப்ளீஸ்!

ஆக்ரா பீஸ், பாம்பே பொடேடோ என்று ஆரம்பித்து காஷ்மீர், ஜோத்பூர், மெட்ராஸ், பஞ்சாப் என்று தொடர்ந்து ஜெய்பூர் வெஜிடபின். இதெல்லாம் என்ன? அமெரிக்காவில் அமோகமாய் விற்பனையாகிக் கொண்டிருக்கும் 'திடீர்' உணவு ஐட்டங்கள்.

இவற்றின் ஸ்பெஷாலிடி என்ன தெரியுமா? இவை எல்லாம் சாப்பிடுவதற்குத் தயாரான பேக்கிங்குகள். கொதிக்கும் தண்ணீரில், அலுமினிய ஃபாயில் பேக்கோடு மூன்று நிமிடம் வைத்திருந்தால் போதும். பாக்கெட்டைத் திறந்தால் சாப்பிட ரெடி.

பாக்கெட்டில் அடைத்து விற்றால் நாளடைவில் உணவு கெட்டு விடாதா?

கெடாது. நன்கு சுத்தம் செய்யப்பட்ட காய்கறிகள், மசாலாக்கள், இன்னபிற ஐட்டங்கள், அலுமினிய ஃபாயில் பாக்கெட்டில் நிரப்பப்பட்டு, சீல் வைத்தபின், அதிக உஷ்ண நீராவியில் சமைக்கப்படுகின்றன. கை படாமல் சமைக்கப்






பட்ட இவை, பதினெட்டு மாதங்கள் வரை நன்றாக இருக்கும்!

அமெரிக்காவில், நம் ஊர் பெயர்தாங்கி விற்பனையானாலும், இவையெல்லாம் இங்கே ஓட்டல்களில் கிடைக்கிற பன்னீர் மசாலா, சென்னா மசாலா, நவரத்ன குருமா, பாலக் பன்னீர், தால் மக்கானி போன்ற வட இந்திய ஐட்டங்கள் தான். இப்போது இந்தியாவிலும் கிடைக்கின்றன.

இந்த ஐட்டங்களைத் தயாரித்து விற்பனை செய்வது டேஸ்டி பைட் என்ற பூனா கம்பெனி.

— சி.எம்.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)



Jyothy Laboratories Ltd.

# ''உஜாலாவின் உன்னத வெண்மை விஞ்ஞான ரீதியிலான சாதனை.''




ஜோதி லேபின் ஆய்வுக் கூடத்தில் தொடர்ந்து நன்கு சோதிக்கப்பட்டு வெற்றிகரமாக நிரூபிக்கப்பட்ட உஜாலாவின் இன்ஸ்டா வைட்னிங் சிஸ்டம் (I.W.S.)™ இது தண்ணீரில் உடனடியாகக் கரைவதோடு, துணிகளின் நுட்பமான நூலிழைகளினுள் ஆழ்ந்து ஊடுருவிவெண்மையின் வெளிச்சத்தை துணிகளில் உடனடியாய் வெளிக்கொணர்கிறது. துணிகள் மீண்டும் துவைக்கும்போது அழுக்குடன் முழுவதும் வெளியே தள்ளப்பட்டு விடுகிறது. நாட்கள் பல ஆனாலும் துணிகளின் இயல்பான வண்ணம் மாறாமல் புதிது போலவே பாதுகாக்கிறது. ஸ்கின் இரிட்டேஷன்-ஓரல் டாக்சிசிடி சோதனைகளில் பாதுகாப்பானது என ஆதாரபூர்வமாக கண்டறியப்பட்ட தயாரிப்பு உஜாலா ஒன்றே.

1983 முதல் அனேக கோடி உள்நாடு-வெளிநாடு வாடிக்கையாளர்களுக்கு முழுதிருப்தியை உஜாலா வழங்கிக் கொண்டிருக்கிறது. பாரத நாடெங்கும் பல மாநிலங்களில் உள்ள ஜோதி லேபின் விஞ்ஞான தொழில் நுட்ப மேன்மை மூலம் கடும் தரக்கட்டுப்பாடு முறைகளால் தயாரிக்கப்பட்டு ஒவ்வொரு உஜாலாவும் உங்களை அடைகிறது.

விஞ்ஞான ஆதாரமற்ற முறையில், இரசாயன நிறுவனங்கள் தயாரிக்கும், நூலிழைகளை பலவீனப்படுத்தும், வண்ணம் குறைக்கும் மூலப்பொருட்கள் ஏதும் இதில் இல்லை. தரங்குறைந்த, கலப்பட இரசாயனக் கலவைகள் உங்களின் துணிகளுக்கு சேதம் ஏற்படுத்த இடம் அளிக்காதீர்கள்.

உஜாலா என கேட்டு வாங்கும் போது விஞ்ஞானபூர்வமற்ற ஏதேனும் ஒரு போலி தயாரிப்பை நீங்கள் பெறவில்லை என்பதை உறுதிசெய்து கொள்ளுங்கள்.




வெண்மையின் புதிய நிறம்

A product of Jyothy Laboratories Ltd.

புலிகள்



2000 ஜனவரி 16
பிரமாதி தை 2
மலர் : 58
இதழ் : 25

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## ஆர்.எஸ்.எஸ்ஸுக்குச் சிறப்புச் சலுகை!

அரசு அதிகாரிகளும் ஊழியர்களும் ஆர்.எஸ்.எஸ்., வி.எச்.பி., ஆனந்த் மார்க், மஜ்லிஸ் ஈ-முஷாரத் போன்ற சில அமைப்புகளில் சேரலாகாது என்பது மத்திய அரசாங்கத்தின் விதி. குஜராத் மாநில அரசு இந்த விதியை 1971 முதல் தமது மாநில அரசு ஊழியர்களுக்கும் உரியதாக அமுல்படுத்தி வந்தது.

சமீபத்தில் திடீரென்று விழித்துக் கொண்டு மத்திய அரசின் உள்துறை அமைச்சகத்திடம் மனு செய்தது குஜராத்தில் ஆட்சி செய்யும் பி.ஜே.பி. அரசு. ஆர்.எஸ்.எஸ்ஸில் சேர அரசு ஊழியர்களுக்குத் தடைவிதிப்பது முறையல்ல என்றும், அத்தடை நீக்கப்பட வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டது. உள்துறை அமைச்சகமும் உடனே கோரிக்கையைப் பரிசீலித்தது. 'ஆர்.எஸ்.எஸ். நடவடிக்கைகள் சட்டவிரோதமானவை அல்ல. இதை சட்டவிரோத நடவடிக்கைகள் தடுப்பு நடுவர் மன்றக் குழுவே ஒப்புக் கொண்டிருக்கிறது. அதனால் இனி அரசு ஊழியர்கள் ஆர்.எஸ்.எஸ்ஸில் சேரவும் பணியாற்றவும் தடை தேவையில்லை' என்று குஜராத் அரசுக்குக் கடிதமே அனுப்பி விட்டார் உள்துறை இணை அமைச்சர் ஹரேன் பாண்ட்யா!

இந்தக் கடிதத்தின் அடிப்படையில்தான் குஜராத் அரசு செயல்பட்டிருக்கிறது. பல அமைப்புகளில் சேர அரசு ஊழியர்களுக்குத் தடையிருக்க, அவற்றுள் ஆர்.எஸ்.எஸ். மீதான தடையை மட்டும் நீக்கியிருக்கிறது.

ஆர்.எஸ்.எஸ்ஸுக்குக் காட்டப்படும் இந்தச் சிறப்புச் சலுகை, அகமதாபாத்தின் புறநகர்ப்




பகுதியில் நடக்கவுள்ள மூன்று நாள் ஆர்.எஸ்.எஸ். கூட்டத்துக்கு இரு தினங்கள் முன்னதாக வெளியாகியிருப்பது மத்திய - மாநில (குஜராத்) அரசுகளின் உள்நோக்கத்துக்குப் பிரத்யட்சமான சாட்சி! அதிலும், 25,000 தொண்டர்கள் பங்கேற்கும் அமைப்புரீதியான கூட்டம் இது. பொது மக்களுக்கு இதில் அனுமதி கிடையாது.

ஆர்.எஸ்.எஸ். அமைப்பு சட்டவிரோதமானது அல்ல; அதன் நடவடிக்கைகளும் சட்ட விரோதமானவை அல்ல என்பதுதான் உள்துறை அமைச்சகத்தின் வாதம். அப்படியானால் தடைசெய்யப்பட்ட இதர அமைப்புகள் பற்றிய ஆய்வோ அறிக்கையோ ஏன் வெளியிடப்படவில்லை? ஆர்.எஸ்.எஸ். மீதான தடை மட்டும் ஆராயப்பட்டு நீக்கப்பட காரணம் என்ன?

'மத்திய பி.ஜே.பி. அரசும் குஜராத் மாநில பி.ஜே.பி. அரசும் இணைந்து குஜராத்தை ஹிந்து மாநிலமாக மாற்றப் பார்க்கின்றன. இந்தியாவை காவி மயமாக்க முற்பட்டிருக்கிறது பி.ஜே.பி.' என்று காங்கிரஸ் கட்சி ஏற்கெனவே நியாயமான எதிர்ப்பு தெரிவித்து விட்டது.

ஆர்.எஸ்.எஸ். போன்ற அமைப்புகள் சட்டத்துக்கு உட்பட்டுச் செயல்படலாம். ஆனால் அரசு ஊழியர்களும் அதிகாரிகளும் அவற்றோடு தொடர்பு வைத்துக் கொள்வதோ அவற்றின் தொண்டர்களாக மாறுவதோ முறையற்ற காரியம். ஜாதி, சமயச் சார்புள்ள அமைப்புகளிடமிருந்து அவர்கள் விலகியிருப்பதுதான் தர்மம்.

அரசியல்வாதிகளுக்கும் இந்த தர்மம் பொருந்தும் என்றாலும் அவர்கள் தார்மிக நெறிகளைத் தூக்கியெறிந்து விட்டார்கள். இப்போது அரசு அதிகாரிகளுக்கும் அவற்றைத் தூக்கியெறிய வசதி வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுத்து, தங்கள் வழியிலேயே குட்டிச்சுவராக அழைப்பு விடுக்கிறார்கள்.

மத்திய அரசின் முக்கிய அதிகாரிகள் ஆர்.எஸ்.எஸ். பின்னணியைச் சேர்ந்தவர்களாக இருக்கிறார்கள் என்ற குற்றச்சாட்டு எழுந்தபோது அதை மறுத்தது அரசு. ஆனால் இப்போதோ, அனைத்து அதிகாரிகளுக்கும் ஆர்.எஸ்.எஸ். கதவுகள் திறந்துவிடப்பட்டுள்ளன. ஆட்சியாளர்களைத் திருப்திப்படுத்தும் நோக்கில்தான் அதிகாரிகளும் செயல்படுவார்கள்.




அரசியலில் மற்றுமொரு பயங்கரமான திருப்பத்திற்கு இது ஆரம்பமாக அமைந்து விடக்கூடும்!

## ஹைஜாக் ஆகும் நிஜங்கள்!

"சமீபத்திய ஹைஜாக்கைப் பின்னணியிலிருந்து இயக்கியிருப்பது பாகிஸ்தான்தான். அதற்கான ஆதாரங்கள் உள்ளன" என்கிறார் பிரதமர். "உரிய நேரத்தில் அவற்றை வெளியிடுவோம்" என்று சஸ்பென்ஸும் வைக்கிறார்.

பிரதமர் பட்டவர்த்தனமாகத் தெரிவிக்காவிட்டாலும் இந்திய விமானத்தைக் கடத்திய இஸ்லாமிய தீவிரவாதிகளுக்குப் பாகிஸ்தான் ஆதரவு இருந்திருக்க வேண்டும் என்பதை யூகிப்பது கஷ்டமேயில்லை. சராசரி இந்தியர்கள் யாவருமே அந்த முடிவுக்கு வந்திருப்பார்கள்.

இந்நிலையில், நடந்து முடிந்த நிகழ்வுகளுக்கு பாகிஸ்தான்தான் காரணம் என்பது போன்ற தொனியில் பிரதமர் திரும்பத் திரும்பப் பேசி வருவது அருவருக்கத்தக்கதாயிருக்கிறது.

பாகிஸ்தானின் விரோதப் போக்கும் பயங்கரவாதிகள், தீவிரவாதிகளின் பதுங்கிப் பாயும் தந்திரமும் ஒற்றாடல் மூலமாகவும் மாற்று ஒற்றாடல் (counter espionage) மூலமாகவும் சந்திக்கப்பட வேண்டியவை. அதில் ஒரேயடியாகக் கோட்டை விட்டு விட்டு, பின்னர் பாகிஸ்தான் விரோதப் பேச்சுகளைத் தொடர்ந்து உதிர்ப்பது உதவாது.

நமது பாதுகாப்புப் பிரிவும் உள்துறை அமைச்சகமும் விமானப் பயணத் துறையும் எங்கு தவறிழைத்தன? எப்படி கோட்டை விட்டன? பாதுகாப்பு விதிகள் புறக்கணிக்கப்பட்டது எந்த கட்டத்தில்? அதற்கு யார் பொறுப்பு? எடுக்க வேண்டிய நடவடிக்கை என்ன...? போன்ற ஒரு கேள்வியைக் கூட பிரதமரோ உள்துறை அமைச்சரோ எழுப்பவில்லை.

இவ்விஷயங்களை ஆராய்ந்து விரைவில் ஓட்டைகளை அடைத்து பாதுகாப்பைப் பலப்படுத்துவதில் கவனம் திசை திரும்பட்டும். அதைச் செய்யாமல் பாகிஸ்தானை வார்த்தைகளால் நையப் புடைப்பது நமது பாதுகாப்பை மேலும் பலவீனப்படுத்தவே செய்யும்.

**தமிழக அரசின் பாடத் திட்டத்தின் கீழ் இயங்குகிற பள்ளிகளில் படிக்கும் எல்லாக் குழந்தைகளும் ஐந்தாம் வகுப்பு வரை தமிழில்தான் படிக்க வேண்டும் என்று அரசு உத்தரவு பிறப்பித்திருக்கிறது. பள்ளிகள் இதை**

# விதிமுறைகளை மீறுவது தனிமனித உரிமை ஆகாது!

**எதிர்க்கின்றன. பேராசிரியர் மா. நன்னனும் வழக்குரைஞர் கே. எம். விஜயனும் காரசாரமாக விவாதிக்கிறார்கள்....**

**மா. நன்னன் :** தமிழ்நாட்டிலுள்ள தமிழ்க் குழந்தைகளுக்குத் தமிழில் கற்பிப்பதுதான் முறை; சரி என்று நான் நினைக்கிறேன்.

**கே. எம். விஜயன் :** நானும் தமிழன் தான் – தமிழ் ரசிகன்தான் என்றாலும் மொழியைப் பற்றி நான் வேறொரு கண்ணோட்டத்தை வைத்திருக்கிறேன். மொழி என்பது ஒரு தொடர்பு சாதனம். அதனால் எந்தக் காலத்திலும் மொழி மொழிக்காகவே வளர்ந்ததில்லை. அது வளர வேண்டுமானால் வேறொரு விஷயம் வேண்டும். சரித்திர காலத்திலிருந்து நாம் பார்த்தோமானால், ஆழ்வார்களும் நாயன்மார்களும் அழகாகப் பாடினார்கள். அவர்கள் பாடியது தமிழ் வளர்ச்சிக்காக அல்ல; சமய, பக்தி வளர்ச்சிக்காகத்தான் தமிழைப் பயன்படுத்தினார்கள். பிறகு கிறிஸ்துவத்தைப் பரப்புவதற்காகத்தான் வீரமாமுனிவர் தமிழைக் கற்று, அதை மேலும் எளிமைப் படுத்தினார். அண்மைக் காலத்தில் பார்த்தாலும் மணிக்கொடி காலத்தில் தொடங்கி கல்கி வரையிலும் அதன் பிறகு இன்று வரையிலும் பத்திரிகைத் துறைக்காக தமிழ் மேலும் எளிமைப்படுத்தப்பட்டது. ஆக, மொழியை ஒரு கருவியாக – ஊடகமாகத் தான் பார்க்க வேண்டுமே தவிர, அதைத் தாண்டி அதன் மேல் கண்மூடித்தனமானதொரு வெறியை நாம் வளர்த்துக் கொண்டுவிடக் கூடாது என்கிறேன்.

**நன்னன் :** மொழி என்பது ஒரு கருவிதான். மொழி என்பது மொழிக்காக அல்ல. மொழி மட்டுமல்ல; உலகத்திலுள்ள எல்லாமே மனிதனுக்



காகத்தான் என்பதில் எனக்கும் கருத்து வேறுபாடு இல்லை. ஆனால், தமிழ்நாட்டில் தமிழ் ஆட்சி மொழி; தாய்மொழி. இந்த நிலையில் தமிழ்க் குழந்தைகளுக்குத் தமிழ் கற்றுக் கொள்கிற உரிமை பள்ளிகளில் மறுக்கப்படும்போது அதைப் பெற்றுத் தர

வேண்டியது அரசின் - கல்வியாளர்களின் கடமையல்லவா! சாலை இருக்கிறது. அதில் செல்ல சில விதிமுறைகள் இருக்கின்றன. சாலையில் செல்லும் போது சாலை விதிகளைப் பின்பற்றித்தான் ஆக வேண்டும். அதை நான் பின்பற்ற மாட்டேன்; அது எனது உரிமைகளைப் பாதிக்கிறது என்று சொல்வது சரியாகாது. அது போல், தமிழ்நாட்டிலுள்ள தமிழ்க் குழந்தைகள் ஐந்தாம் வகுப்பு



வரை தமிழில்தான் படிக்க வேண்டும் என்கிற ஒரு விதிமுறையை அரசு வகுத்திருக்கிறது. அது தனிமனித உரிமைகளைப் பாதிக்கிறது என்பது எப்படிச் சரியாகும்?

**விஜயன்** : சாலை விதிகள் கூடாது என்பதல்ல எனது வாதம். இந்த வாதங்களைத்தான் நீதிமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்டுள்ள அஃபிடவிட்டிலும் தெரிவித்திருக்கிறேன்.

# மணிக்கொடி காலத்தில் வளர்ந்த தமிழைவிட தமிழ்க்குடிமகன் காலத்தில் அழிந்த தமிழ் அதிகம்!

எனது வசதிக்கேற்பவும் விருப்பத்துக்கேற்பவும் நான் சைக்கிளிலோ, பைக்கிலோ, காரிலோ செல்வதை அரசு தடுத்து, நீ சைக்கிளில்தான் செல்ல வேண்டும் என்று சொல்வது எப்படிச் சரியாகும்? தமிழ்நாட்டிலுள்ள அனைவரும் தமிழ் தெரிந்திருக்க வேண்டும், குழந்தைகளும் தமிழ் படிக்க வேண்டும் என்பதில் எனக்கும் கருத்து மாறுபாடு கிடையாது. ஆனால் ஐந்தாம் வகுப்பு வரை தமிழில் மட்டுமே படிக்க வேண்டும் என்பது எப்படிச் சரியாகும்?

**நன்னன்** : ஒரு குழந்தைக்கான தொடக்கக் கல்வியை அதன் தாய்மொழியில் கற்றுத் தருவதுதான் சிறந்தது; சுலபமானது. ஓர் உதாரணம் சொல்கிறேன். பிறந்த குழந்தைக்கு முதலில் என்ன கற்றுத் தருகிறோம்? அம்மா, அப்பா, தாத்தா, பாட்டி, மாமா... என்றுதான் கற்றுத் தருகிறோம். இந்த நிலையில் அந்தக் குழந்தைக்கு அம்மா என்றதும் அம்மாவின் முகம் நினைவுக்கு வருகிறது; அப்பாவின் முகம் நினைவுக்கு வருகிறது. இப்படித்தான் ஒவ்வொரு சொல்லுக்கும் அது தொடர்பான உருவமோ செய்திகளோ நினைவுக்கு வருகின்றன. அதாவது ஏற்கெனவே அம்மா என்கிற ஒலி வடிவமும் அம்மா என்பதற்கான உருவ வடிவமும் அந்தக் குழந்தைக்குத் தெரிந்து விடுகிறது. மூன்றாவது கட்டமான எழுத்து வடிவத்தைக் கற்றுக் கொள்வதற்காகத்தான் பள்ளிக்கூடத்துக்கு வருகிறது. இந்த



மூன்றாவது கட்டத்தைத் தாய் மொழியில் – தமிழ்மொழியில் கற்றுத் தருகிறபோது அது சுலபமாக வரி வடிவத்தையும் கற்றுக் கொள்கிறது. ஆனால் மம்மி, டாடி என்று ஒரு புது மொழியில் பள்ளியில் படிக்க நேர்கிற போது ஒலி வடிவம், உருவ வடிவம், வரி வடிவம் என்று மூன்று கட்டங்களையும் புதிதாகத் தான் கற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது. அதோடு அம்மா என்பதும் மம்மி என்பதும் ஒன்றுதான் என்பதையும் கூடுதலாகக் கற்றுக் கொள்ள வேண்டியிருப்பதால் ஒரு சிறு குழந்தைக்குத் தேவையில்லாத மனச்சுமை களைத் தர வேண்டியிருக்கிறது. இது அவசியமில்லை என்பதுதான் என்னைப் போன்றோரின் கருத்து.

**விஜயன்** : என் தாத்தாவுக்குத் தாத்தா காலத்தில் அவரது தொடர்பும் வியாபார மும் ஒரு மிகச் சிறிய வட்டத்துக்குள்ளேயே இருந்தது. அதிகபட்சமாக அவர் பயணம் செய்ததெல்லாம் தாலுகா தலைநகர் வரைக்குமாகத்தான் இருந்தது. அதனால் அவருக்குத் தமிழே போதுமானதாக இருந் தது. ஆனால் என் தலைமுறையில் தமிழர் கள் இந்தியா முழுவதும், ஏன் வெளிநாடு களுக்கும் சென்று வியாபித்து விட்டனர். எனவே, எனக்குத் தொடர்பு மொழியாகவும் வியாபார மொழியாகவும் ஆங்கிலம் அவசியமாகிறது. எனக்கு அடுத்த தலை முறையினருக்கு அவர்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் ஆங்கிலத்தைத் தவிர்க் கவே முடியாது. காரணம், தாராளமயமாக் கலாலும் தகவல் தொடர்புகளாலும் இன் றைய உலகம் மிகச் சிறியதாகி விட்டது. அதாவது இன்றைய குழந்தை என்பது உலகக் குழந்தை என்கிற நிலையில்தான் இருக்கிறது. இந்த நிலையில் உலகத்தில் அதிகமாக உபயோகப்பட்டுக் கொண்டிருக் கிற தொடர்பு மொழியான ஆங்கிலத்தை எந்த நிலையிலும் ஒதுக்கி விடமுடியாது. இப்படியிருக்க, ஆரம்பத்திலிருந்தே ஆங்கிலம் கற்றுக் கொள்வதை அரசு ஆணை தடைசெய்வது என்பது என்ன நியாயம்?

**நன்னன்** : இன்றைக்கு ஆங்கிலம் இல்லாமல் வாழ முடியாது என் பதை நானும் என்னைப் போன்றோ ரும் நூற்றுக்கு நூறு அப்படியே வழி மொழிந்து ஏற்றுக் கொள்கிறோம். மாற்றுக் கருத்தே இல்லை. ஆனால், ஆங்கிலத்தை ஆறாம் வகுப்பிலிருந்து பன்னிரண்டாம் வகுப்பு வரைக்குமான ஏழு ஆண்டுகள் படித்தாலே கற்றுக் கொள்ள முடியும். இது தான் எங்கள் கருத்து.

**விஜயன்** : உண்மையிலேயே தமிழ் வளர வேண்டுமானால், தமிழ் இலக்கியம் தொடர் பான சந்தேகங்களை நான் போக்கிக் கொள் வதற்கு இன்டர்நெட் போன்ற தகவல் தொடர்புச் சாதனங்களில் தமிழுக்காக முழுமையான 'களஞ்சியம்' இருக்க வேண் டும். இந்த இன்டர்நெட் யுகத்தில் இனி நமது குழந்தைகள் நூலகங்களுக்குச் சென்று நூல்களைப் புரட்டியெல்லாம் தெரிந்து கொள்ள மாட்டார்கள். எதற்கெடுத்தாலும் இனி இன்டர்நெட்டைத்தான் நாடுவார்கள் என்கிற நிலையில், அவர்களுக்கு உபயோகப் படுகிற வகையில் தமிழ்க் களஞ்சியங்களை உருவாக்குவதை விட்டு விட்டு, இப்படி யொரு அரசாணை மூலமாகத் தமிழை வளர்க்க முடியாது என்கிறேன்.

**நன்னன்** : தமிழ்க் களஞ்சியங்களை இணையத்தில் கிடைக்குமாறு செய்ய வேண்டும் என்பதில் எனக்கும் கருத்து மாறுபாடு இல்லை. ஆனால் கூடி வாழ்கிற ஒரு சமுதாயத்தில் சில விதிமுறைகள் தேவை. அதை மீறுவது தனிமனித உரிமை யாகாது.

**விஜயன்** : முழுக்க முழுக்க அரசாங் கமே நடத்துகிற பள்ளிகளில் ஐந்தாம் வகுப்பு வரை தமிழில்தான் படிக்க வேண் டும் என்றால் சரி. ஆனால் அரசு உதவியே பெறாத பள்ளிகளிலும் இதே விதியைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பது எப்படிச் சரி? அதிலும் மைனாரிடி பள்ளிகளுக்கும் சென்ட்ரல் போர்டு பள்ளிகளுக்கும் இந்த ஆணை பொருந்தாது என்று அரசே சொல்லியிருக்கிறது. ஆக, ஆங்கிலத்தின் தேவையையுணர்ந்து, இன்றைய குழந்தைகள்

அரசின் உதவியை நாடாத பள்ளிகளில் சென்று படிக்க விரும்பினாலும் அங்கு இந்த வசதிக்கு அரசு இடைஞ்சலாக இருப்பது என்ன நியாயம்? இது தனிமனித உரிமையைப் பாதிப்பதாகாதா? இன்னும் சொல்லப் போனால் மணிக்கொடி காலத்தில் வளர்ந்த தமிழை விட தமிழ்க் குடிமகன் காலத்தில் அழிந்த தமிழ் அதிகம் என்கிறேன். உதாரணத்துக்குக் காட்டு ராணி என்கிற படத்தில், கவிஞர் கண்ணதாசன் 'மூங்கில் இலை மேலே தூங்கும் பனி நீரே' என்று இலக்கிய வரிகளை எடுத்துக் கையாண்டிருக்கிறார். ஆனால் இன்றைய அரசுக் கவிஞர் வைரமுத்து, 'ஷக்கலக்க பேபி ஷக்கலக்க பேபி லவ் பண்ணத் தோணலையா?' என்கிறார். இந்த நிலையில் தமிழ் வளர்ந்திருக்கிறதா என்பதுதான் கேள்வி.

**நன்னன்** : இந்த அளவுக்குத் தமிழ் நாசமாய்ப் போவதற்குக் காரணமே ஆங்கிலத்தின் மூலம் படிப்பது தான். இன்னும் கூட தான் உதாரணம் சொல்கிறேன். 'அந்தப் பச்சை நாற்காலியை எடுத்துக் கொண்டு வா!' என்று இன்றைய குழந்தையிடம் கூறினால், 'யு மீன் கிரீன்' என்று அதை ஆங்கிலப் படுத்திக் கொண்டு தான் செய்கிறது. இது நாளடைவில் நமது பண்பாட்டையே சீர்குலைத்து விடாதா? இது தவிர்க்கப்பட வேண்டாமா?



**விஜயன்** : இன்றையக் குழந்தைகள் ஆங்கிலத்திலேயே சிந்திக்கின்றன என்கிறீர்கள். அப்படியிருக்கும்போது அவர்களின் மேல் தமிழைத் திணிப்பானேன்?

**நன்னன்** : ஆங்கிலத்திலேயே சிந்திப்பதால் தமிழை மறந்து போய் விடக்கூடாதல்லவா! ஒரு மொழி மறந்து போனால் அந்த மொழி சார்ந்த பண்பாடுகளும் காணாமல் போய்விடுமே!

**விஜயன்** : தமிழ் படிக்க வேண்டும் என்பதில் எனக்கும் கருத்து மாறுபாடே இல்லை. முதல் வகுப்பிலிருந்து பன்னிரண்டாம் வகுப்பு வரை தமிழை ஒரு கட்டாயப் பாடமாகப் படிக்கச் சொன்னால் பிரச்னை இல்லை.

**நன்னன்** : தமிழை ஒரு மொழியாக மட்டும் படித்தால் போதாது. அதில் சரித்திரம், விஞ்ஞானம், கணிதம் என்று எல்லாவற்றையும் படிக்க வேண்டும். எனவேதான் குறைந்தபட்சம் ஐந்தாம் வகுப்பு வரை மட்டுமாவது அப்படிப் படிக்கச் சொல்கிறோம்.

**விஜயன்** : தமிழ் வளர்வதற்கும் வாழ்வதற்கும் இதுவொரு நல்ல வழி என்கிறீர்கள். அதில் எனக்கு உடன்பாடில்லை. உதாரணமாக கிரேக்க மொழியை எடுத்துக் கொள்வோம். அதில்தான் பண்டைக் காலத்தில், கணிதம், தத்துவம், அரசியல் என்று பல விஷயங்களும் சிறப்பான முறையில் சொல்லப்பட்டன. ஆனாலும் கிரேக்க மொழி இன்றைக்கு எங்கே வளர்ந்திருக்கிறது? சமஸ்கிருதத்தில்தான் வேதங்கள் இருக்கின்றன. ஆனால் அது இன்றைக்குப் பேச்சு மொழியாக இருக்கிறதா என்ன? ஆக,

**ஆர். சௌந்தரராஜன்**
**(முன்னாள் அமைச்சர்)**

நான் சின்னப் பையனா இருந்தப்ப எங்கப்பா கோயம்புத்தூர், கிருஷ்ணா ஸ்வீட்ஸ்லேந்து மைசூர்ப் பாகு வாங்கி வருவார். இன்று வரைக்கும் நான் அதுக்கு ஒரு ரசிகனாகவே இருக்கேன். என்னோட அப்பா காலத்துலேந்து இன்று வரைக்கும் அந்த டேஸ்ட் மாறாம, குறையாம இருக்குது. மத்தபடி நான் எந்த ஓட்டல்லயும் போயி சாப்பிட்டதில்லே. எந்தவொரு உணவு வகையாக இருந்தாலும் அதை வீட்டிலேயே எனது மனைவி செய்து தந்துவிடுவாள். வீட்டைத் தவிர நான் எங்காவது வெளியில் சாப்பிடுறதுன்னா அது ரெங்கநாதர் கோயில் பிரசாதமாத்தான் இருக்கும்! பெருமாள் பிரசாதமாகக் கிடைக்கற கல்கண்டு மைசூர்ப்பாகு, அரவணை, அதிரசம் ஆகியவை எனக்கு மிகவும் பிடித்தவை.



## முருங்கைக்காயில் ஒரு வித்தியாச கூட்டு!

எண்ணெய்யை வாணலியில் விட்டு, கடுகு, கடலைப் பருப்பு, உளுத்தம் பருப்பெல்லாம் போட்டு தாளித்துக் கொள்ளுங்கள். பொடியாக நறுக்கிய (இரண்டு) பெரிய வெங்காயத்தை எண்ணெய்யில் போட்டு வதக்குங்கள். அது வதங்கியதும் துண்டு துண்டாக நறுக்கி வைத்திருக்கும் (நான்கு) முருங்கைக்காய்களையும் போட்டு, காரத்துக்கேற்ப மிளகாய்த் தூள், சிறிது மஞ்சள் தூள் ஆகியவற்றையும் சேர்த்து வதக்குங்கள். அடுப்பைக் குறைத்து, சிறிதளவு தண்ணீர் கலந்து வேக விடுங்கள். அடிபிடிக்காமல் அவ்வப்போது கிளறி விட்டுக் கொண்டேயிருக்க வேண்டும். இறுதியில் காய்ச்சிய பால் அரை தம்ளரை விட்டு, கொதி வந்ததும் இறக்கி விடுங்கள்.

சாதத்தில் பிசைந்து சாப்பிட சூப்பரோ சூப்பர் சுவையாக இருக்கும்.

– இந்தச் சமையல் குறிப்பைச் சொன்னதோடு, செய்தும் காட்டியவர் சேது படத்தில் கதாநாயகனின் தங்கையாக நடித்த லாவண்யா.

அட்டை வண்ணப்படமும் படமும் :
**பிரவீண்குமார்**

ஒரு மொழி வாழ்வதும் சாவதும் அரசு ஆணையில் நடக்காத காரியம் என்றே கருதுகிறேன்.

**நன்னன்** : வேறு எப்படித் தமிழ் வளரும் என்கிறீர்கள்?

**விஜயன்** : தமிழ் வளர்வதற்கான தளங்களும் உபகரணங்களும் பள்ளிக்கு வெளியில் நிர்மாணிக்கப்பட வேண்டும். அவையெல்லாம் அனைவருக்கும் சுலபமாகக் கிடைக்கும்படிச் செய்ய வேண்டும். இவற்றையெல்லாம் விட்டு விட்டு வெற்று கோஷங்களால் தமிழ் வளர்ந்து விடாது என்கிறேன்.

**விஜயன்** : தமிழ் வளர்வதற்கான தளங்கள் நிறைய அமைக்கப்பட வேண்டும் என்பதை நானும் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அவை ஏன் இப்போது இல்லை? எல்லாமே ஆங்கிலத்தில் படிப்பதால் – ஆங்கிலத்திலேயே தெரிந்து கொள்ள விரும்புவதால் அதற்கான தேவை ஏற்படாமல் போகிறது. தேவைகள் உருவானால் நிச்சயம் தளங்களும் வந்து விடும்.

**விஜயன்** : வாழ்க்கையை இரண்டு விதமாகப் பார்க்கலாம். ஒன்று மொழிசார்ந்த வாழ்க்கை. அது தமிழாசிரியர்கள், எழுத்தாளர்கள் போன்றோருக்கு மட்டுமே சாத்தியம். பிறரெல்லாம் பிழைப்புச் சார்ந்த வாழ்க்கையைத்தான் வாழ்கிறார்கள். அந்தப் பிழைப்புக்கு எது தேவையோ அதை அவர்கள் தேடிப் போய் கற்றுக் கொள்கிறார்கள். இன்றைய தமிழன் என்பவன் தமிழ்க் குடிமகன் மட்டுமல்ல; இந்தியக் குடிமகன் மட்டுமல்ல; உலகக் குடிமகன். இன்றையச் சூழலில் பிழைப்புச் சார்ந்த வாழ்க்கைக்கு உலகக் குடிமகனாகத்தான் இருந்தாக வேண்டும். ஆனால், அரசின் இந்த ஆணை இந்த யதார்த்த சூழ்நிலையை மனத்தில் கொள்ளாமல் பிறப்பிக்கப்பட்டிருக்கிறது என்பதே எனது கருத்து.

**நன்னன்** : இன்றைக்கு ஆங்கிலம் எவ்வளவு அவசியமானது என்பதை நானும் உணராமல் இல்லை. அது தவிர்க்க முடியாத ஒரு மொழி; அனைவரும் கற்றுக் கொள்ள வேண்டிய ஒரு மொழி என்பதிலும் எனக்குக் கருத்து மாறுபாடு இல்லை. ஆனால், சில தனியார் பள்ளிகளில், அந்தப் பள்ளி எல்லைக்குள் தமிழில் பேசினாலே அபராதம் விதிக்கிற நிலை இருக்கிறது. இதற்கு என்ன அர்த்தம்? தமிழை அடியோடு ஒழித்துக் கட்டுகிற முயற்சியல்லவா! அப்படியொரு நிலை வந்து விடக்கூடாது. ஆங்கிலம் சொல்லித் தருவதை யாரும் தடுக்கவில்லை. ஆனால் ஒரு குழந்தையை ஆங்கிலேயனைப் போலவே ஆக்குகிற முயற்சியைத்தான் சில பள்ளிகளில் பார்க்கிறோம். அதனால் அந்தக் குழந்தைகள் மனத்தளவில் பிறரோடு ஒட்டாமலேயே போகிறார்கள். இந்த நிலை மாற வேண்டுமானால் ஐந்தாம் வகுப்பு வரை தமிழில் படிப்பதுதான் சிறந்த வழியாகப்படுகிறது. அதோடு உலகிலுள்ள பல மொழியியல் அறிஞர்களும் ஒரு குழந்தை தொடக்கக் கல்வியை அதன் தாய்மொழியில் கற்றுக் கொள்கிறபோது, சுலபமாகக் கற்றுக் கொள்ளும் என்றே கூறியிருக்கிறார்கள். எனவே குழந்தைகளின் மனச்சுமையைக் குறைக்கிற நோக்கத்துடனேயே அரசு இந்த ஆணையைப் பிறப்பித்திருக்கிறது. மற்றபடி ஆங்கிலத்தைப் புறக்கணிப்பதற்காக அல்ல.

தொகுப்பு: **எஸ்.ஐ., ஆர்.எஸ்.**
படங்கள்: **ஸ்ரீஹரி**





# நாயுடுவின் காற்றாடித் திருவிழா!

● இல்டு ஆஃப் சர்வீஸ் அமைப்பின் சார்பில் அதன் சேர்மன் மோகினி கிரி, பாராளுமன்றத்தின் பெண் எம்.பிக்களுக்கு ஒரு பாராட்டு விழா ஏற்பாடு செய்தார். விழா ஒருவழியாக நடந்து முடிந்து விட்டது என்றாலும் அம்மையாருக்கு ரொம்பவே வருத்தம். காரணம், அவர் நிச்சயம் வருவார் என்று எதிர்பார்த்த சோனியா காந்தி, வராமல் ஏமாற்றி விட்டார். வந்த பெண் எம்.பிக்களைப் பேச அழைத்தபோது, ஒவ்வொருத்தரும் தான் எப்படி, எவ்வளவு வோட்டு வித்தியாசத்தில் ஜெயித்தேன் என்று சுயபுராணம் பாடினார்களேயொழிய, பெண் சமுதாயத்துக்கு என்ன செய்யப் போகிறார்கள் என்று பேசவில்லை. நிகழ்ச்சியின் இடையிலே வந்த ஷபனா ஆஸ்மி கூட, பேசி முடித்து விட்டு, நடையைக் கட்டி விட்டார்! சொல்லிச் சொல்லி மாய்ந்து போகிறார் மோகினி கிரி.

● லோக் சபாவில் எதிர்க்கட்சித் தலைவராக சரத்பவார் இருந்தபோது, பாராளுமன்றத்தின் தரைத் தளத்தில் உள்ள எதிர்க்கட்சித் தலைவர் அறையில் ஒரு பெரிய டேபிள், சில நாற்காலிகள், சில சோபாக்கள் என்று சாதாரணமாக இருக்கும். இப்போது, எதிர்க் கட்சித் தலைவராக சோனியா ஆனவுடன், அந்த அறையை அடியோடு மாற்றி அமைக்கும் பணி ஆரம்பித்து விட்டது. புராதன கலைப் பொருட்கள், வருவோர் கண்ணில் படும்படியாக வைக்கப்பட்டுள்ளன. சாதாரண டேபிள், சேர்களுக்கு பதில் கலைநயத்துடன் உருவாக்கப்பட்ட மேஜை, நாற்காலிகள் வந்து விட்டன. இதையெல்லாம் செய்திருப்பவர், சோனியா குடும்பத்துக்கு மிக நெருக்கமான கனிதா கோலி என்ற இன்டீரியர் டிசைனர்தான்!

● "நான் ஒரு வி.வி.ஐ.பி." என்று தனக்கு நெருங்கியவர்களிடமெல்லாம் சொல்லி வருகிறார் பதவியிழந்த ஒரிசா முதல்வர் கிரிதர் கோமாங். ஆனால் வி.வி.ஐ.பி. என்பதற்கு இவர்தரும் விளக்கம் என்ன தெரியுமா? Victim of vested interest in politics.

● ஆந்திரப் பிரதேச முதலமைச்சர் சந்திரபாபு நாயுடுவின் பெயரைக் கேட்டவுடன் உங்களுக்கு கம்ப்யூட்டர் ஞாபகம்தானே வருகிறது? இனி காற்றாடி ஞாபகமும் வரும். ஆம்! பொங்கல் சீசனில் ஹைதராபாத்தில், பெரிய அளவில் காற்றாடித் திருவிழா ஒன்று நடத்துகிறார் நாயுடு. இதற்கென, மத்திய சுற்றுலா அமைச்சர் உமாபாரதியிடம் ஸ்பெஷலாகப் பேசி, இருபது அயல்நாட்டு காற்றாடி நிபுணர்கள் இந்தியா வந்து போக இலவச பாஸுக்கு ஏற்பாடு செய்து வரவழைத்திருக்கிறார்.

● பா.ஜ.க.விலிருந்து நீக்கப்பட்ட கல்யாண்சிங், தமது அடுத்தகட்ட நடவடிக்கை என்ன என்பதை முடிவு செய்து விட்டார். இரண்டு தொகுதிகளில் நின்று வெற்றி பெற்று, ஒரு தொகுதியிலிருந்து ராஜினாமா செய்து விட்டார். விரைவில் அங்கு நடக்கவிருக்கும் இடைத்தேர்தலில், முலாயம்சிங்குடன் ஒரு 'அண்டர்ஸ்டாண்டிங்'கில் போட்டியிடப் போகிறார் கல்யாண் சிங். பாராளுமன்றத்துக்குள் நுழைந்து, சமயம் கிடைக்கிறபோதெல்லாம் 'அயோத்தி' பிரச்னையைக் கிளப்பி, பிரதமருக்கு தர்மசங்கடம் ஏற்படுத்துவதுதான் கல்யாண் சிங்கின் 'லட்சிய'மாம்!

— நியூஸ்வாலா




• இரவு, பனகல் பார்க் அருகே...

ஓர் உடுப்பி ஹோட்டலையே தெருவுக்கு கொண்டு வரும் நாராயண ரெட்டி, கடந்த பத்து வருடங்களுக்கும் மேலாகத் தள்ளு வண்டி உடுப்பி ஹோட்டலை நடத்துகிறார். தெருவோரம் என்று பார்க்காமல் ஸான்ட்ரோவிலும் இண்டிகாவிலும் வரும் மேல்தட்டு ஆட்கள் ஒரு பிடி பிடித்து விட்டுச் செல்கிறார்கள். இரவு பதினோறு மணி வரை இட்லியைப் போலவே வியாபாரமும் சூடுபறக்கிறது.

# மக்கள் ஆதரவு;

சூரியன் ஓய்வு எடுக்க விரையும் மாலை நேரம். தி. நகர், பாண்டி பஜார் அருகில் உள்ள பிரில்லியண்ட் டுடோரியல் எதிரில் நான்கு சக்கர தள்ளு வண்டியில் சாமான்கள் வந்து இறங்குகின்றன. ஒரு பக்கம் செவ்வக வடிவ தோசைக்கல், ஐம்பதுக்கும் மேற்பட்ட எண்ணிக்கையில் இட்லி தயாரிக்கும் குக்கர், ஃபிரைட் ரைஸ் தயாரிக்கப் பெரிய பானை. இது தவிர தள்ளு வண்டியில் ஏற்கெனவே தயார் செய்யப்பட்டு, கொண்டு வரப்படும் வடை, இடியாப்பம், தயிர் சாதம், பரோட்டா. சில நிமிடங்களில் தள்ளு வண்டி அருகில் திறந்த வெளியில் சமையலறை தயாராகி விட, காஸ் அடுப்புகளின் சப்தம் காதில் ஏறுகிறது. அடுத்த ஒரு மணி நேரத்தில் கையில் ஆவி பறக்கும் இட்லித் தட்டுடன் கெட்டி சட்னி, சாம்பாருடன் வெட்டு வெட்டுகிறார் ஒரு தனியார் நிறுவனத்தில் சேல்ஸ் ரெப்பாக உள்ள சரவணன்.

• பானிபூரி வியாபாரம்...



''சென்னையில உள்ள எந்த சிறந்த சைவ ஓட்டலுடனும் இந்தத் தயாரிப்புகளை ஒப்பிடலாம். குறிப்பாக, இவர்கள் கொடுக்கும் சாம்பார் வடை அற்புதம். கெட்டி சட்னி பிரமாதம்!'' என்று அசைபோடுவதை நிறுத்தாமல் சொல்கிறார்.

சென்னை தெருக்களில் மாலை நேரத்தில் பெட்ரோமாக்ஸ் வெளிச்சத்தில் நடத்தப்படும் தள்ளுவண்டி கையேந்தி பவன்களின் எண்





ணிக்கை தினசரி அதிகமாகிக் கொண்டே போகிறது.

இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட கையேந்தி பவன்கள் சென்னையில் இருக்கின்றன. மிளகாய் பஜ்ஜி, வாழைக்காய் பஜ்ஜி, வெங்காய பஜ்ஜி, மசால் வடை போடும் ஒரு பிரிவினர். இவர்களுக்கு நான்கு சக்கர தள்ளுவண்டி வேண்டுமென்றே அவசியமில்லை. நல்ல அகலமான பிளாட்பாரமே போதும்!

நாகேஸ்வரராவ் பார்க் வாசலில் பஜ்ஜி கடை போடும் நந்தன் முன்னாள் ஆட்டோ டிரைவர்.

''சில ஆட்டோ டிரைவருங்க பண்ற கலாட்டாவில் எல்லா ஆட்டோக்காரர்களின் பேரும் கெட்டுப் போச்சுங்க. அந்தத் தொழிலே வேண்டான்னு இதில இறங்கிட்டேன்'' என்கிறார். பார்க்குக்கு வரும் பெரிய மனிதர்கள், காதல் ஜோடிகள் கடச்கட மிளகாய் பஜ்ஜியைக் கடித்துக் கொண்டு பார்க்குக்குள் மறைகிறார்கள். 'ஒரு நாள் உபயோகித்த எண்ணெய்யை மறுநாள் உபயோகிக்க மாட்டேங்க. அதுதான் நம் ஸ்பெஷாலிட்டி'' என்கிறார் நந்தன்.

சென்னையில் உள்ள கையேந்தி பவன் ஜாயிண்டுகளில் மிகவும் முக்கியமான இடம் பனகல் பார்க். இங்கு தள்ளுவண்டி கிடையாது. நான்கு சக்கர வேன்களில் முனியாண்டி விலாஸ்கள் வரிசையாக நிற்கின்றன. பிரைட் ரைஸை தூக்கிப் போட்டு கரண்டியால் லாவகமாக காட்ச் பிடிக்கும் ஹரிகிருஷ்ணன் ஒரு நட்சத்திர ஹோட்டலில் பணியாற்றியவர்.

"இந்த ஏரியாவுக்கு துணி, நகைகள் வாங்க வருபவர்கள் அப்படியே எங்கள் தயாரிப்புகளை விரும்பிச் சாப்பிடுகிறார்கள்" என்கிறார். இரவு ஒரு மணிவாக்கில் அன்றைய வியாபாரம் முடிந்த பிறகு மிக சுத்தமாக இடத்தை வைத்து விட்டுப் போவதை ஒரு கடமையாக வைத்திருக்கிறார்கள்.

# மாநகராட்சியின் தலைவலி!



• கலோச்சனா



• நந்தன்

கோடம்பாக்கம் மேம்பாலம் அருகில் தள்ளுவண்டி கையேந்தி பவன் நடத்தி

வரும் முருகனுடைய ஸ்பெஷாலிட்டி சூப். காரம், மணம், குணம் கொண்ட இந்த சூப்புக்கு நிறைய ரசிகர்கள் உண்டாம்.

சென்ட்ரல் அருகே கூடையில் வைத்து ஐந்து ரூபாய்க்கு சாப்பாடு போடும் சுலோச்சனா நாற்பது வருடங்களாக வியாபாரம் செய்து வருகிறார். சுலோச்சனாவின் கஸ்டமர்கள் பெரும்பாலும் போர்ட்டர்களும் கூலியாட்களும்தான்.

"சுத்தியிருக்கிற போலீஸ் ஸ்டேஷன் லாக்-அப் அக்யூஸ்ட்களுக்கு (கைதிகளுக்கு) நம்ம சாப்பாடுதான் கன்னு போவுது" என்கிறார். இந்தக் கூடை சாப்பாடு பிஸினஸில் சம்பாதித்து இரண்டு பெண்களுக்கும் கல்யாணம் செய்து வைத்து விட்டார் சுலோச்சனா. காலையில் தெருவோரம் விறகு வைத்து அடுப்பு மூட்டி ஐந்நூறுக்கு மேற்பட்ட கஸ்டமர்களுக்குச் சாப்பாடு தயார் செய்கிறார்.

**"பச்சை மிளகாய்ச் சட்னியோடு இட்லி சாப்பிட்டுப் பாருங்க!"**

"சென்னை ஹோட்டல்களில் இட்லி சாப்பிடவே பிடிக்கறதில்லை. ரெண்டு இட்லி சாப்பிடறதுக்குள்ளே போதும் போதும்னு ஆயிடுது. ஆனா, மதுரையில, என்னோட அம்மா அரைக்கிற பச்சை மிளகாய்ச் சட்னியைத் தொட்டுக்கிட்டுச் சாப்பிடறதா இருந்தா... சும்மா அதுபாட்டுக்குப் பத்துப் பதினைஞ்சு இட்லிக்கு மேல வயித்துக்குள்ளே போயிடும்!" என்பவர் கவித்துவத்தோடு 'சேது' படத்தை இயக்கியிருக்கும் டைரக்டர் பாலா.



"பச்சை மிளகாய்ச் சட்னி அரைக்கிறது பெரிய விஷயமில்லை. உங்க வீட்டு நபர்களின் எண்ணிக்கைக்குத் தகுந்த மாதிரி சின்ன வெங்காயத்தை உறிங்க. அதோடு காரம் கொஞ்சம் தூக்கலா இருக்கிற மாதிரி பச்சை மிளகாயையும் உப்பையும் சேர்த்து, மூணையும் அரைச்சிடுங்க. தாளிக்கவே வேண்டாம்! சுவை தூக்கிக்கிட்டுப் போகும்!" என்கிறார் பாலா.

படம் : பிரவீண்குமார்

**பா**னிபூரி கலாசாரமும் சென்னைத் தெருக்களை அடைத்துள்ளது. முக்காலியில் பாலிதீன் பையில் முட்டை வடிவ கோதுமை பூரியையும், பக்கத்தில் பானையில் பானி(?)யையும் வைத்து விற்கும் வட இந்தியச் சிறுவர்களை நகரத் தெருக்களில் இப்போதெல்லாம் நிறையவே பார்க்க முடிகிறது. உத்தரபிரதேசத்தைச் சேர்ந்த ஜான்ஸியிலிருந்து வந்திருக்கும் சிறுவன் கிஷன்குமார் 'தோடா, தோடா தமில்' பேசி பானிபூரி வியாபாரம் செய்கிறார்.

"நாங்க பத்து பேர். இது மாதிரி முதலாளியிடம் வேலை செய்கிறோம்" என்கிறார் கிஷன்குமார்.

**த**ள்ளுவண்டி கடைகளின் பெரிய பிரச்னை போலீஸும், மாநகராட்சியும்தான். எல்லாம் 'ஒழுங்காக' நடந்து கொண்டிருப்பது போல சில நாட்கள் நடக்கும். அதன் பின், "அந்த அமைச்சர் இந்தப் பக்கம் வருகிறார்; இந்த அதிகாரி வருகிறார்" என்று ஒரு நாள் திடீரென்று கடைகளை லாரிகளில் அள்ளிப் போட்டுக் கொண்டு போய் விடுகிறார்கள். அப்புறம் கோர்ட், கேஸ் என்று மீண்டு அடுத்த கடை போடுவதற்கு இரண்டு மூன்று நாட்கள் ஆகி விடுகின்றன. இந்த லொள்ளுகளைத் தவிர லோக்கல் அரசியல்வாதிகளின் கலெக்ஷனும் உண்டு. மெரீனாவில் ஏரியா, ஏரியாவாகப் பிரித்துக்கொண்டு போலீஸுக்கும், மாநகராட்சிக்கும் போட்டியாக கலெக்ஷனில் இறங்குகிறார்கள் "தாதா"க்கள்.

"இதுபோன்ற தள்ளுவண்டி கையேந்தி பவன்களை மக்கள் நாடக் காரணம் மலிவான விலைதான். சில பகுதிகளில் டேஸ்ட்டுக்காகவும் விற்பனை ஜோராக நடக்கிறது. இதுபோன்ற கடைகளுக்கு நாங்கள் லைசென்ஸ் கொடுக்க முடியாது. லைசென்ஸ் கொடுப்பதென்றால் பல நிபந்தனைகள் இருக்கின்றன. கடைகளில் அந்த நிபந்தனைகளின்படி நடந்து கொள்வது மிகவும் கஷ்டம். சுகாதாரமற்ற உணவுப் பண்டங்களை விற்பதால் நாங்கள் நடவடிக்கை எடுத்து வருகிறோம். கடந்த பதினோறு மாத காலத்தில் மட்டும் 300 டன் உணவுப் பண்டங்களை இதுபோன்ற கடைகளில் இருந்து கைப்பற்றியுள்ளோம். ஆனால் கடைகள் புதிது புதிதாக முளைத்துக் கொண்டிருப்பதால் தொடர் நடவடிக்கை அவசியமாகிறது" என்கிறார் மாநகராட்சியின் துணை ஆணையர் டாக்டர் ஜெ. ராதாகிருஷ்ணன்.

**— ப்ரியன்**

படங்கள் : **வெங்கடேஷ்**

இல்லதரசிகளுக்கு புதிய துணை
சமையல் கலையில் திருப்புமுனை
மில்க் பாய்லர், இட்லி குக்கர்,
வாட்டர் ஃபில்டர், குழிகரண்டி
எல்லாம் தந்திடும்

# Murugan

முருகன் மெட்டல் என்றாலே
முகம் மலரும் தன்னாலே






















## முருகன் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ்

21, பொன்னப்ப செட்டி தெரு, சென்னை — 3.
போன்: 5350182, 5343412

# மாட்டுப் பால் மனிதனுக்கா?



டாக்டர் நீல் பர்னார்ட் சமீபத்தில் சென்னைக்கு வந்திருந்தார். இவர் அமெரிக்க 'பிஸிஷியன்ஸ் கமிட்டி ஃபர் ரெஸ்பான்சிபிள் மெடிசின்' அமைப்பின் தலைவரும்கூட. இந்தியாவில் உள்ள எட்டு முக்கிய நகரங்களுக்குப் போய், இருபது மருத்துவக் கல்லூரிகளில் உரையாற்றினார்.

இங்கே சென்னையில் 'பிஸினஸ் லைன்' நாளிதழுக்கு அளித்த பேட்டியில், பால், பால் பண்டங்கள் எல்லாம் எந்த ஒரு நல்ல பயனையும் தருவதில்லை என்று சொல்லியிருக்கிறார்!

பாலில் கொழுப்புச் சத்து அதிகம் இருக்கிறது. அது இரத்தக் குழாய்களில் அடைத்துக் கொள்ளும். டயபடீஸ் உண்டாக்கும். இடையை இரு மடங்கு பருமன் ஆக்கி விடும். ஆர்த்ரைடிஸ் மற்றும் மைக்ரேன் தலைவலி ஏற்படுத்தும். அனீமியா வரும். ஏனென்றால் இரும்புச் சத்து உடலில் இரத்த ஓட்டத்தோடு கலப்பதை பாலிலுள்ள கால்ஷியம் தாமதப்படுத்தும். கேபேஜ் (முட்டைக்கோஸ்), காலி ஃப்ளவர் போன்ற காய்கறி வகைகள் சிலவற்றில் கிடைக்கிற இரும்புச்சத்து கூட, மிக மெதுவாகத்தான் உடலில் சேரும் – என்று அடுக்கித் தள்ளி விட்டார்.



இது ஒருபுறம் இருக்கட்டும். இவர் இன்னொரு குண்டைத் தூக்கிப் போட்டிருக்கிறார்:

'வளரும் பசுங் கன்றுகளுக்குத்தான் பசும் பால் வேண்டும். வளரும் குழந்தைகளுக்கு அல்ல!'

இரண்டு வருடங்களுக்குத் தாய்ப்பால் சாப்பிட்ட பிறகு மனிதனுக்கு வேறு எந்தப் பாலும் தேவை இல்லையாம். அப்படியானால் 5 வயது, 10 வயதுக் குழந்தைகளை டம்ளர் டம்ளராகப் பால் குடிக்கச் சொல்லுகிறோமே, அது தவறா?

'ஆமாம்' என்கிறார் டாக்டர் பர்னார்டு அழுத்தமாக.







'கொழுப்புச் சத்து, லேக்டோஸ் சர்க்கரை, புரதம் (அனிமல் ப்ரோடின்) தவிர இதில் வேறு என்ன இருக்கிறது?' என்று கேட்கிறார்.

டயபடிக் நோயாளிகளுக்குச் சரியான டயட், உடற்பயிற்சி, புகை – புகையிலை தவிர்த்தல் – இவை போதுமாம். இப்படி இருந்தால் 82 சதவிகித இதய நோயாளிகளைக்கூட குணமாக்கி விடலாம் என்கிறார். ஆனால் உணவில், பால் மற்றும் பால் பொருட்கள் சேர்க்கவே கூடாதாம்!

**டா**க்டர் நீல் பர்னார்ட், மரக்கறி உணவுதான் நல்லது என்று வாதாடும் வெஜிடேரிய வாதி. அவர் சிபாரிசு செய்கிற உணவு: கொஞ்சம் சாதம், அல்லது கோதுமை ரொட்டி, பீன்ஸ், பட்டாணி அல்லது பருப்பு, கொஞ்சம் கறிகாய்கள், பழங்கள். தினசரி இவை போதும், ஆரோக்கியமான வாழ்வுக்கு' வெஜிடபிள் பிரியாணி கூட ஒகே. ஆனால் அதில் எண்ணெய்ப் பசை அதிகம் கூடாதாம்!

"ஆராய்ச்சிகளின் முடிவுகளை எல்லாம் பார்த்தால், அசைவம் மிகவும் ஆபத்தானது. வெஜிடேரியனாக மாறுவதைத் தவிர வேறு வழியில்லை. மருத்துவக் கல்லூரியில் சேருவதற்கு முன்னால், போஸ்ட் மார்ட்டம் செய்யும் பேதாலஜிஸ்ட் ஒருவரிடம் உதவியாளனாக இருந்தேன். ஹார்ட் அட்டாக் சாவு என்றால் என்ன என்று அப்போதுதான் தெரிந்து கொண்டேன். அதற்கு அப்புறம் என்னுடைய உணவுப் பழக்கத்தையே மாற்றிக் கொண்டு விட்டேன்!" (இதற்குப் பிறகு டாக்டரின் பெற்றோர்களும் வெஜ் ஜுக்கு மாறி விட்டார்களாம்.)

நான்-வெஜிடேரியன்களுக்கும், பால் – தயிர் சாப்பிடுகிற வெஜிடேரியன்களுக்கும், பால், பால் பொருட்களை அடியோடு விட்டு விடுவது முதல் நாள் மட்டும் கொஞ்சம் சிரமமாயிருக்கும். அப்புறம் நன்றாகப் பழகிவிடும் என்கிறார்.

பால் குடிக்கிறவரிடம், பதப்படுத்தப்பட்ட பால் சாப்பிடச் சொன்னால், ஆரம்பத்தில் கொஞ்சம் கஷ்டப்படுவார். அப்புறம் பதப்படுத்திய பால் ருசி பழகி விட்ட பிறகு, முழுமையான பாலின் ருசியே அவருக்குப் பிடிக்காமல் போய் விடும். அப்புறம் மெதுவாக சோயா மில்க்கை அவருக்கு அறிமுகப்படுத்த வேண்டும். பிறகு பசும்பாலே வேண்டாம்டா சாமி என்று மனிதர் ஒரேயடியாக மாறி விடுவாராம்!

"எக்ஸிக்யூடிவ்கள்தான் உணவில் அதிக ரிஸ்க் எடுத்துக் கொள்ளுகிறார்கள். அதிகம் பேர் நான்-வெஜ் சாப்பிடுகிறார்கள். அதிலும் பயணத்தின்போது ரெஸ்ட்டாரன்ட்டுகளிலும், நண்பர்கள் வீட்டிலும் செமத்தியான மாமிச உணவை ஒரு வெட்டு வெட்டுகிறார்கள். இது அதிகக் கொழுப்பு, அதிக கொலஸ்ட்ரல் உணவு. இந்தியாவில் 40 வயதிலேயே ஹார்ட் அட்டாக்கால் தாக்கப்படுகிற எக்ஸிக்யூடிவ்கள் அதிகம் இருப்பதற்கு இதுதான் காரணம்!" என்கிறார் டாக்டர் பர்னார்டு. இதற்குப் புள்ளி விவரமும் வைத்திருக்கிறார்.

1990ல், 1.1 மிலியன் இந்தியர்கள் ஹார்ட் அட்டாக்கில் இறந்து போனார்கள் என்றால், 1998ல் இந்த எண்ணிக்கை 1.5 மிலியன் ஆயிற்று. இவர்களில் பெரும்பாலானவர்கள் பெரிய கம்பெனிகளில் உயர் அதிகாரிகள். அவர்களுக்கு இருக்கிற மன அழுத்தத்தில், புகைத்துத் தள்ளுகிறார்கள். அதி வேக வாழ்க்கை முறை. எந்த வித தேகப் பயிற்சியும் செய்ய நேரமில்லை. அதிக பட்ச கொழுப்புச் சத்து உள்ள உணவை உள்ளே தள்ளிக் கொண்டே இருக்கிறார்கள்!

பால் இல்லாத சைவ உணவு, சிகரெட்டை உதறுவது, யோகா, உடல்பயிற்சி, தியானம் இவற்றைக் கடைபிடிப்பது என்று இருந்தால் மட்டுமே, இவர்கள் ஹார்ட் அட்டாக்கிலிருந்து தப்பிக்கலாம்.

**டா**க்டர் பர்னார்டின் பேச்சே சுவாரசியமாய் இருக்கிறது என்று நீங்கள் நினைக்கிற பட்சத்தில், அவரது புத்தகம் Food that fights pain படியுங்கள். அல்லது அவரது வெப்சைட் drbarnard.comல் க்ளிக் செய்யுங்கள். ஏராளமான தகவல்கள் உங்களுக்குக் கிடைக்கும்.

நன்றி: **பிஸினஸ் லைனில் ரஷிதா பகத் கட்டுரை.**

தொகுப்பு: **சித்தார்த்**

# பில்ராத்

## மருத்துவமனை

முதன்முதலில்
அதிநவீன லேசர் கருவியுடன்
**லேப்ராஸ்கோப்பி**
**சிகிச்சை**



## வயிறு

சம்பந்தப்பட்ட அனைத்து
நோய்களுக்கும் ஓர் முழுமையான

## தீர்வு

- அல்சர்
- அபண்டிஸைடிஸ்
- குடல் இறக்கம் (Hernia)
- பித்தப்பை கற்கள்
  (Gall Bladder Stones)
- கர்ப்பப்பை நோய்
- ஓவரியில் கட்டி எடுத்தல்
  (Ovarian Cyst Removal)
- குடும்பக் கட்டுப்பாடு சிகிச்சை

சிறப்பு அம்சங்கள்

- ரத்த இழப்பு இல்லை
- தழும்பு ஏற்படாது
- உடனே பழைய நிலைக்குத் திரும்பலாம்

♦♦♦

## அறுவை இல்லா
## மூல வியாதி
## சிகிச்சை

சிறப்பு சிகிச்சை :

❊ லேசர் சிகிச்சை
❊ கிரையோ சிகிச்சை
❊ கதிர் வீச்சு சிகிச்சை

**BILLROTH HOSPITAL**
24 HOURS SERVICE

43, லட்சுமி டாக்கீஸ் சாலை, செனாய் நகர், சென்னை-600030. போன் : 6440020 / 6441777.

# எடைக்கு விடை கொடுங்கள்!

'நின்றால் கஷ்டம்; உட்கார்ந்தால் கஷ்டம்' வகையைச் சேர்ந்தவரா நீங்கள்? கொழுப்புச் சத்து மிகுந்த உணவு வகைகளைத் தவிர்க்க முடியாமல் திண்டாடு கிறீர்களா? காலையில் நடப்பது, நீச்சல், டென்னிஸ் என்று போவ தற்கு சோம்பேறித்தனமா? ஆனா லும் உடம்பு குறைய வேண்டும் என்று ஆசை இருக்கிறதா? உங் களுக்கு வரப்பிரசாதமாக ஒரு சமா சாரம் இருக்கிறது. எடையைக் குறைய வைக்கிற மேஜிக் அது! மருந்து இல்லை; மாத்திரை இல்லை. அதன் பெயர் 'ஜென ரல் மோட்டார்ஸ் டயட்'. அதிகமில்லை ஜென்டில்மென்! ஒரே ஒரு வாரம் இந்த உணவு முறையைப் பின்பற்றினால் போதும். ஒரு வாரம் கழித்து எடை மிஷினில் ஏறினால், முன், ஐந்து முதல் ஆறு கிலோ வரை குறை வாய்க் காட்டும் என்கிறது அமெரிக்காவின் 'ஜெனரல் மோட்டார்ஸ் டயட்' பற்றிய தகவல் குறிப்பு! நம்புவது கஷ்டமாக இருந்தாலும், மேலே படியுங்கள்.

அமெரிக்க அரசாங்கத்தின் விவசாயம், உணவு, மற்றும் மருத்துவ நிர்வாகத் துறையுடன் இணைந்து, ஜான் ஹாப்கின்ஸ் ரிசர்ச் சென்டர் என்ற ஆராய்ச்சி மையம் உருவாக்கிய உணவு முறை இது. உலகப் புகழ் பெற்ற ஜெனரல் மோட்டார்ஸ் நிறுவனம், 1995-ம் ஆண்டு, ஆகஸ்ட் மாதம் இதனை அங்கீகரித்து, 'ஜெனரல் மோட் டார்ஸின் எடை குறைக்கும் டயட்' என்று பெயர் சூட்டியது.

தங்கள் நிறுவனத்தில் பணிபுரியும் அனைவரும் ஆரோக்கியமாகவும், அதிகப்படியான எடை இல்லாமலும் இருக்க வேண்டும் என்பதே இந்த உணவு முறை அமல்படுத் தப்பட்டதன் நோக்கம். ஒரே ஒரு வாரம் இந்தக் கட்டுப்பாடான உணவு முறையைக் கடைபிடித்தால் போதுமானது. எடை குறைவதைக் கண்கூடாகக் காணலாம். ஒரு வாரத்துக்குப் பின், மறுபடி பழையபடியே சாப்பிட ஆரம்பித்து விடலாம்.

இந்த உடல் எடை குறைப்புக்கான பிரத்யேக உணவு முறை பற்றி விவரம் அறிந்த சில நம் ஊர்க்காரர்களும், அதைக் கடைபிடித்து, எடையைக் குறைத்திருப்பதாகத் தெரிகிறது.

முழுவிவரம் பின்வருமாறு :

இது ஏழுநாள் கடைபிடிக்கப்பட

வேண்டிய உணவு முறை. இந்த ஏழு நாட்களிலும் தினம் பத்து கிளாஸ் தண்ணீர் குடிக்க வேண்டும் என்பது கட்டாயம். வெறும் தண்ணீரைக் குடிக்கக் கஷ்டமாக இருந்தால் அதில் லேசாக எலுமிச்சை பிழிந்து, மிகச் சிறிது உப்பு போட்டும் குடிக்கலாம்.

**முதல் நாள்** முழுக்க முழுக்கப் பழம்தான் உணவு. அரிசி சாதம், சப்பாத்தி போன்றவைகளை கிட்டே சேர்க்காதீர்கள். பழங்களில் ஆப்பிள், ஆரஞ்சு, அன்னாசி, மாதுளை, தர்பூசணி, சப்போட்டா என்று எந்தப் பழம் வேண்டுமானாலும் சாப்பிடலாம். வாழைப்பழம் மட்டும் கூடாது. தர்பூசணி ரொம்ப நல்லது.

அதிசயம்! ஆச்சர்யம்! இந்த டயட் படு ஈஸி!

**இரண்டாம் நாள் :** இன்று காய்கறிகள் தினம். வேக வைத்தோ, அல்லது பச்சையாகவோ காய்கறிகள் சாப்பிடலாம். ருசிக்காக சிறிது உப்பு, காரம் சேர்த்துக் கொள்ளவும் அனுமதி உண்டு. அளவைப் பொறுத்தவரை கட்டுப்பாடு ஏதுமில்லை. வயிறு நிரம்ப சாப்பிடலாம். வேகவைத்து சாப்பிடும்பட்சத்தில், எண்ணெய், தேங்காய் இரண்டையும் கிட்டே சேர்க்காதீர்கள். பெரிய சைஸ் வேகவைத்த உருளைக் கிழங்கைக் காலையில் சாப்பிடலாம்.

**மூன்றாவது நாள் :** பழம், காய்கறி இரண்டுமே இன்றைக்கு உண்ணலாம். அளவுக் கட்டுப்பாடு ஏதுமில்லை. ஆனால் உருளைக் கிழங்குக்கும், வாழைப் பழத்துக்கும் இன்றைய தினம் தடைவிதிக்கப்பட்டுள்ளது.

**நாலாவது நாள் :** இன்று வாழைப் பழமும், பாலும்தான் உணவு. அதிகபட்சம் எட்டு வாழைப் பழங்கள். மூன்று கிளாஸ் பால். காய்கறி சூப் ஒரு கிண்ணம் சாப்பிடலாம்.

**ஐந்தாம் நாள் :** இன்று ஒரு முக்கியமான தினம். ஆம்! ஒரு கிண்ணம் அரிசிச் சாதம் சாப்பிடலாமே! அது மட்டுமில்லை. பெரிய சைஸ் தக்காளிப் பழம் ஆறு சாப்பிடலாம். இன்று தண்ணீரின் அளவும் அதிகரிக்கப்படுகிறது. பன்னிரண்டு கிளாஸ்! இன்று உங்கள் உடம்பு என்கிற இயந்திரம் சுத்திகரிக்கப்படுகிறது.

**ஆறாம் நாள் :** இன்றைக்கும் 'காய்கறி'

தினம். கூடுதலாக ஒரு கிண்ணம் அரிசி சாதம். காய்கறிகளை வேகவைத்தோ, பச்சை யாகவோ சாப்பிடலாம். அளவுக் கட்டுப் பாடு கிடையாது.

**ஏழாவது நாள் :** இன்று கடைசி தினம். ஒரு கப் சாதம், காய்கறிகள் தவிர, பழ ஜூஸ் சாப்பிடலாம்.

**எட்டாவது நாள் :** காலை எழுந்தவுடன் புது மனிதராக உணர்வீர்கள். எடை மிஷின் உங்கள் எடையை ஐந்து, ஆறு கிலோ வரை குறைத்துக் காட்டும்.

**மேலும் சில தகவல்கள் :**

கேட்பதற்கு எளிமையாக இருக்கிற

**டாக்டர் மாத்ருபூதம்:**

இப்போது உப்பு குறைவாய் சேர்த்துக் கொண்டு, உப்பு சப்பு இல்லாமல் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறேன். ஆனால் சமீபகாலம் வரை நான் மிகவும் ருசித்து, ரசித்து சாப்பிட்டவை சுடச் சுட பொங்கலும், சாம்பார் வடையும்தான். எங்கே? டிரைவ் இன் உட்லண்ட்ஸில்தான்!



இந்த டயடிங் புரோகிராம், கடைபிடிப்பதற்கும் சுலபமானது என்பதுதான் இதன் சிறப்பு அம்சம்.

இந்த ஒரு வார காலத்தில் டீ, காப்பி குடிக்கலாமா? ஓஎஸ்! ஆனால் பால் சேர்க்காமல் பிளாக் டீ, பிளாக் காப்பி, குடிக்கலாம். சர்க்கரையைத் தவிர்ப்பது நலம். டீயில் எலுமிச்சை பிழிந்து கொள்ளலாம். பாதகமில்லை. எண்ணெய்யை சொட்டு கூட சேர்த்துக் கொள்ளாமல் தவிர்ப்பது உத்தமம். கண்டிப்பாக எண்ணெய் வேண்டுமென்றால் ஒரே ஒரு டீஸ்பூனுக்கு மேல் சேர்த்துக் கொள்ளாதீர்கள். ஏழாவது நாளுக்கு முன்னால், பழம் என்றால் பழமாகத்தான் உட்கொள்ள வேண்டும். பழ ஜூஸுக்குத் தடை!

சரி! இந்த உணவு முறையின் சிறப்பு அம்சம் என்ன? இந்த ஏழு நாட்களில் நம் உடம்பில் என்ன நடக்கிறது என்று விவரமாகப் பார்க்கலாமா?

முதல் நாளில், பழங்கள் மட்டுமே சாப்பிடுகிற போது, ஏழு நாள் உணவுக் கட்டுப் பாட்டு முறைக்கு உங்கள் உடம்பு தன்னைத் தயார்ப்படுத்திக் கொள்கிறது. பழங்களிலிருந்தே, அன்றைய தினத்துக்குத் தேவையான சக்தி கிடைத்து விடுகிறது. இரண்டாம் நாள், உருளைக் கிழங்கிலிருந்து, தேவையான கார்போஹைடிரேட் கிடைத்து விடுகிறது. காய்கறிகள், கலோரி குறைந்த, ஆனால் நார்ச்சத்து மிகுந்த உணவு என்பது குறிப்பிடத்தக்கது.

மூன்றாவது நாளில், உடம்பிலுள்ள அதிகப்படியான கொழுப்புச் சத்து எரிந்து, கரையத் தொடங்குகிறது. உணவுக் கட்டுப் பாட்டில் நீங்கள் இருப்பதை இன்று உணர முடியும். எட்டு வாழைப்பழம் சாப்பிட, நாலாம் நாள் அனுமதி என்றாலும், அன்றைய தினம் எட்டு வாழைப் பழங்கள் சாப்பிடுவது என்பது அத்தனை சுலபமில்லை. நாலு நாளில், உங்கள் உடம்பில் ஏற்பட்ட பொட்டாசியம், சோடியம் இழப்பை ஈடு கட்டவே வாழைப்பழம். இனிப்பு மீதான ஆர்வமும் குறைந்து காணப்படும். ஆனால், சிரமம் ஏதுமின்றி நாள் நகர்ந்து விடும் என்பது மகிழ்ச்சியான செய்தி.

ஐந்தாம் நாள் சாதம், கார்போஹைடிரேட்டுக்காக. தக்காளி, சீரான ஜீரணம் மற்றும் நார்ச்சத்துக்காக. குடிக்கிற தண்ணீர் உடலின் உறுப்புகளை சுத்தம் செய்கிறது. உணவின் அளவு உடலுக்குப் போதுமானதாக இருக்கிறதா என்ற கவலை வேண்டாம் உங்களுக்கு. ஐந்தாம் நாளைப் போன்றது தான் ஆறாவது நாள். முதல் நாளுடன் ஒப்பிடுகிறபோது, உங்கள் உடம்பு லேசாகியிருப்பதை உணர முடியும். சுறுசுறுப்பையும் உணரலாம். ஏழாவது தினத்தின் முக்கியமான வேலை என்ன தெரியுமா? எத்தனை கிலோ எடை குறைந்திருக்கிறது என்று கண்டுபிடித்து, சந்தோஷப்படுவது தான்.

இன்னும் சில குறிப்புகளை கவனத்தில் கொள்ள வேண்டியது அவசியம். பால்

மற்றும் எண்ணெய்தான் எடை குறைப்புக்கு முதல் எதிரி. உணவுக் கட்டுப்பாட்டில் இருப்பது என்பது சாப்பிடாமல் பட்டினியாய் இருப்பது கிடையாது என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். காய்கறியோ, பழமோ, அன்றைய தினத்துக்குரியதை நிறைய சாப்பிட்டு, பசியில்லாமல் பார்த்துக் கொள்ளுங்கள். ஒரே மாதிரி நாள் முழுக்க சாப்பிடுவதற்கு சலிப்பாக இருந்தால், ஒரு பிரத்யேக சூப் செய்து குடியுங்கள். எவ்வளவு வேண்டுமானாலும் சூப் குடிக்கலாம். செய்முறையும் சுலபம்தான்.

**தேவையான ஐட்டங்கள் :**
தண்ணீர் 23 அவுன்ஸ்
பெரிய வெங்காயம் 6
பச்சை மிளகு 2
முழு தக்காளி 3
முட்டைக்கோஸ் 1 (மீடியம் சைஸ்)

கொத்துமல்லி, உப்பு, மிளகுத் தூள் எல்லாம் சுவைக்காக.

இந்த சூப்பைத் தயாரித்து வைத்துக் கொண்டு, தேவைப்பட்டபோதெல்லாம் குடித்துக் கொண்டே இருக்கலாம்.



இந்த டயடிங் முறை, நம் சூழ்நிலைக்கு ஒத்து வருமா என்ற சந்தேகம் உங்களுக்கு எழலாம். அண்மையில், இதைக் கடைபிடித்த சென்னை ஆழ்வார்பேட்டையைச் சேர்ந்த வழக்கறிஞர் ஆனந்த் (அவரது விருப்பத்தின் பேரில் பெயர் மாற்றப்பட்டுள்ளது) அவரது மனைவி இருவரிடமும் கேட்டபோது சொன்னார்கள் :

"நான் எடையைக் குறைக்க வேண்டும் என்று பல்வேறு முயற்சிகளிலும் இறங்கியவன். தினமும் டென்னிஸ் ஆடுகிறவன். ஆனாலும், எடை மேலும் கூடாமல் தடுக்க முடிந்ததே தவிர, குறைக்க முடியவில்லை. ஜெனரல் மோட்டார்ஸ் எடை குறைப்பு உணவு முறை பற்றிய தகவலை ஒரு நண்பர் மூலமாகத் தெரிந்து கொண்டேன். ஆரம்பத்தில் எனக்கு அவநம்பிக்கைதான் ஏற்பட்டது. இருந்தாலும், செயல்படுத்தித்தான் பார்ப்போமே என்ற எண்ணத்தில் ஒரு வாரம் அதைக் கடைபிடித்தேன். அது ஒரு வித்தியாசமான அனுபவம். ஏழு நாட்களுக்குப் பின் எடையில் நாலரை கிலோ வரை குறைந்திருந்தது. என் மனைவிக்கு, எடை இழப்பு இரண்டரை கிலோ மட்டுமே! அவரவரது உடல் அமைப்புக்கு ஏற்ப, எடை குறைவது வேறுபடும் போலும்!"

இந்த முறையில் ஒரு விசேஷம் என்னவென்றால், ஒரு வாரம் டயட்டில் இருக்கலாம். அதன்பின் எடை குறைந்தபின், பழையபடியே சாப்பிடலாம். அதன்பின் கட்டுப்பாடு ஏதுமில்லை. இன்னமும் எடை குறைய வேண்டும் என்று விரும்பினால், மூன்று நாள் இடைவெளிக்குப் பின், மறுபடியும் ஏழு நாட்களுக்கு இந்த டயட் முறையைப் பின்பற்றலாம். இத்தனை கிலோ எடை குறைக்க வேண்டும் என்று இலக்கு நிர்ணயித்துக் கொண்டு, அதைச் சாதிக்கும் வரை மூன்று நாள் இடைவெளியுடன் ஒவ்வொரு வார டயடிங்கைக் கடைபிடிக்கலாம்!

இதெல்லாம் ஆரோக்கியமான ஓவர் வெயிட்காரர்களுக்குத்தான். நோயாளிகள் (ஹார்ட், பி.பி., ஷுகர் பேஷன்ட்கள்) தத்தமது டாக்டர்களைக் கேட்டுத்தான் கடைப்பிடிக்கலாம்.

— எஸ். சந்திரமௌலி

**'பூகி'சேது:**
ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் நம்மூர் டீ கடைகள்போல ஷாப்பிங் மால்களிலும், மற்ற இடங்களிலும் 'காபி' மட்டுமே கிடைக்கும் 'காபி பீனரி'கள் இருக்கும். அங்கே போனால் நூற்றுக்கும் அதிகமான காபி–வெரைட்டி சாப்பிடலாம். அவற்றில் எனக்குப் பிடித்தது 'கப்புசினோ' என்ற ரக காபி. நம்மூர் மருந்து பாட்டல் மூடி சைஸில் ஒரு கப். அதில் தான் படு ஸ்டிராங்கான அந்த காபியை கொடுப் பார்கள். (கப் சின்னது என்பதால் அந்தப் பெயரோ!) விலை 1600 லிரா (சுமார் அறு பது ரூபாய்) அந்த கப்புசினோ காபியைக் குடித்தபின் நேராக கார்கில் போய் அறுபது ரவுண்டு, கட்டு விட்டு வரலாமா என்கிற அளவுக்கு சுறுசுறுப்பு இருக்கும்.



• ஒய்.எ.சி.எம். குழுவினர்

நெய்வேலி சந்தானகோபாலன் மேடையில் தோன்றியதும் அத்தனை பேரும் தலையாட்டாத குறையாக ரசித்தார்கள்! இத்தனைக்கும் அவர் பாடவில்லை, பேசினார் - பாலக்காடு மணி அய்யர் பற்றி.



இரண்டே நிமிட சிற்றுரை தான்.... சாந்தமான அந்தத் தமிழும் மேடைத் தோற்றம் என்ற உணர்வைத் தராத தோழமை இயல்பும் ஒரு மகாவித்வானைத் திரும்பிப் பார்க்கும் மூன்றாம் தலைமுறையின் வினயமும் பிரமிப்பும் அந்த இரண்டு நிமிடங்களில் அப்படியே முத்துக் கோத்த அழகுடன் வெளிப்பட்டு விட்டன!

# நேற்றைய பொன்மணிகள்; இன்றைய கண்மணிகள்!

பக்கத்திலேயே பெரிய திரையில் அரிய புகைப்படங்களில் பாலக்காடு மணி அய்யர், பின்னணி இசையாக அவர் வாசித்த - இல்லை - இசைத்த தனியாவர்த்தனம்.

கர்நாடக சங்கீதம் என்கிற சாகரத்தின் அழகுக்கும் விரிவுக்கும் பலர் பங்களித்திருக்கிறார்கள். அவர்களுள் முக்கியமான சில மனிதர்களையும் ஸ்தாபனங்களையும் ஒரு முக்கியமான தருணத்தில் *(31.12.99 இரவு)* நினைவுகூர்ந்து மகிழ்வதென்பது இசை ரசிகர்களுக்கு சுகானுபவம்.

நிகழ்ச்சியின் இந்த நோக்கத்திலேயே பாதி வெற்றி கிடைத்துவிட, அதை வழங்கிய நட்சத்திர இளைஞர்களின் ஆத்மார்த்தப் பங்கேற்பில் மீதி வெற்றியும் கலபமாகக் கிடைத்து விட்டது.

சந்தானகோபாலன் அளவுக்கு சகஜ பாவம் இல்லாவிட்டாலும் தத்தமது இயல்புபடி டி.எம்.கிருஷ்ணா, சஞ்சய் சுப்ரமண்யன்; ரவிகிரண், வீணை காயத்ரி, வீணை ஜெயந்தி, நித்யஸ்ரீ, பாம்பே ஜெய்ஸ்ரீ, சௌம்யா, ராஜ்குமார் பாரதி, விஜய் சிவா என்று கலைஞர்கள் மாறி மாறித் தோன்றிப் பேச, இணையாக திரையில் படங்களும் ஆடியோவில் இசையும் சேர்ந்து கொள்ள.... இன்றைய

கண்மணிகள் நேற்றைய பொன்மணிகளைப் பற்றிப் பேசுவதைக் கேட்டு கிரங்கித்தான் போனார்கள் அன்று மியூசிக் அகாடமியில் இருந்தவர்கள்.

போதாக்குறைக்கு, இணைப்புரை வழங்கிய சுதா ரகுநாதன் (என்னவொரு நுனி நாக்கு இங்லிஷ்!) பொன்னை உருக்கி வார்த்தது போன்ற பட்டுச் சேலைகளை (உதவி : நல்லி) மாற்றி மாற்றி உடுத்தி மேடையில் தோன்றி, ஒரு கல்யாண வீட்டின் கலகலப்பை உண்டு பண்ணிக் கொண்டிருந்தார். "இலை போட்டாச்சு! சாப்பிட வாங்க!" என்று அழைக்காத குறைதான்!

மூன்று தலைமுறை இசைக் கலைஞர்களை மூன்று மணி நேரத்துக்குள் ஒரே மேடையில் பார்ப்பதென்றால் சும்மாவா!

"ஷைஹஜாக்கெல்லாம் இல்லாமல், வருகிற வருஷம் எல்லோருக்கும் சந்தோஷமானதா இருக்கணும்" என்று செம்மங்குடி ஆசீர்வாதம் செய்துவிட்டு, 'நாத தனும் அனிசம்' என்று ஆரம்பித்தபோதே எல்லோரும் புது வெல்லம் போல் இளகியிருந்தார்கள்.

அப்புறம் டி.கே. பட்டம்மாளும் கே.வி. நாராயணசாமியும் பக்கவாத்தியமில்லாமல் பத்து நிமிஷம் பாடினார்கள். ரமணியின் புல்லாங்குழலுடன் சேஷகோபாலனின் நாதஸ்வரக் குரல் காபியில் இணைய, இந்த நிகழ்ச்சிக்கென்றே எழுதிய பிரத்யேகப் பாடல். லால்குடி இயக்கத்தில், சென்னை வானொலி நிலைய வாத்யக் கலைஞர்கள் குழுவின் அமிர்தவாஹினி. காரைக்குடியையும் வேலூரையும் 'கனெக்ட்' செய்த தனியாவர்த்தனம் (மணி – ராமபத்ரன்) – இந்த குட்டி கச்சேரிகளின் இடையிடையேதான் இளைஞர்களின் சிற்றுரை உற்சவங்கள்.

இந்தக் கோலாகலத்தில் மூழ்கிய ரசிகர்கள், பள்ளிக்கூட நாடகம் போல் திரை இறங்க மறுத்து சண்டித்தனம் செய்த போது கலாட்டா செய்யவில்லை;

சில 'காம்பினேஷன்' கச்சேரிகள் எடுபடாமல் போனபோது அலுத்துக் கொள்ளவில்லை;

காது கிழியுமளவுக்கு ஒலிபெருக்கி உச்சத்தில் இருந்ததை ஆட்சேபிக்கவில்லை;

லால்குடியின் முகத்தைப் பார்க்க முடியவில்லையே என்று முகம் சுளிக்க வில்லை;

இடைச்செருகலான எஸ்.வி. சேகர் நாடகத்தில் எதிர்பாராமல் வந்த அசட்டு ஜோக்கைக் கண்டுகொள்ளவில்லை;

இணைப்பு உரையில் அவ்வளவாக இணைப்பு இல்லாததைக் கூடக் கவனிக்கவில்லை...!

கானகத்துக் குருவிக் குரல் போன்ற மாலியின் குழலிசை, ஜி.என்.பியின் சிற்றருவி சஞ்சாரங்கள், எஸ். பாலசந்தரின் மயக்கும் மீட்டுகள், ராஜரத்தினம் பிள்ளையின் ஜகஜ்ஜாலம், அண்ணாமலை பல்கலைக்கழகத்தின் சேவை, சுதேசமித்திரன், ஹிந்துவின் இசை ஈடுபாடு, 'கல்கி'கிருஷ்ணமூர்த்தியின் கச்சேரி விமர்சனங்கள், பேராசிரியர் சாம்பமூர்த்தியின் உழைப்பு, ஏழு கடல் கடந்த எம்.எஸ்.ஸின் புகழும் வள்ளன்மையும் என்று சத்தான விஷயங்களை அசை போட்டு ஆனந்தப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு ஐந்நூறு பள்ளிச் சிறுவர்கள் வந்து எளிமையான அழகுடன் அலங்கரிக்கப்பட்டிருந்த மேடையிலும் அரங்கின் நடை பாதைகளிலும் நின்று, ஐ.நா. சபையில் எம்.எஸ். உலக அமைதி வேண்டி இசைத்த 'மைத்ரீம் பஜத' (காஞ்சி பரமாச்சார்யர் இயற்றியது)பாடலைப் பாடிய போது 'ஒன்ஸ் மோர்' கேட்டார்கள்; எழுந்து நின்று குழந்தைகளுக்காகக் கைதட்டி வாழ்த்தினார்கள்.

எண்பது இளைய தலைமுறைக் கலைஞர்களின் குரல்களும் வாத்தியங்களும் 'மாமவ பட்டாபிராமா'வில் பிரமிப்பூட்டும் கச்சிதத்துடன் இழைய, இசையழகிலும் இளமைப் பொலிவிலும் சொக்கிப் போய் ரசித்தார்கள்.

இந்த நிகழ்ச்சி (On a Musical Track) ஒய்.ஏ.சி.எம். திட்டமிட்ட கச்சிதத்துடன் நடைபெறாது போயிருக்கலாம். ஆனால் தயாரித்தளித்த இளைஞர்களின் உயர்நோக்கு ஒவ்வொரு முயற்சியிலும் பிரகாசித்தது;

இதை உணர்ந்த ரசிகர்களின் பேராதரவும் அபிமானமும் நிகழ்ச்சியின் போக்கை அரவணைத்து நடத்திக் கொடுத்தன.

பொக்கிஷம் போன்ற ஒரு பாரம்பரியத்தை இந்த இளைஞர்கள் கட்டிக் காத்து வருகிறார்களே என்ற அபிமானம்.

கலைஞர்களுக்கேயுரிய தனித்தன்மையினிடையேயும் ஒருங்கிணைந்து இப்படிப்பட்ட கூட்டு முயற்சிகளில் பிரகாசிக்கிறார்களே என்ற பெருமிதம்;

கர்நாடக சங்கீதம் பொறுப்பான, பாதுகாப்பான கரங்களைச் சென்றடைந்திருக்கிறது என்ற நெகிழ்ச்சி – எல்லாம் மேலிட நிகழ்ச்சியின் இறுதியில் கூட்டம் கலைந்த போது நாதஸ்வரக் கலைஞர்கள் 'ஸ்ரீ கணபதி நீ' வாசித்துக் கொண்டிருந்தார்கள். இது முடிவல்ல; ஆரம்பம் என்று தெரிவிக்கும் விதமாக!

**— ஸ்ருதி கீர்த்தி**

படங்கள் – நன்றி : **ஆனந்த விகடன்**

கடத்தப்பட்ட இந்தியன் ஏர்லைன்ஸ் விமானத்தில் இருந்த தமிழ்நாட்டுப் பயணிகள் எட்டுப் பேரில் ஒருவர் பட்டுக்கோட்டையைச் சேர்ந்த கேசவ கண்ணன். வட இந்தியாவில் மதுரா அருகேயிருக்கும் கோசிகோலான் என்கிற இடத்தில் இருக்கும் குளிர்பான தயாரிப்புக் கம்பெனி ஒன்றில் தயாரிப்பு மேலாளர். கம்பெனி விஷயமாக நேபாளம் சென்று விட்டு விமானம் ஏறி மாட்டிக் கொண்டவர். அந்த நாட்களின் தவிப்பைக் கூறுகிறார்...



• கேசவ கண்ணன்

"விமானம் கிளம்பிய முப்பத்தைந்து நிமிடங்கள் கழிந்த பின்னர்தான் 'கடத்தல் நாடகத்தின்' முதல்காட்சி ஆரம்பமானது. மிகுந்த இறுக்கமான முகத்துடன் விமானக் கேப்டன், "நமது விமானம் தற்பொழுது 'ஹைஜாக்' செய்யப்பட்டுள்ளது. பயணிகள் அனைவரும் இனிமேல் கடத்தல்காரர்களின் கட்டளைப்படி நடந்து கொள்ளுங்கள்" என்று அறிவித்தார்.

கடத்தல்காரர்களின் உத்தரவுப்படி விமானப் பணிப்பெண்கள் ஒவ்வொருவர் கண்களையும் துணியினால் கட்டிப் போட்டார்கள். அவர்களது கட்டளைகளுக்குக் கட்டுப்படாதவர்களின் கழுத்தைப் பதம் பார்க்க அவர்களிடம் பளபளக்கும் கத்தி. கண்களைக் கட்டியிருந்த துணியை விலக்கி விட்டுப் பார்த்திருக்கிறார் ரூபின் கத்யால். அவ்வளவுதான். கடத்தல்காரர்களின் பளபளா கத்திக்கு அந்த 'காந்தர்வ புருஷன்' பலியாகிப் போனார். மற்ற பயணிகள் அனைவர்க்கும் சப்தநாடியும் ஒடுங்கிப் போனதும் இதன் பிறகுதான்.

அன்றிரவு முழுவதும் விமானம் எங்கெங்கு சுற்றித் திரிந்தது என்று எங்கள் எவருக்கும் தெரியாது. மறுநாள் காலை (25-ந் தேதி) விமானம் தரையிறக்கப்பட்டு நின்றவுடன் தான் ஆப்கனின் காந்தஹார் விமான நிலையத்தில் நாம் இருக்கிறோம் என்று தெரியும். அன்று பகல் பன்னிரண்டு மணிக்கு கேக்கும், பிஸ்கெட்டும் கொஞ்சம் கொடுத்தார்கள். சாயந்திரம் நான்கு மணிக்கு அரிசிச் சாதம் கொஞ்சம் கண்ணில் காட்டினார்கள். 26-ந் தேதி காலை பிரேக் ஃபாஸ்ட் தந்தார்கள். இரண்டு நாளாகியும் இந்தியாவிலிருந்து எந்தவொரு முடிவும் இவர்களை வந்து சேராததால் பயணிகளை மீண்டும் அச்சுறுத்த ஆரம்பித்தார்கள்.

ஒருவழியாக தலிபான் அரசு பேச்சு வார்த்தைக்கு ஏற்பாடு செய்து தரப் போவதாகத் தகவல் வரவும் கொஞ்சம் தளர்ந்தது அவர்களது பிடி. கட்டிப் போட்டிருந்த கண் கட்டுகளை அவிழ்த்து விட்டுப் பார்வைக்குச் சற்றே சுதந்திரம் கொடுத்தார்கள்.

கடத்தல்காரர்கள் ஐந்து பேர்களில் இரண்டு நபர் மட்டும் நன்கு படித்தவர்களாகவும், புத்திசாலிகளாகவும் தெரிந்தனர். அந்த இருவரின் கட்டளைகளின்படியே மற்ற மூன்று நபர்களும் நடந்து கொண்டார்கள். இந்த ஏழு நாட்களிலும் அவர்கள் என்ன சாப்பிட்டார்கள் என்பது கூட எங்களுக்குத் தெரியவில்லை. உயிர்ப் பயத்தில் நாங்கள்தான் உறக்கமின்றித் தவித்தோமென்றால் அவர்களும் ஏழு நாட்களாய் 'கொட்டக் கொட்ட' விழித்திருந்தார்கள்.

அவர்களது தலைவனை 'டாக்டர்' என்றுதான் அழைத்தார்கள் மற்ற நால்வரும்.

இடையில் இரண்டு நாட்கள் பகல் முழுவதும் பவர்கட் வேறு! என்ன செய்வது? கதவைத் திறந்து வைத்து சற்றே புண்ணியம் செய்தார்கள். காற்றும் வெளிச்சமும் ரொம்பவும் தயங்கிப் போய்த்தான் உள்ளே நுழைந்தன.

விமானத்தில் இருக்கும் டாய்லெட்டுகள்

# கடத்தல் விமானத்தில்

# பிறந்தநாள் வாழ்த்து!

## சந்தாதாரர்கள் கவனத்துக்கு...

**ஒவ்வொரு வாரமும் கல்கி இதழ் தயாராகும் செவ்வாய்க் கிழமையன்றே, சந்தாதாரர்களுக்கான பிரதிகளைத் தபாலில் அனுப்பி விடுகிறோம். இதுபோன்று சந்தாதாரர்களுக்கான பிரதிகளை அனுப்புவதற்கென்றே அஞ்சல் நிலையங்களில் இருக்கிற 'பத்திரிகா சானல்' வழியாகத்தான் அனுப்புகிறோம். அப்படியிருந்தும் சில சந்தாதாரர்கள், தங்களுக்கான பிரதிகள் சில வாரங்களில் வந்து சேருவதில்லை என்று கடிதம் எழுதுகிறார்கள். அப்படியெழுதும் சந்தாதாரர்களுக்கு மீண்டும் ஒருமுறை அதே பிரதியை அனுப்பி வைக்கிறோம்.**

**இப்படியே ஒவ்வொருவருக்கும் மாற்றுப் பிரதிகளை வாரந்தோறும் அனுப்பிக் கொண்டிருப்பது சாத்தியமில்லை. எனவே, பிரதிகள் வந்து சேராத சந்தாதாரர்கள், அதுபற்றித் தங்கள் தபால் அலுவலகத்தில் புகார் செய்துவிட்டு, அந்தப் புகாரின் நகலை எங்களுக்கு அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.**

**— நிர்வாகி, கல்கி.**

மொத்தப் பயணிகளின் இரண்டு மணி நேர உபயோகத்துக்கு மட்டுமே உதவிகரமாய் இருக்கும். ஏழு நாட்கள் தாக்குப்பிடிக்க வேண்டும் என்றால் எப்படி? ஒரே துர் வாடைதான். மூக்கைப் பொத்திக் கொள்வதா மூச்சடங்கிப் போவதா என அவஸ்தையில் நெளிந்த நாட்கள் அவை.

டாய்லெட்டிலிருந்து கழிவுநீர் வாய்க்காலாக புதிய பரிணாமம் பெற்று இருக்கைகளுக்கு கீழே ஓடிவந்தவண்ணமிருந்தது. அவரவர் இருக்கையில் அமர்ந்தபடி தம் வசமிருந்த வாசனைத் திரவியங்களை அவரவர் மீது ஸ்பிரே செய்து கொண்டு' தாற்காலிகமாக 'தற்காத்துக்' கொண்டார்கள்.

ஏழு நாட்களும் போதிய அளவுக்குக் குடிநீர் இல்லை. நாக்கு வறண்டு போகும் நிமிடங்களில் பணிப்பெண்கள் 'கருணை' அடிப்படையில் ஆரஞ்சு அளித்து உதவியதை எந்நாளும் மறக்க முடியாது.

ஊண் குறைந்து உடல் வதங்கி உளம் சோர்ந்து உயிர் மூச்சு தத்தளித்த அந்தக் கொடிய தருணங்களில் கடத்தல்காரர்கள் 'ஜோக்' அடித்து எங்களையெல்லாம் திகைக்க வைத்தார்கள். 'உம்'மென்று இருக்காதீர்கள். நீங்களும் 'ஜோக்' அடியுங்கள் என்று பயணிகளைக் கட்டாயப்படுத்தினார்கள். இவர்கள் என்ன நகைச்சுவைக் கொலைகாரர்களா என்கிற எண்ணமே வந்துவிட்டது எனக்கு.

அவர்களிடம் இருந்த ஆயுதங்கள் பிஸ்டல், வெடிகுண்டுகள், அலாவுதீன் காலத்து பளப்பளா கத்திகள் இவற்றுடன் அவர்கள் அடிக்கடி உதிர்த்துக் கொண்டிருந்த நகைச்சுவைத் துணுக்குகளையும் சேர்த்துக் கொள்ளலாம்.

இத்தனை கனேபரங்களுக்கிடையே பெண் பயணிகள் ஒவ்வொருவரும் கடத்தல்காரர்களை வார்த்தைக்கொருதரம் "அண்ணா.... அண்ணா..." என்று நைச்சியமாய் அழைத்துப் பேசியது அவர்களை சற்றேனும் இளக வைத்து விட்டது என்பது என்னவோ உண்மைதான்.

பூஜா என்கிற வட இந்தியப் பெண். வயது இருபத்தி நான்கு. இருபத்தி ஏழாம் தேதி என்று எண்ணுகிறேன். ஒரு 'கடத்தல்கார அண்ணா'வை அழைத்து தமக்கு இன்று பிறந்த நாள் என்று சொல்லியிருக்கிறார். கடத்தல் தலைவனுக்கு அந்தச் செய்தி கடந்து போயிற்று. கடத்தல்காரர்கள் ஒவ்வொருவரும் அந்தப் பெண்ணுக்கு பிறந்த நாள் வாழ்த்து கூறினார்கள். "விரும்பும் பயணிகள் எழுந்து வந்து வாழ்த்துக் கூறலாம்; பரிசளிக்கலாம்" என கடத்தல்காரர்கள் சொன்னவுடன் ஒவ்வொருவரும் எழுந்து சென்று பூஜாவுக்கு வாழ்த்துச் சொன்னோம்.

இறுதிக் காட்சியாய் எல்லோரையும் மீட்க இந்திய வெளியுறவுத் துறை அமைச்சர் ஜஸ்வந்த் சிங் காந்தஹார் விமான நிலைய தளத்தில் வந்திறங்கியபோதுதான் எங்கள் ஒவ்வொருவருக்கும் மீண்டும் பிறப்பெடுத்த உணர்வு வந்தது.

குடிக்க நீரின்றி, உண்ண உணவுமின்றி, சுவாசிக்க சுத்தமான காற்றுமின்றி (ஒரே வாடை தான்!) அந்த விமானக் கூட்டுக்குள் அடைபட்டுக் கிடந்த ஏழு நாட்களும் ஏழு ஜென்மம்தான்!"

**— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

கவிதா கிருஷ்ணமூர்த்தி, வயலின் கலைஞர் எல். சுப்பிர மணியத்தை சமீபத்தில் திடீர்த் திருமணம் செய்து கொண்ட செய்தி, டீவி மூலம் பரபரப் பாகப் பரவிய உடனே இரு வரும் மும்பை சென்டார் ஹோட்டலுக்கு வந்து விட்ட னர்.

எல். சுப்பிரமணியத்தின் முதல் திருமணத்தின் போது, கவிதா கூடவே இருந்திருக் கிறார் - அவரது மனைவி விஜியின் தோழியாக. "அந்தத் திருமணத்துக்குப் பிறகு எனக்கு விஜியுடன் தொடர்பு விட்டுப் போயிற்று. எத் தனையோ கல்லூரித் தோழி கள் அன்று திருமணத்தில் விஜியுடன் இருந்தோம். இவ ருக்கு அப்போது என்னை நினைவு இருந்திருக்காது!'' என்கிறார் கவிதா.



சுப்பிரமணியத்தின் முதல் மனைவி விஜி, நாலு வருடங் களுக்கு முன், பிரெயின் ட்யூமர் வந்து காலமானார், நாலு குழந்தைகளையும் விட்டு விட்டு.

காஞ்சி சங்கராச்சாரி யாரின் யோசனையின் பேரில், அவரது ஆசியுடன் திருமணம் நடந்ததாம். பாலபெரியவர் ஒரு புரோகிதரையே பெங்களூருக்கு அனுப்பி வைத்தாராம் திருமணத்தை நடத்தி வைக்க.

"எல். சுப்பிரமணியத்தின் குடும்பத்தினர் எல்லா ஏற்பாடுகளையும் செய்து, புடைவை முதற்கொண்டு வாங்கி வைத்திருந்தனர். நான் என் சகோதரிக்கு அவசர அவசரமாக போன் செய்து வேண்டியதை எல்லாம் முடிந்தவரை வாங்கிக் கொண்டு வரச் சொன்னேன்!'' என்கிறார் கவிதா.

இதில் விசேஷம் என்னவென்றால், குழந்தைகளே அப்பாவிடம் மறுமணம் செய்து கொள்ளத் தூண்டியிருக்கிறார்கள். "அந்த பம்பாய் ஆன்ட்டி இருக்கிறாளே!'' என்று குறிப்பாகவே சொல்லி விட்டார் களாம்!

சமீபத்தில் ஒரு ரெக்கார்டிங்கை மாலையில் ஆரம்பித்து மறுநாள் அதிகாலை நாலரை மணிக்கு முடித்திருக்கிறார்கள் இருவரும். தில்லியில் ஆயிரம் குழந்தை களுக்கு முன் கவிதா பாடப் போகிற இந்தப் பாடலுக்கு இசை அமைத்திருக்கிறார் சுப்பிர மணியம். "அவருக்கு வாழ்க்கையில் மட்டும் அல்லாது, இசையிலும் துணையாக இருப்பேன் என்று கனவில் கூடக் கண்ட தில்லை!'' என்கிறார் கவிதா.

"ஹே ராமி"ல் நான் பாட கமல் சான்ஸ் கொடுத்ததுக்கு நன்றி சொல்லணும். அதனால்தான் மறுபடி இவரைச் சந்திக்க முடிந்தது!'' என்கிறார் கவிதா கிருஷ்ண மூர்த்தி. (ஆனால் ஹேராமிலிருந்து எல்.சு., ஏனோ விலகிவிட்டார்!)



# முதலில் தோழி – பிறகு மனைவி!

கவிதாவை ஒவ்வொரு தடவையும் கவிதாஜி கவிதா-ஜி என்று சுப்பிரமணியம் சொல்லும்போதெல்லாம், "நோ, கவிதா – கவிதா" என்று திருத்துகிறார் கவிதா.

"அவருக்குப் பிடித்ததைச் சமைத்துப் போடுவீர்களா?"

"அவர் ப்யூர் வெஜிடேரியன். பிரேக்பாஸ்ட்டுக்கு, லஞ்சுக்கு, டின்னருக்கு எல்லாமே அவருக்கு இட்லி போதும்!" என்கிறார் கவிதா கிண்டலாக. சுப்பிரமணியத்துக்கு அஸிடிடி பிரச்னை, ஓய்வு ஒழிச்சலில்லாத பயணம் – வேலை காரணமாக. (அவருக்காக, என்-வியாக இருந்த கவிதா இப்போது முழு வெஜிடேரியனாம்!)

"கவிதா அமெரிக்காவுக்கு போன் செய்தால் முதலில் குழந்தைகளிடம்தான் 45 நிமிடம் பேசுவாள். அப்புறம் தான் எனக்கு சான்ஸ்!" என்கிறார் எல்.எஸ். குறும்பாக.

கவிதா மூன்று குழந்தைகளை மட்டுமே இங்கே பார்த்திருக்கிறார். நாலாவது குழந்தை நிரஞ்சனி. அமெரிக்காவிலேயே அப்பாவுடன் இருக்கிறாள்.

"குழந்தைகள் எல்லாமே ரொம்ப ஸ்வீட்" என்கிறார் கவிதா.

கவிதா கிருஷ்ணமூர்த்தியைப் பிரபலமாக்கிய 'Mr India' படப் பாடலைப் பாடச் சொல்லிக் கேட்கிறார் சுப்பிரமணியம். "நான் கேட்டதே இல்லையே, பாடு!" என்கிறார். "ஐயோ, மோசமான லிரிக்ஸ். ஆனா ஸ்ரீதேவி பிரமாதமா டான்ஸ் பண்ணியிருக்கா அந்தப் பாட்டுக்கு!" என்று நழுவுகிறார் கவிதா.

இருவரும் சேர்ந்து சில இசை ஆல்பங்கள் வெளியிடப் போகிறார்களாம். "இனி குடும்பம் என்று வந்து விட்டதால் வேறு சில வேலைகளும் சேர்ந்து விடுமே!" என்கிறார் கவிதா.

தான் வசிக்கும் பம்பாய்க்கும் கணவர் இருக்கும் அமெரிக்காவுக்குமாக இனி கவிதா கிருஷ்ணமூர்த்தி பறந்து கொண்டிருப்பார்!

**— சித்தார்த்**

படம் - நன்றி : **மிட்-டே**



• ராமபிரஸாத் பட்

# நட்சத்திரங்கள் வேலை பார்த்த ஹோட்டல்!

**கா**லஞ்சென்ற 'இதயம் பேசுகிறது' மணியன் ரசனை மன்னர். வாய்க்கு ருசியானவை எங்கு கிடைக்கும் என்று தேடிப் பிடித்து சாப்பிட்டு வாசகர்களுக்கும் வழிகாட்டுவார். அவர் உடல்நலம் குன்றி மருத்துவ மனையில் இருந்த போது ஒருநாள் காலை, "மல்லிகைப் பூ போன்ற உடுப்பி ஹோம் இட்லியைச் சாப்பிட வேண்டும் போலிருக்கிறது; யாராவது போய் வாங்கிக் கொண்டு வாருங்களேன்'' என்றாராம்.

மணியன் மட்டுமல்ல; அவரைப் போன்ற எத்தனையோ வி.ஐ.பி. கஸ்டமர்களைக் கவர்ந்தது 'உடுப்பி ஹோம்' மத்ஸ்யா உணவகம்.

''என் தாத்தாவால் அறுபது ஆண்டுகளுக்கு முன்பு துவங்கப்பட்ட ஹோட்டல் இது. நமது வீட்டில் உள்ள ஆறு மாதக் குழந்தைக்கு உணவு ஊட்டும் விஷயத்தில் நாம் எவ்வளவு ஜாக்கிரதையாக இருப்போமோ அது போன்றே வரும் கஸ்டமர்களிடமும் இருக்க வேண்டும் என்பார் என் தந்தை'' என்கிறார் பாகஸ்தரான ராமபிரஸாத் பட்.

எம்.ஜி.ஆர். இறக்கும் வரை ஒவ்வொரு மாதமும் 25-ம் தேதி அன்று ஐம்பது பேர் சாப்பிட பாதாம் கீர் மட்டும் ராமாபுரம் தோட்டத்துக்கு அனுப்புவார்களாம். புதுவையின் முன்னாள் முதல்வர் வைத்திய லிங்கம், மாநில காங்கிரஸ் தலைவர் சண்முகம் என்று பாண்டிச்சேரி மாநிலப் பிரமுகர்களும் ரெகுலராக விஸிட் செய்கிறார்கள். அரவிந்த்சாமி, விஸ்வநாதன் ஆனந்த், முன்னாள் டி.ஜி.பி. மோகன்தாஸ், திண்டுக்கல் எம்.பி. சீனிவாசன், நடிகை கஸ்தூரி என்று பிரபலங்களின் நடமாட்டம் அவ்வப்போது மத்ஸ்யாவில் உண்டு. மறைந்த

அட்டர்னி ஜெனரல் ராமசாமி மத்ஸ் யாவின் ரசிகர்.

"ஒருமுறை விஸ்வனாதன் ஆனந்தும், அரவிந்த்சாமியும் சாப்பிட்டுக் கொண்டிருந் தார்கள். கிராண்ட் மாஸ்டர் ஆனந்தை அம்போவென விட்டு விட்டு இளம்பெண் கள் அரவிந்திடம் விழுந்து, விழுந்து ஆட்டோகிராப் வாங்க, அவருக்குச் சங்கட மாகப் போய்விட்டது."

ஒரு போனஸ் தகவல் : திரை உலகுக்கு வரும் முன்னர் நாசர், தலைவாசல் விஜய், செல்வா ஆகியோர் இங்கே பணியாற்றிய வர்கள்தான்!

• விசாலம் காப்பி

**ம**துரை மக்களை மட்டுமல்ல... சென்னை பிரபலங்களையும் மதுரை கோரிப்பாளையம் விசாலம் காப்பி மயக்கி வைத்திருக்கிறது. 'கரகாட்டக்காரன்' சூப்பர் டூப்பர் ஹிட்டான போது மேலூருக்கு வரும்போதெல்லாம் ராமராஜன் ஐந்து காப்பிக்காக கார் அனுப்பி வாங்கி வரச் சொல்வாராம் – சொல்கிறார் கோட்டைராஜ் – விசாலம் காப்பி கேஷியர். 30 கிலோ மீட்டர் காப்பிக்காக கார் வருகிறது என்றால் காப்பியின் பெருமையைக் கதைக்கத்தான் வேண்டுமா? கே.பி. என்பதை விட காப்பி என்று சொல்லலாம். அந்தளவிற்கு விசாலம் காப்பியின் ரசிகர் கே. பாலசந்தர்! ரயிலில் அவர் வந்து இறங்கும் முன் பிளாஸ்க்கில் விசாலம் காப்பி ரெடியாக இருக்குமாம்!

**த**மிழகத்தில் மதுரை, திருச்சி தவிர வேறு எந்த நகரத்திலும் ஜிகர்தண்டா இல்லை! முஷ்டியை மடக்கி வீரத்தை வெளிப்படுத்தும் வார்த்தையைப் போல அது என்ன, ஜிகர்தண்டா? யாரிடத்தும் வம்புதும்புகளுக்குப் போக வைத்திடாத இது, ஒரு வகையான பானம்! அவ்வளவு தான்! அருந்தினால் அடிவயிறைக் குளிர வைத்து விடும். வயிற்று வலி, வயிற்றுக் கடுப்பு போன்றவற்றுக்கு இந்த பானம் நல்லது.

இதனை எப்படித் தயாரிக் கிறார்கள்?

கடல்பாசியின் வேர்கள், கொஞ்சம் பால், கொஞ்சம் பைனாப்பிள் எஸென்ஸ், இனிப்புக்காக சர்க்கரை இதனு டன் ஐஸ் கட்டிகள். கலந்தடித் தால் வந்து விடுகிறது இந்த பானம். ஆனால், ஜிகிர்தண் டாவின் சுவை, அதில் சேர்க்கும் பாலைப் பொறுத்ததுதான் என்கிறார் மதுரை 'ஜிகிர்தண்டர்' ராஜகோபால். எட்டு ரூபாயி லிருந்து பதினான்கு ரூபாய் வரை இந்த ஜிகர்தண்டா பானத்தில் வெரைடி உண்டு!

**— நமது நிருபர்கள்**

படங்கள் : **சுபமணி, வெங்கடேஷ்**



**தனவேல்**
**(நெல்லை மாவட்ட கலெக்டர்):**

எனக்கு நெல்லை ஆரியாஸ் ஹோட்டலின் சிக்கன் ப்ரைட் ரைஸும், ஜிஞ்சர் சிக்கனும் மிகவும் பிடிக்கும். அதிகமான காரமில்லாமல் மிக ருசியாக அது இருப்பதே அதன் சிறப்பு. வெஜிடேரியன் டிஷ் என்றால் ஜானகிராம் ஹோட்டலின் தோசை.

# KALKI SHOPPING PAGE



## "கல்கி ஷாப்பிங்"

பக்கங்களில்
விளம்பரம்
செய்ய ரூ.1250/-
மட்டுமே. செய்து
பயனடைவீர்!

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை – 97.
போன்: 2345622, 2345623

---

## கோலம் முதல்

தங்கள்
அன்பு மகள் திருமணத்திற்கு
கலையம்சமான உயர்தர
சாப்பாட்டுடன்
வேளாவேளைக்கு காபி,
வைதீக ஏற்பாடுகள், பூ மாலை,
நாதஸ்வரம், பச்சபுடி சாமான்கள்,
சீர் பக்ஷணங்கள்,
தாம்பூல வகையறா,
நிச்சயதார்த்தம்
பழ தட்டுகள்,

## கட்டு சாதம் வரை

சபைக்கு தேவையான அனைத்தும்
காண்டிராக்ட் முறையில் செய்து தர அணுகவும்

**S.R. RAGAVAN**
**SRI SAI MARRIAGE SERVICES**
35/4, TAYLOR ESTATE II ST,
KODAMBAKKAM
CHENNAI 600 024 Ph: 4840914
email: ragavan@rocketmail.Com

***We undertake Catering for smaller function also***

---

## திக்குவாய்
## திக்குவாய்
## திக்குவாய்
## திக்குவாய்
## திக்குவாய்

- ☆ திக்கிப் பேசுவது பிறவி நோய் இல்லை
- ☆ அது ஒரு நோயே இல்லை
- ☆ பய உணர்வால் வருவது
- ☆ அதை முழுமையாக நீக்க இயலும்

ஆறு நாட்களில்
புதிய செயற் சிகிச்சை
மூலம் பூரண குணம் பெற
அணுகவும் :
உத்திரவாதம்

**இந்திய திக்குவாய் நீக்கு நிறுவனம்**
த.பெ.எண். 7301, கோவை - 641 046.
☎ : 0422 - 425188 (R) 422909
📱 : 98422-05444
💻 : rajesh_g46@yahoo.com

**கிளைகள் இல்லை**

---

## சிந்தாமணி டிராவல்ஸ்,

நெ. 24, ஆற்காடு சாலை,
கோடம்பாக்கம்,
சென்னை – 24
போன் : 4831806, 486 0543.

31.1.2000 முதல் 6.2.2000 வரை பாண்டிய நாட்டு சிவத்தலங்கள் & பாபனாசம், தை அமாவாசை பானதீர்த்தம்.

20.2.2000 முதல் 28.2.2000 வரை வைணவத் தலங்கள் – 64 (தொண்டை நாடு, நடுநாடு மற்றும் சோழ நாடு)

7.3.2000 முதல் 12.3.2000 வரை அகோபிலம் மகாநந்தி, மந்திராலயம், ஸ்ரீசைலம், புட்டப்பர்த்தி.

20.3.2000 முதல் 26.3.2000 வரை சோழ நாட்டு சிவத்தலங்கள் – 44

31.3.2000 முதல் 2.4.2000 நவகிரகத் தலங்கள்.

பௌர்ணமி தோறும் திருவண்ணாமலை, திருவக்கரை, பிரதோஷம் தோறும் சுருட்டப்பள்ளி.

ஞாயிறுதோறும் ஒரு நாள் சுற்றுலா.

• தனசேகர்



• சந்திர சேகர்



• கோமளா'ஸ்

# சுவை, சுத்தம்; சுடச்சுட!

சிங்கப்பூரில் உள்ள தங்கள் அப்பர் டிக்சன் சாலையில் உள்ளது போலவே வடிவமைத்து, அதே மாதிரி நாற்காலிகள், மேசைகள், இன்டீரியர் டெகரேஷன் என்று அசத்தியிருக்கும் கோமளா'ஸ், சென்னையில் காலூன்றியது சென்ற வருடம்தான்.

விளம்பரம் எதுவும் செய்யாமலே, வாய் மொழியாகப் புகழ் பரவி, இன்று கோடம்பாக்கம் நெடுஞ்சாலையில் உள்ள இந்த நவீன ஃபாஸ்ட் ஃபுட் கூடத்தின் உள்ளே நுழைந்தாலே இளமையின் அட்டகாசம்தான். (வரவேற்புச் சொல்லுகிற பெண் முதல், கவுண்டர், டெலிவரி என்று சகலமும் இளைஞர்கள், இளைஞிகள்தாம்.)

"1947ல் சிங்கப்பூரில் ராஜு என்பவர், செரங்கூன் சாலையில் கோமள விலாஸ் ஆரம்பித்தார். அவர் பிள்ளைகள் ராஜு தனசேகர், ராஜு சந்திரசேகர் இருவரும் 95ல் ஃபாஸ்ட் ஃபுட் தேவைக்கு ஈடு கொடுக்க சிங்கப்பூரில் கோமளா'ஸ் ஆரம்பித்தார்கள். இப்போது அப்பர் டிக்சன் சாலை, ஆர்க்காடு சாலை, நார்த் பிரிட்ஜ் சாலை என்று மூன்று இடங்

களில் சக்கைப் போடு போடு கிறது" என்றார் மேலாளர்.

ஒரே சமயத்தில் சுமார் 200 பேர் அமர்ந்து சாப்பிடக் கூடிய வசதி. அன்றைய பிரபலங்கள் முதல் இன்றைய ஸ்டார் பாடகர்கள் வரை யார் இசையையும் விரும்பிக் கேட்கக் கூடிய ஜூக் பாக்ஸ் ஒரு தனி அட்ராக்‌ஷன்.




களை வைத்துத் தருகிற பச்சை நிற ட்ரே தவிர, ஸ்பூன் முதற் கொண்டு எல்லா பிளாஸ்டிக் பாத்திரங்களும் டிஸ்போஸபிள்தாம். பிளேட் கழுவுகிற வேலையே கிடையாது! மீல்ஸ் இலையில், ட்ரேயில் வைத்து வழங்கப்படுகிறது. குடிக்க மினரல் வாட்டர். கம்பெனியே நேரிடையாக சப்ளை செய்துவிடுகிறதாம்.

"எதுவாயிருந்தாலும் மூன்றே நிமிடங்களில் கொடுத்து விடுகிறோம். ஸ்பெஷல் மீல்ஸ், மினி மீல்ஸ் தவிர, தோசை மட்டும் பதினேழு வெரைட்டிகள். (கோபாலஸின் சின்னமே மடித்த தோசைக்கு மூக்கும், முழியும்தான்.) சாட் ஐட்டங்கள் பாவ் பாஜியும், பேல்பூரியும் என்றால் வெஜிடபிள் பர்கர், ஃப்ரெஞ்ச் ஃப்ரைஸ், சான்ட்விச்சஸ் என்று மேற்கத்திய சமாசாரங்களும் உண்டு. தந்தூரி ஐட்டத்தில் 20 வகைகள்!

ஆர்டர் கொடுத்து, பணம் செலுத்தும் பில்லிங் சென்டருக்கும், கிச்சனுக்கும் இடையே கம்ப்யூட்டர் தொடர்பு இருக்கிறது. உடனுக்குடன் செய்தி போய் விடுகிறது. இதனால் தயாரிப்பில் ஓர் ஒழுங்கு மட்டுமல்ல, காத்திருக்கிற நேரம் குறைச்சல்.

இது மாதிரி சைவ ஃபாஸ்ட் ஃபுட் அவுட்லெட் திறக்கச் சொல்லி 15 நாடுகளிலிருந்து, ஐம்பதுக்கும் மேற்பட்ட வேண்டுகோள்கள் வந்து விட்டன. ஆஸ்திரேலியா இதில் ரொம்ப தீவிரமாக இருக்கிறது. இங்கே பெங்களூர், மும்பை, தில்லியில் தொடங்குகிற உத்தேசம் இருக்கிறதாம். ஃபிரான்சைஸ் முறையில் இதே தரத்தில், இதே மாதிரி இந்தியா முழுக்க நடத்த முடியுமா என்றும் யோசித்து வருகிறார்கள் சகோதரர்கள்.

லஞ்ச் டைம் 12 முதல் 3 மணி வரை, டின்னர் டைம் 7 முதல் 11 வரை அசாத்தியக் கூட்டம். எழுபது சதவிகிதம் நிரந்தர வாடிக்கையாளர்கள். "க்ளீன் அன்ட் க்விக். நான் ரெகுலரா இங்கதான் வரேன்" என்றார் ஓர் எக்ஸிக்யூடிவ். மாலை கும்பல் எல்லாம் குடும்பங்கள்.

குழந்தைகளின் கிட்ஸ் மீல்ஸில் மினி இட்லி, மினி பூரி, மினி தோசை. விளையாட ப்ளே ஏரியா. கைக் குழந்தை என்றால் குதித்துக் கீழே விழாமல் இருக்க, பாதுகாப்பான குட்டி நாற்காலி கூட இருக்கிறது!

தயாரிப்பு எல்லாமே டபிள் ரிஃபைன்ட் ஆயிலில்தான். ஐட்டங்





— சாருகேசி

புகைப் படங்கள்: வெங்கடேஷ்

# சர்க்கரை நோய்க்கான புதிய ஹெர்பல் ஸிரப்



சர்க்கரை நோய்க்கான இந்தப் புதிய ஹெர்பல் ஸிரப், நோயாளியின் உடல்நலனையே கருத்தில் கொண்டு தயாரிக்கப்பட்டது.

தற்காலத்தில், இரத்தத்தில் சர்க்கரையின் அளவினை உடனே குறைக்கக்கூடிய திறன்வாய்ந்த பல மருந்துத் தயாரிப்புகள், மலிவான விலைகளில் எளிதில் கிடைக்கின்றன. இதனால், கட்டுப்பாடில்லாத சர்க்கரைச் சத்து மிகுந்த உணவினை உட்கொண்டு, உடனே மருந்தினையும் உட்கொள்ளும் வழக்கம் சர்க்கரை நோயாளிகளிடையே பரவலாகக் காணப்படுகிறது. ஆனால், திடீர் திடீரென மாறும் இரத்தச் சர்க்கரையின் அளவுகளால் நாளடைவில் இரத்தக் குழாய்களின் சுருங்கிவிரியும்தன்மை பாதிப்புக்குள்ளாகும் என்பதை எவருமே உணர வாய்ப்பில்லை.

இம்மாற்றங்களால் நாளடைவில் இரத்தக்குழாய்ச் சுவர்கள் தடிப்புற்று, உடலின் முக்கிய உறுப்புகள் பாதிப்புக்குள்ளாகி, குணப்படுத்த இயலாத மாற்றங்களை அடைகின்றன. உதாரணமாக, இரத்தக் குழாய்களில் ஏற்படும் குறைபாடுகளால் சிறுநீரகச் செயலிழப்பு, கண் பார்வையிழப்பு, நரம்பு மண்டல பாதிப்பால் கை, கால்களில் உணர்ச்சியின்மை, ஆறாத புண் ஏற்படல், மாரடைப்பு, பக்கவாதம் போன்றவை ஏற்படலாம்.

இவற்றுக்கெல்லாம் தனித்தனியே மருத்துவம் மேற்கொண்டு நம் உடல்நிலையை சீரழிவிலிருந்து காப்பாற்ற முயல்வதை விட, வராமல் தடுப்பதே புத்திசாலித்தனமாகும். இதற்கெனவே,

## அறிமுகப்படுத்துகிறோம்

## சர்க்கரை நோய்க்கான புதிய ஹெர்பல் ஸிரப்

மேற்குத் தொடர்ச்சி மலையில் வளரும் மூலிகைகளைக் கொண்டு உருவாக்கப்பட்டது. இதில் சேரும் மூலிகைகளின் மருத்துவப் பண்பினைக் குறிக்கும் மருத்துவக்குறிப்புகள் பழங்கால சித்த மருத்துவ ஏடுகளில் காணப்பட்ட போதிலும், பல வகையான பரிசோதனைகளையும் கடந்த பின்னரே இம்மருந்து அறிமுகப் படுத்தப்பட்டுள்ளது. சோதனைக்குள்ளாக்கப் பட்ட பலரில் இம்மருந்து சிறப்பாகச் செயலாற்றியுள்ளது.

**ஹெர்பல் ஸிரப் உடலில் செயல்படும் விதம்**

* கணையத்தைச் சீரமைத்தல்
* இன்சுலின் சுரப்பினைத் தூண்டுதல்
* ஈரல் மற்றும் சிறுநீரகத்தைப் பாதுகாத்தல்
* பிற உறுப்புகள் பாதிப்பதைத் தடுத்தல்
* சர்க்கரை மற்றும் கொழுப்பு வளர்-சிதைமாற்றத்தை ஒழுங்குபடுத்தல்
* எந்த வித பக்க விளைவுகளையும் ஏற்படுத்தாமல் செயல்புரிதல்.

**ஹெர்பல் ஸிரப்பின் நோக்கம்**

இந்த ஸிரப்பின் நோக்கமே சர்க்கரை நோயாளிகள் தினமும் மருந்து உட்கொள்வதிலிருந்து தடுத்தலே ஆகும். இந்த ஸிரப்பை பரிந்துரைக்கப்பட்ட கால அளவு அருந்தி வந்தால் சர்க்கரையின் அளவு கட்டுபாட்டிற்குள் வந்து விடும். மீண்டும் சிலகாலம் அருந்திய பிறகு உணவுக் கட்டுப்பாடு மற்றும் யோகப் பயிற்சிகளின் மூலமே சர்க்கரையின் அளவினை கட்டுக்குள் வைக்கலாம். ஏனெனில், நீண்டகாலம் உட்கொள்ளப்படும் எந்த மருந்துமே நாட்பட்ட நிலையில் கல்லீரல் மற்றும் சிறுநீரகத்தில் பாதிப்பினை உண்டாக்கலாம்.

**Dr. J. HEMASUJATHA, B.S.M.S., M.D. (Acu).,**

**ANNAI HOSPITAL**

6, Vasan Street , T. Nagar, Chennai - 600017. Near Panagal Park - ARR Complex **Tele : 8252988**

**குறிப்பு:** ஸிரப்புடன் சர்க்கரை நோயாளிகளுக்கான உணவுக் கட்டுப்பாடு அட்டவணை மற்றும் யோகாசனங்களை விளக்கும் வரைபடங்களுடன் கூடிய பகுதியும் இணைத்து வழங்கப்படும்.

# முதல் மழைத் துளி



11

பெங்களூர் தட்பவெப்பம், அரவிந்தனுக்கு எப்போதும் பிடிக்கிற விஷயம். குளிர்ந்தும் குளிராத குளிர். விடிந்தும், எழ மனம் இன்றிக் குப்புறப்படுத்துக் கொண்டு அடம்பிடிக்கும் குழந்தை மாதிரி, சோம்பல் கொண்ட தெரு. ஸ்வெட்டரை சட்டை போல் அணிகிற உழைக்கும் ஜனங்கள். சூழ்நிலைக்கு இதமான தேநீர்.

கனகராஜ் தங்கியிருக்கும் பகுதியைக் கண்டுபிடிப்பதில், அரவிந்தனுக்குச் சிரமம் இல்லை. மேல் மத்தியதர வாழ்க்கை வசதியானவர் குடியிருப்பு ஒன்றில் அவன் இருந்தான். ஒரு பங்களாவையே வாடகைக்கு எடுக்கும் அளவுக்குக் கம்பெனி அவனுக்கு 'அலவன்ஸ்' கொடுத்தாலும், அதை அவன் மிச்சப்படுத்துகிறான் என்று லலிதா சொல்லியிருந்தாள். இந்த அசங்கியம், எவரிடம் இல்லை, என்று அரவிந்தன் சொல்லியிருந்தான்.

அரவிந்தன் சென்ற நேரத்துக்கு கனகராஜ் உறங்கிக் கொண்டிருந்தான். இவனைக் கண்டதும் அவன் அதிர்ச்சி அடைந்தது முகத்தில் தெரிந்தது. எனினும் வரவேற்றான். அமரச் சொன்னான். தானே காப்பி போட்டுக் கொடுத்தான்.

அரவிந்தன் வந்த காரியத்தைச் சொன்னான்.

"தில்லி சமாசாரத்தை முடித்துக் கொடுத்து விடுகிறேன். பைலை என்னிடம் ஒப்படையுங்கள்."

கனகராஜ் நம்ப முடியாதவன் போல ஆனான்.

"என்ன திடீரென்று... பாரதிக்கு இதில் இஷ்டம் இல்லையே."

"பாரதி மேடத்துக்கு இன்னும் இதில் இஷ்டம் இல்லைதான். இந்தச் சின்னக் காரியத்துக்காக நீங்கள் தம்பதிகள் சண்டை போட்டுக் கொண்டு பிரிந்திருக்க வேண்டாமே என்றுதான், நானே வந்து இருக்கிறேன்."

கனகராஜ் மௌனமாக இருந்துவிட்டுச் சொன்னான்.

"எங்கள் பிரச்னைக்கு இது மட்டும் காரணம் இல்லை. நிறைய மனச் சங்கடங்கள். உங்களிடம் சொல்வதற்கு என்ன? அவன் மனைவியாக இல்லை. ஏதோ தனிப்பட்ட பொம்பளை மாதிரியிருக்கிறாள்."

"எனக்குப் புரியலை."

"அதாவது, புருஷனோட சுகதுக்கங்கள்ளே பங்குகொள்றதும், அவன் முன்னேற்றத்துக்கு உதவியா இருக்கிறதும்தானே, மனைவியோட கடமைன்னு நமக்குச் சாஸ்திரம் சொல்லிக் கொடுத்திருக்கு?"

"புருஷனுக்கு மனைவி உதவியா இருக்கிறது சரி... அது போல மனைவிக்கும் கணவன்



உதவியா இருக்கணும்னு, சொல்லலையா, நம் சாஸ்திரம்...''

''அந்த அளவுக்குச் சொல்லலை, சார்.''

''எந்த அளவுக்கு? கணவனுக்கு உயர்வு கொடுத்த அளவுக்கு இல்லைன்னு வச்சுக்க லாமா?''

''வச்சுக்கலாமே.''

''அப்படீன்னா, அது சாஸ்திரமாகுமா?''

''என்ன இப்படிப் பேசறீங்க, அரவிந் தன்?''

இனியும் பேசி, கருத்து வேறுபாட்டை அதிகப்படுத்தி விட வேண்டாம் என்று,

பிரபஞ்சன்

அரவிந்தனுக்குத் தோன்றியது.

"இருக்கட்டும். உங்கள் 'பைலைக்' கொடுங்கள். என்னால் முடிந்ததைச் செய்ய றேன்."

"கனகராஜ் பைலைக் கொடுத்து, அவன் தேவைகளையும் சொல்லி விட்டுக் கேட்டான்.

"பாரதி, இதுக்கு ஒத்துக் கொண்டாளா?"

"இல்லை."

"நீங்கள் பாரதிக்கு நண்பராக இருந்தும், அவளை மீறி எனக்கு உதவ வருகிறீர்களே?"

"நீங்களும் என் நண்பர்தானே?"

கனகராஜ், ரகசியம் பேசுபவன் போல, அரவிந்தன் காதருகே சொன்னான்.

"இந்தக் காரியத்தை முடித்துக் கொடுத்தீர்கள் என்றால், பத்துப் பெர்சண்ட் உங்களுக்குக் கிடைக்க ஏற்பாடு செய்கிறேன்."

**நக்கீரன் கோபால்:**
எங்க ஊரில் (அருப்புக் கோட்டை) நடனத் தேவர் கடை என்று ஒரு ஓட்டல் இருக்கிறது. அங்கே 'சுக்கா' என்று ஒரு என்.வி ஐட்டம் கிடைக்கும். அமர்க்களமான டேஸ்ட்' நான் எப்போது அருப்புக் கோட்டை போனாலும், சுக்காவை மிஸ் பண்ணவே மாட்டேன்!



"எதுக்கு பர்சன்டேஜ்?"

"உங்கள் பங்கு. நான் லாபம் அடைந்தால், உங்களுக்குப் பங்கு கொடுக்கத்தானே வேணும்?"

"வேண்டாம். எனக்குப் பங்கு வேண்டாம்."

"இல்லை. எல்லா வகையிலும், நாம், தொழில்முறைத்தனமாக நடந்து கொள்வது நல்லது."

அரவிந்தன் மனவருத்தமுடன், பேசாமல் இருந்து விட்டான்.

**சா**ருமதிக்குப் பிள்ளையைப் பார்த்து ஆச்சர்யம். வா, வா என்றாலும் வராதவன், திடும் என்று வந்திருக்கிறான். அப்பாவிடம் ஒரு சிபாரிசு வேறு செய்திருக்கிறான்.

"இன்னும் பத்து நாளாவது இருப்பியோ, அரவிந்தா?" என்றாள் சாருமதி.

"அவ்வளவு தாங்காது அம்மா. அப்பாவிடம் கொடுத்திருக்கிற வேலை, முடிந்து விடும் என்ற நம்பிக்கை வந்ததும், கிளம்பி விடுவேன்."

குடும்பத்துடன் நீண்ட நாளைக்குப் பிறகு, சேர்ந்தாற்போல ஒரு வாரம் தங்கியிருந்தான், அரவிந்தன். அம்மாவுடன், ஒரு சின்ன 'டூர்' போனான். தஞ்சாவூர், மதுரை, ஸ்ரீரங்கம் போய் வந்தான். அம்மாவுக்குத் தான் என்ன சந்தோஷம்?

"பரவாயில்லையே... கோயிலுக்கு எல்லாம் வருகிறாயே" என்றாள்.

"ஏம்மா, எனக்கும் சாமிக்கும் சண்டையா, என்ன? எனக்குக் கோயில் ரொம்பவும் பிடிக்கும். எத்தனை கலைகளோட சங்கமம் கோயில்? சிற்பக் கலை, ஓவியக் கலை, இசை, நாட்டியம், பெரிய மனுசர்கள் பஞ்சாயத்துக் கூடற இடம், ஒரு வகையான நீதிமன்றம், ஜனங்கள் தர்ம காரியம் பண்ற ஸ்தானம், எல்லாத்துக்கும் மேலே, கடவுள் இருக்கிற இடம். இதைப் போயி, யாராவது வெறுக்க முடியுமா?"

ஒருநாள் இரவு, அம்மா கேட்டாள்.

"யாரது, அந்த பாரதி? என்னத்துக்கு இத்தனை அக்கறை காட்டறே, அந்தப் பொண்ணு மேல?"

"மரியாதைதாம்மா. மரியாதை காரணமா வர்ற அன்பு. அந்த அம்மா, பெரிய கலைஞர். அவங்க பாட்டு எனக்கு ரொம்பவும் பிடிக்கும். அவ்வளவுதான்."

வேறு ஒரு சமயத்தில் அம்மா ஞாபகமாகக் கேட்டாள்.

"அந்த பாரதி, புருஷனோடு ஏன் இல்லை?"

"அப்படி இல்லைம்மா. புருஷன்தான் பாரதியோட இல்லை. ஏதோ ரெண்டு பேருக்குள்ள மனஸ்தாபம். இனிமே, ஒண்ணு சேர்ந்துடுவாங்க..."

"அதுக்கு ஏதானும் முயற்சி பண்ணறயா, நீ?"

"ஆமாம்மா... இருவரையும் சேர்த்து வைக்க, என்னால் முடிந்ததைச் செய்ய றேன்."

"செய். அது பெரிய புண்ணியம்பா..."

ஒரு வாரம் தங்கியிருந்து, கனகராஜுக்கு, அவன் வேலையை முடித்து, அது முடிந்து விடும் என்கிற நம்பிக்கை ஏற்பட்டவுடன் ஊர் திரும்பினான், அரவிந்தன்.

**பா**ரதியைப் பார்த்துப் பத்து நாட்களாகி விட்டிருந்தது. அவளை அன்று மாலை சந்திப்பது என்று லலிதாவும், அரவிந்தனும் தீர்மானித்திருந்தார்கள். பாரதி அவர்களை மகிழ்ச்சியுடன் வரவேற்றாள். லலிதா முந்திக் கொண்டு சொன்னாள்.

"உன்னைப் பார்த்துப் பத்து நாட்களுக்கு மேல் ஆச்சாமே. பாவம், அரவிந்தன் ஏங்கிப் போனார்."

அரவிந்தன் மட்டும் சிரிக்காமல், அவர்களைப் பார்த்தான்.

"எங்கே அரவிந்தன், ஆளையே காணலை? எங்கே போனீங்க?"

"ஆபீஸ் வேலை. டூர் போயிருந்தேன்."

"எந்த ஊருக்கு?" என்றாள் பாரதி.

"என் சொந்த ஊருக்கு."

"எது உங்கள் சொந்த ஊர், பெங்களூரா?"

லலிதா விவரம் புரியாமல், யதார்த்தமாக, "இல்லையே" என்றாள்.

"என்ன அரவிந்தன்? பாரதி என்ன சொல்கிறாள்?"

அரவிந்தன், அமைதி காத்தான்.

"இன்னும் மறைக்க வேண்டுமா, அரவிந்தன்?" என்றாள் பாரதி.

"தேவைதானா? நான் கனகராஜ் சாரைப் பார்த்தேன். உதவினேன்."

லலிதா அதிர்ச்சியடைந்தாள்.

"என்ன அரவிந்தன், நீயா அதைச் செய்தே? என்னால் நம்ப முடியவில்லையே?"

"நம்பித்தான் ஆக வேண்டும். லலிதா, என்னிடம் கனகராஜே பேசினார். ஏதோ நான்தான் காரணம் என்று நன்றியும் சொன்னார்."

"பாரதி மேடம், என்னை மன்னியுங்கள்."

"என்னத்துக்கு? உங்கள் பெரிய மனசு எனக்குப் புரிகிறது. நாங்கள் பிரிந்து இருக்கக்கூடாது என்பதற்காக, நீங்கள் தானே வலியப் போய் இந்த உதவியைச் செய்து விட்டு வந்திருக்கிறீர்கள்."

திடுமென, முகத்தை மூடிக் கொண்டு, பாரதி அழுதாள்.

ஏதோ குற்றம் செய்த குறுகுறுப்பில் அமர்ந்திருந்தான், அரவிந்தன்.

கண்ணைத் துடைத்துக் கொண்டு, தன்னைத் தேற்றிக் கொண்டாள், பாரதி.

"சாரி, அரவிந்தன். உங்கள் நல்ல மனசு, என்னை அழ வைத்து விட்டது."

ஸ்தம்பித்துப் போய் அமர்ந்திருந்த லலிதா, "அரவிந்தன்... உன் மேல் எனக்கு மதிப்பு கூடுகிறது" என்றாள்.

"இல்லை. இனிமேல், அந்த விஷயம் பற்றிப் பேச வேண்டாம். எனக்கு வெட்கமாக இருக்கு."

"பாரதி... உன் வீட்டுக்காரர், இப்போது சமரசம் ஆயிட்டாரா?"

"ஆன மாதிரிதான். ரொம்ப சந்தோஷமாகப் பேசினார். மனைவியின் கடமையைச் செய்து விட்டேன் என்றார்."

பாரதி சிரித்தாள்.

"எப்படியோ, விஷயம் நல்லபடியாக முடிந்து விட்டது."

"இல்லை."

"என்ன இப்படிச் சொல்கிறாய்?"

"கணவனை அடைய, ஒரு தப்பு செய்ய வேண்டுமா? எனக்காக ஒரு மனிதர், அவருக்குப் பிடிக்காத ஒரு தப்பைச் செய்ய தான் காரணமாக இருப்பதும், அந்தத் தப்பு, எங்கள் தாம்பத்யத்தைச் சேர்த்து வைக்கும் என்றால், அதன் பேர், தாம்பத்யமா? ஏதோ, தப்பு செய்து விட்டது மாதிரி இருக்கு, லலிதா."

"இதுவே, அவர் செய்த முதலும் கடைசியுமான தப்பாக இருக்கட்டுமே."

"இருக்காது. இது தொடரும்."

"எதை வைத்துச் சொல்கிறாய், பாரதி."

"என் கணவருடன் சில வருஷங்கள் நான் வாழ்ந்து இருக்கிறேனே."

"பாரதி மேடம், நீங்கள் சேர்ந்து வாழ முடியாதா?"

பாரதி தரையைப் பார்த்துக் கொண்டு



**தேவதர்ஷினி:** அண்ணாநகரில் சிந்தாமணிக்கு அருகில் மிலன் என்று ஒரு சிறிய ரெஸ்டாரன்ட். அங்கே கிடைக்கிற வெஜிடபிள் பிரைடு ரைஸ் மற்றும் காலி ஃபிளவர் மஞ்சூரியன் தான் எனக்குப் பிடித்த ஐட்டம். குடும்பத்துடன் போய் சாப்பிடுவதும் உண்டு. போய் சாப்பிட போரடித்தால், ஆர்டர் கொடுத்து வீட்டுக்கே வரவழைத்து சாப்பிடுவதும் உண்டு.



அமைதியாக இருந்தாள்.

"பொறுத்திருந்து பார்ப்போம்."

பாரதி எழுந்து, தன் கேசட்டைச் சுழல வைத்தான்.

"மூழு முதலே ஐம் புலனுக்கும்
மூவர்க்கும் என் தனக்கும்
வழிமுதலே நின் படி அடியார்
திறன் வான் குழுமிக்
செழு முதலே அருள்தந்து இருக்க
இரங்கும் கொல்லோ என்று
அழும் அதுவே அன்றி மற்று என்
செய்கேன் பொன் அம்பலத்து அரசே...

மிகுந்த உருக்கமாகப் பாடியிருந்தாள் பாரதி. அரவிந்தனுக்குக் கூடக் கண்ணீர் கசிய இருந்தது இந்தப் பதிகம்.

பாட்டு, சூழ்நிலையின் வெறுமையைக் கொஞ்சம் தளர்த்தியது.

அரவிந்தன் சொன்னான்.

"பாரதி மேடம், ஏற்கெனவே சொன்னதுதான். உங்கள் திறமைகள் வீணாகி விடக் கூடாது. ஒரு இசைப் பள்ளியை நீங்களே தொடங்கினால் என்ன? அஞ்சலை மாதிரி எத்தனை பெண்களை உங்களால் உருவாக்க முடியும்? வாழ்க்கைக்கு நிறமோ, குணமோ இல்லையே. இருக்கிறதா? உங்கள் வாழ்க்கைக்கு நீங்கள்தான் வண்ணத்தைச் சேர்க்க வேண்டும்."

பாரதி அமைதியுடன் அவன் சொல்வதைக் கேட்டாள்.

**மாண்டயின் சீனிவாஸ்:**

அமெரிக்காவில் மெக்டொனால்டு உணவகங்கள் நிறைய உண்டு. அங்கே மில்க் ஷேக் சாப்பிட்டேன். அப்பப்பா! என்ன டேஸ்ட்! அதே போல அங்கே என்னைக் கவர்ந்த இன்னொரு ஐட்டம் பாப்கார்ன். இந்தியாவில் கூட மெக்டொனால்டு, தங்கள் உணவகங்களை ஆரம்பித்து விட்டார்களாம். சென்னையில் எப்போது கிளை திறக்கப் போகிறார்கள். போய் மில்க் ஷேக் குடித்துவிட்டு, பாப்கார்ன் கொறிக்கலாம் என்று காத்துக் கொண்டிருக்கிறேன்.



லலிதாவும் அவன் கருத்தை ஆதரித்தாள்.

அரவிந்தன் அரசரடியில் ஒரு வீடு பார்ப்பதாகச் சொன்னான்.

"அந்த ஏரியா, ரொம்ப பணக்காரர்கள் வாழும் இடமாயிற்றே?"

"அந்தக் குடும்பத்துப் பெண்கள்தானே அதிகம் பேர் படிக்க வருகிறார்கள்?"

"அதுக்கில்லை. வாடகை, அட்வான்ஸ் அதிகம் இருக்குமே?"

"அதுபற்றி நீங்கள் ஏன் கவலைப் படுகிறீர்கள்?"

"பணம் வேண்டாமா?"

"என்னிடம் இருக்கிறதே."

"அது உங்கள் பணம்."

"நட்புக்கு, இந்தப் பேதம் அவசியம் தானா?"

லலிதா குறுக்கிட்டாள்.

"அரவிந்தன் பணக்காரன்டி, பாரதி."

"எனக்கு இவ்வளவு உதவி செய்ய வேண்டுமா?"

"ஏன் செய்யக் கூடாது?"

பாரதி அமைதியாக இருந்துவிட்டுச் சொன்னாள்.

"என்னிடம் வேறு மாதிரி எதையும் எதிர் பார்க்கிறாரா அரவிந்தன்?"

அரவிந்தன் துடித்துப் போனான்.

"வேறு எதையும் கொடுக்கும் நிலையில் நான் இல்லை."

"வேறு எதை, நான் உங்களிடம் எதிர்பாக்கிறேன் என்று நினைக்கிறீர்கள்?"

"தெரியலை."

மிகுந்த மனவேதனை குரலில் தோன்றச் சொன்னான், அவன்.

"என்னைத் தப்பாக நினைக்கிறீர்கள் பாரதி மேடம்."

பாரதி தலைகவிழ்ந்து அமர்ந்திருந்தாள்.

அரவிந்தன், மெதுவாக எழுந்து போய்ச் சேர்ந்தான்.

லலிதா, பாரதியிடம் சொன்னாள். "நீ பேசினது தப்பு பாரதி. நல்ல மனுஷனைப் புண்படுத்திட்டியே..."

பாரதியின் கண்களிலிருந்து கண்ணீர் கசிந்தது.

(தொடரும்)

!! SHRI TIRUPATHI VENKATAJALABATI THUNAI !!

# SUMAN DIAMOND'S

MILLINIUMS CELEBRATIONS

PRESENTING

THE WIDEST RANGE TO SUIT EVERY SOUTH INDIAN HOME WITH EXCITING NEW DESIGNS AND THE MASTER PC. IN CLOSE SETTING & OPEN SETTING EXCLUSIVELY DIAMOND JEWELLERY AVAILABLE WITH

## SUMAN DIAMONDS

**226/4B RAMNIVAS, SION - EAST, MUMBAI - 22**
**TEL.NO. 022 4094589 & 4095462**

**WE REGULARLY VISITING THE FOLLOWING PLACES:**
**CHENNAI, COIMBATORE, TRICHY, BANGALORE, HYDERABAD**

**FURTHER CONTACTS : NITIN MEHTA OR SUNIL MEHTA**
**AT 022 - 4094589 OR 40995462**

PS. WE ALSO UNDERTAKEING THE RESETTING FOR OLD THODU MUKKUTHI & MODIRAM'S

---

**எங்களது வாடிக்கையாளர் கூறுகிறார்...**

S. Venkataramani, M.A.,
Asst. Accounts Officer,

Phone : 484 6241, Flat E, CDS 'Enclave'
1/3 Kumaran Colony 3rd St., Vadapalani, Chennai - 600 026.

Respected Sir,

We the family members of Bride & Bridegroom are very much pleased with your management of huge crowd unexpected during the reception of my daughter of Sow. Madhu with Sri Subramaniam on 13.12.99 at VIJAYA SESHA MAHAL, VADAPALANI.

We place on record the services, the menu, the quality, the taste and subordination of your Managers & Staff during the Occasion. The praise of each members who tasted the Dinner rests with you only.

We hope that you would maintain the same standard in future also.

With full hearty thanks,

Yours Sincerely,
Venkataramani.

---

கல்யாணம் மற்றும் அனைத்து
சுபகாரியங்களுக்கும் ஆர்டரின் பெயரில் 25 பேருக்கு மேல் உயர்தர டிபன், காபி, சாப்பாடு, புபே, டின்னர் ஆர்டரின் பெயரில் தங்கள் இல்லத்திற்கே வந்து சர்வீஸ் செய்யப்படும். தங்கள் வீட்டு கல்யாணத்திற்கு நல்ல முறையில் பார்ப்பவர்கள் வியக்கும்வண்ணம் நடத்தித் தரும் ஒரே ஸ்தாபனம் :



## J.D. மேரேஜ் கேட்ரிங் சர்வீஸஸ்

**Plot No. 13, E.B. காலனி, 3வது தெரு, ஆதம்பாக்கம், சென்னை – 88. Phone : 245 6035 245 0164**

**Pager : 9632 790839**

● விமானக் கடத்தல் விஷயத்தை இரண்டு பகுதிகளாகப் பிரிக்கலாம். ஒன்று: பிணைக் கைதிகள் விடுவிக்கப்படுவதற்கு முன்; இரண்டு: விடுவிக்கப்பட்ட பின். விடுவிக்கப்படுவதற்கு முன்பு ஜார்ஜ் ஃபெர்னாண்டஸும் அத்வானியும் அடக்கி வைக்கப்பட்டிருந்தார்கள். விடுவிக்கப்பட்ட பிறகு, ஃபெர்னாண்டஸும் அத்வானியும் ஓரணியில் திரண்டு நிற்கிறார்கள். வெளி விவகாரத்துறை அமைச்சர் ஜஸ்வந்த் சிங்கையும் பிரதமரின் சிறப்புச் செயலாளர் ப்ரஜேஷ் மிஸ்ராவையும் ஓரங்கட்டுகிற முயற்சியில் இறங்கியிருக்கிறார்கள். பிரதமருடனான ஒரு பிரத்யேக சந்திப்பைப் புறக்கணித்துவிட்டுத் தமது குடும்பத்தாருடன் ஜிஞ்ஜோலி பண்ணை இல்லத்துக்குச் சென்று தமது எதிர்ப்புக்குப் பிள்ளையார் சுழி போட்டார் அத்வானி. உடன் சேர்ந்து கொண்டார் ஃபெர்னாண்டஸ். அத்வானி சென்ற பண்ணை இல்லத்தின் சொந்தக்காரர் அத்வானியின் தோளோடு தோள் நிற்பவர். அத்வானி தொடர்பான ராஜ தந்திரக் கூட்டங்கள் இந்தப் பண்ணை இல்லத்தில்தான் நடக்கும் என்பது குறிப்பிடத்தக்கது. அதனால்தான் ஜஸ்வந்த் சிங்கும் ப்ரஜேஷ் மிஸ்ராவும் கொஞ்சம் கலங்கிப் போயிருக்கிறார்கள்.

● விமானக் கடத்தலின் போது தம்மை ஓரங்கட்டிவிட்டதை ஈடுகட்டும் விதமாக பாதுகாப்புத்துறை அமைச்சர் ஜார்ஜ் ஃபெர்னாண்டஸ் அதிரடி அறிக்கைகளைவிட ஆரம்பித்துவிட்டார். "பாகிஸ்தான் தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்காக அணு ஆயுதங்களை உபயோகிக்கத் தயங்காது!" என்று சி.என்.என். பேட்டியில் முஷாரஃப் கூறியதற்குப் பதிலடியாக, "இந்தியா பாகிஸ்தானை அடித்து நொறுக்கும்!" என்றார். நமக்கு வேண்டுமானால் இது சாதாரண விஷயமாக இருக்கலாம். ஆனால் ஒரு நாட்டின் பாதுகாப்புத் துறை அமைச்சரின் பதில் என்பதால் இது அயல்நாட்டுப் பத்திரிகைகளில் பரபரப்பாகப் பிரசுரிக்கப்பட்டது.

● ஜனதா தளம், லோக் சக்தி, சமதா கட்சி ஆகிய கட்சிகளின் இணைப்புதான் இன்றைய லேட்டஸ்ட் அரசியல் பேச்சு. மூன்று கட்சிகளின் தலைவர்களான ஷரத் யாதவ், ராமகிருஷ்ண ஹெக்டே, ஃபெர்னாண்டஸ் ஆகிய மூவரில், இணைந்த கட்சிக்குத் தலைவராகப் போகிறவர் யார் என்பதுதான் கேள்வி. ஏற்கெனவே ஃபெர்னாண்டஸால்தான் தமக்கு அமைச்சரவையில் இடம் கிடைக்கவில்லையென்று குமைந்து கொண்டிருக்கிறார் ஹெக்டே. அதனால் தலைவர் பதவிக்கு அவர் ஷரத்யாதவை ஆதரிக்க, அதற்கு ராம்விலாஸ் பாஸ்வான் தமது மறைமுக ஆதரவைத் தெரிவித்திருக்கிறார். இதனால் ஃபெர்னாண்டஸ் ஓரங்கட்டப்படும் நிலையும் இருக்கிறது. இப்படியொரு நிலை வந்தால் அதைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள வாஜ்பாய் அண்ட் கோ தயாராய்க் காத்திருக்கிறது.



## ஓரணியில் ஒரு கூட்டணி!

● விமானக் கடத்தல் விஷயத்தில் சோனியாவின் நடவடிக்கைகளில் காங்கிரஸ்காரர்கள் திருப்தியடையவில்லை. அதனால் சோனியாவின் திறமையின்மைக்கு எதிராக ஒரு கலகமும் அதன் மூலம் ஒரு பிளவும் காங்கிரஸில் ஏற்பட வாய்ப்பிருப்பதாகப் பேசிக் கொள்கிறார்கள்.

— இந்த்ரப்ரஸ்தன்

**பல வீடுகளில் ஃப்ரிட்ஜ் இன்று ஒரு அத்யாவசியப் பொருள். அதில் எந்தவிதப் பொருள்களை எப்படிப் பாதுகாக்கலாம்? இதோ சில டிப்ஸ்!**




● எந்த உணவுப் பொருளுமே அதில் உள்ள பாக்டீரியா கிருமிகள் பரவுவதால்தான் கெட்டுப் போகிறது. இந்த பாக்டீரியா பெருக்கத்தைக் குளிர்ப்பதனப் பெட்டியில் உள்ள குளிர்ந்த சூழல் கட்டுப்படுத்துவதால் உணவுப் பொருள் கெட்டுப் போவது தள்ளிப் போடப் படுகிறது. எனவே புதிதான அல்லது பகமையான உணவுப் பொருள்களை ஃப்ரிட்ஜில் வைத்தால் அந்த 'இளமை' பாதுகாக்கப்படுமே தவிர வாடி வதங்கிய காய்கறியை ஃபிரிட்ஜில் வைத்தால் அதற்குப் புத்துயிர் கிடைத்துவிடும் என்றெல்லாம் நினைப்பது தவறு.

● பால், தயிர் போன்றவற்றை வைக்கும் போது அவற்றை மூடி வைக்கவும். ஒன்றின் மணம் மற்றொன்றில் பரவுவதைத் தடுக்கலாம்.

● காய்கறியில் ஈரப்பதம் இருக்க வேண்டும்; அதே சமயம் அளவுக்கதிகமாக நீர் தங்கினால் அது சீக்கிரமும் கெட்டுப் போகும். எனவே காய்கறிகளை ஏதாவது பேப்பர் கவரில் போட்டு அதன் மேல் ஒரு துணிப் பையும் இருக்குமாறு பார்த்துக் கொண்டால் அதிக நாட்கள் கெடாமலிருக்கும்.

● கவர் பாலை, கழுவிய பிறகே அதற்கான ஜில் பகுதியில் வைக்க வேண்டும். இல்லையேல் ஃப்ரிட்ஜ்ஜைத் திறந்தவுடனே நாற்றமடிக்கும்.

● ப்ரெட், வெண்ணெய் போன்றவற்றை அவற்றிற்கென்றே சுற்றப்பட்டு வரும் உறைகளோடே வைப்பது நல்லது. ஆனால் பிரித்து விட்டால் அவற்றைத் தகுந்த பாத்திரங்களில் போட்டு மூடி வைக்கவும்.

● ஃப்ரிஜ்ஜில் வைப்பதற்கு முன் காய்கறிகளைக் கழுவ வேண்டாம். (முக்கியமாக வெண்டைக்காய், பீன்ஸ் போன்றவை). அப்படிக் கழுவி விட்டால், ஈரம் நன்கு வடிந்த பின் வைக்கவும்.

● கீரை வகைகளை வைப்பதற்கு முன் அவற்றின் வேர்களை நீக்கி விடுங்கள்.

● வாழைப்பழம் ஃப்ரிஜ்ஜில் வைப்பதற்கு ஏற்றதல்ல. ஒரு மாதிரி கெட்டியாகி விடும்.

● சமைக்கப்பட்ட உணவை இரண்டு நாட்களுக்கு மேல் ஃப்ரிஜ்ஜில் வைத்திருக்க வேண்டாம். குழம்பு, ரசம் போன்றவற்றை ஃப்ரீஸரில் வைக்கலாம். அவை கெட்டியாகி விடும் என்பதால் பயன்படுத்துவதற்கு ஒன்றரை மணி நேரத்துக்கு முன்னால் வெளியே எடுத்து வைத்து விடுங்கள்.

● நிறைய பொருள்களை வைத்தாலும், காற்றோட்டத்துக்கு இடமிருக்கும்படி அவற்றைச் சற்றே பரப்பி வையுங்கள்.

● பல்வேறு உணவுப் பொருள் சங்கமமாவதன் காரணமாக ஃப்ரிஜ்ஜுக்குள் வேண்டாத வாசனை வரலாம். அதன் பக்கவாட்டுக் கதவில் நறுக்கிய ஒரு எலுமிச்சை மூடியையோ, ஒரு கரித் துண்டையோ வைத்து விட்டால் அது அந்த விரும்பத்தகாத வாசனையை இழுத்துக் கொள்ளும்.

— குல்லூ

# ஒதுன்றிலவுக்கு ஒரு பாளம்

நீங்கள் கேட்டவை — தராசு

● ஏ. முத்துலெட்சுமி, பெத்தானியாபுரம்.

? 1330 திருக்குறளையும் மனப்பாடம் செய்த இருபத்தி ரண்டு குழந்தைகளுக்கு முதல்வர் மாதம் ஆயிரம் ரூபாய் உதவித் தொகை அறிவித்துள்ளது பற்றி?

! காமத்துப் பாலெல்லாம் குழந்தைகளுக்கு எதற்கு? கண் மூடித்தனமாக எதையும் செய்யும்போது அர்த்தமிழக்கிறது. பத்து குறள் படித்தாலும் அதன்படி வாழ கற்றுத் தருவது தான் சிறந்த கல்வி. உருப்போட்டு ஒப்பிப்பது அல்ல!

● எம். பிச்சைக்கனி, கீழ்வெண்பாக்கம்.

? இந்தியன் ஏர்லைன்ஸ் விமானக் கடத்தல் பாகிஸ்தான் நடத்தும் மறைமுகப் போர் என்று பா.ஜ.க. குற்றம் சாட்டியுள்ளது பற்றி...?

! விமானக் கடத்தலில் பாகிஸ்தான் பங்கேற்பு இருந்தது என்பதற்குச் சான்றுகள் கிடைத்திருப்பதாகப் பிரதமர் கூறுகிறார். ஆனால் இதெல்லாம் கார்கில்லிலும் காட்மாண்டுவிலும் ஏமாந்ததை மறைத்து விடாது. இனியாவது அரசு வருமுன் காப்பதற்கு முக்கியத்துவம் அளிக்கட்டும்.





• கடலோரக் காவலர்கள்!



• தேவையற்ற கவலை...!



• நூற்றாண்டு வணக்கம்!



• முதலுக்கு மோசமில்லை!



• கட்டாய உளறல்!

● எஸ். அழகேசன், திருச்சுழி.

? 'எத்தனை வழக்குகளையும் சந்திக்கும் துணிச்சல் மிக்கவர் ஜெயலலிதா' என்று கி. வீரமணி கூறுவது பற்றி...?

! 'சமாளிக்கும்' என்று சொல்லியிருந்தால் பொருந்தும். அவர் எங்கே சந்திக்கிறார்!

● க. நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.

? 'பொருளாதாரத்தில் இந்தியா நம்மை மிஞ்சிவிடும் என்று கிளிண்டன் பேசியிருப்பது நல்ல நகைச்சுவைதானே?

! ஜப்பானையும் தென்கொரியாவையும் பார்த்துக் கொண்டிருக்கும் அவருக்கு இப்படி ஒரு பயம் தோன்றினால் வியப்பில்லை. ஆனால், அவர் அச்சம் நிறைவேற நமது அரசியல்வாதிகள் விட மாட்டார்கள். கவலையை விடுங்கள் மிஸ்டர் கிளிண்டன்!

● ஜி. ஜி. சரவணன், சிதம்பரம்.

? புதிய நூற்றாண்டில் நீங்கள் கையெடுத்துக் கும்பிடத் தோன்றும் அரசியல்வாதி யார்?

! இந்த நூற்றாண்டின் முதல் கல்கி இதழைப் பார்த்த பிறகுமா இப்படியொரு கேள்வி!

● கே. ராகவேந்திரன், சென்னை – 53.

? ஆஸ்திரேலியாவில் ஆட மோங்கியாவை அணியில் சேர்த்துக் கொண்டு, பிறகு வேண்டாம் என்று சொன்னது, கிரிக்கெட்டில் அரசியல் நுழைந்துள்ளதைத்தானே உணர்த்துகிறது?

! மோங்கியா முழுமையாகக் குணம் பெற குறைந்தபட்சம் இன்னும் ஒரு மாத காலமாகும் என்று மருத்துவச் சான்றிதழ் கூறுகிறது. ஆனாலும் என்ன? நமது டீம் ஆடிப் போய்த் தான் கிடக்கிறது. இன்னும் பிட்னெஸ் இல்லாத ஒருவரையும் சேர்த்தால் இதைவிட மோசமாகிவிடப் போகிறதா என்ன?



• தெரியாமல் வளர்வது...



• அடுத்தது அறியாமல்...



• சமாளிப்பு மறந்து....

● கே. வி. ராமன், சென்னை – 73. ❑

? நாட்டில் தமது கலாசாரமும் பண்பும் மிக வலுவாகி விட்டன. விவேகானந்தரும் திருவள்ளுவரும் குமரி முனையில் மூன்று கடல்கள் சந்திப்பில் பாறையில் உயரமாக நின்று கொண்டு விழிப்புடன் நம் நாட்டின் எல்லா திசைகளிலும் காவல் காத்து வருகிறார்கள் இல்லையா...?

! நல்லது சொன்ன இருவரையும் கடலுக்குள் தள்ளி ஓரங்கட்டி விட்டதாக நம்மைப் பற்றி உலகம் எடைபோடாமலிருந்தால் சரி.

# போகலாமா?

ஆனால், அதற்கு வாய்ப்புத் தரும்விதமாகத் தானே நாம் நடந்து கொள்கிறோம்.

● ஆர். சுப்பராவ், திருக்கோவலூர்.

? தேனிலவுக்கு நேபாளம் போய் வரலாமா?

! தாராளமாய்ப் போங்கள். இன்னும் கொஞ்ச காலத்துக்கு காட்மாண்டு பத்திரமான இடமாக இருக்கும்.

● இரா. புவனேச்வரி, சென்னை – 81.

? 'ஒரு பெண் பத்து பேரைக் கூட காதலிக்கலாம். ஆனால் அத்தனை காதலிலும் உண்மை இருக்கணும்' என்கிறாரே தங்கர் பச்சான்?

! தங்கர்பச்சான் எவ்வளவு வேணுமானாலும் பிதற்றலாம்... அத்தனை பிதற்றலிலும் உளறல் இருக்க வேண்டும் என்பது மட்டும் கட்டாயம்!

● ப. ராமகிருஷ்ணன், ஆவணத்தாங்கோட்டை.

? 'எனக்குத் தெரியாமலேயே தி.மு.க.வினர் தமிழ் வளர்க்கின்றனர்' என்று முதல்வர் கருணாநிதி மிகவும் பெருமை கொள்கிறாரே?

! தமிழை மட்டும் வளர்த்தால் சந்தோஷப்படலாம்; வேறு சிலவற்றையும் வளர்ப்பதாக முதல்வரே அடிக்கடி குறைப்பட்டுக் கொள்ள நேர்கிறதே!

● ஆர். ஆர். சாமி, திருவண்ணாமலை. ✱

? சினிமா மோகம் நிறைந்த நம் நாட்டில் மக்களாட்சி ஏற்புடையதுதானா?

! மக்களாட்சியின் கணிசமான வெற்றிக்கு முட்டுக்கட்டையாய் இருப்பது சினிமா அல்ல; கல்வியின்மைதான். எழுத்தறிவும் சிந்தனையும் வளர்ந்து விட்டால் சினிமாவை நிஜமென்று நம்பும் அறியாமை மறையும்.

● தெ. பாஸ்கரன், திருவையாறு.

? நக்ஸலைட்டுகள் பற்றிய கேள்விக்குப் பதிலளிக்கையில் நக்ஸலைட்டுகளின் குறி மக்களல்ல என்கிறீர்களே! அதிகார வர்க்கத்தைக் கொல்வது மட்டும் நியாயமா? இது போல் எழுதுவது அவர்கள் செயலை நியாயப்படுத்தாதா?

! கேள்வியைக் கவனமாகப் படித்தீர்களா? அதிகார வர்க்கத்துக்கே இந்தக் கதியானால், சாதாரண மக்களின் நிலை என்ன என்பது தான் கேள்வி. பதில் நியாயப்படுத்தவில்லை; தெளிவுபடுத்தியது.

● கே. வி. சூர்யா, நல்லத்துக்குடி.

? புதுவை அமைச்சரவையிலிருந்து த.மா.கா. விலகி விட்டது. அடுத்து கவிழ்ப்பு தானே?

! அடுத்தது என்ன என்பது தெரியாமலே விலகியாகி விட்டது. இப்போது சென்னைக்கும் டெல்லிக்கும் பறந்து கொண்டிருக்கிறார் மூப்பனார்.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
கே. வி. ராமன்,
13, தனலட்சுமி நகர் பிரதான சாலை,
ஸ்ரீ ராஜேஸ்வரி நகர் மேற்கு விரிவு,
சேலையூர், சென்னை - 600 073.

✱ ரூ. 25 பரிசு பெறுபவர் :
ஆர். ஆர். சாமி, ஸ்ரீ ரமணாசிரமம்,
திருவண்ணாமலை - 606 603.

**நகரம் என்ற மகா விவகார யந்திரத்தின் கன்வேயர் பெல்ட்டில் எப்படி மாட்டி இருக்கிறோம்! இருபத்தைந்து ஆண்டுகள்.**

உப்பு வண்டிக்காரனுக்காக அவன் காத்திருந்ததில் ஓவியக் கண்காட்சி வாய்ப்பு ஒத்திப் போய்விட்டது என்று வரும்! ஆமாம்... பெரிய கண்காட்சி!

சிலர் நம்ப மாட்டார்கள். சிலர் நம்புவார்கள். அந்தக் கிறுக்கனா... இருக்கும் இருக்கும் என்ற ஆமோதிப்போடு!

காலை எட்டு மணிக்குப் பின்னால் பஸ் இல்லை. அப்புறம் 3 கி.மீ நடந்து கூட்டுச் சாலையில் பஸ் பிடித்து... அப்புறம் ரயில் பிடிக்க சாத்தியமில்லை.

அவன் தன் பதற்றத்தையும் பரபரப்பையும் மனசில் ஒதுங்கி நின்று கவனித்தான். சிரிப்பு வந்தது. நகரம் என்ற மகா விவகார யந்திரத்தின் கன்வேயர் பெல்ட்டில் எப்படி மாட்டி இருக்கிறோம்! இருபத்தைந்து ஆண்டுகள்.

எத்தனை கண்காட்சிகள்... எத்தனை ஏக்கக் கனவுகள்... எத்தனை ஆசைக் கோட்டைகள்... எல்லாம் எவ்வளவு வியர்த்தம் என்று மணலில் அழித்துச் சென்ற கடல் அலைகள் எத்தனை முறை தெரிவித்தும்... ம்ஹூம்!

"அதோ பாரேன், அவன் உப்பு விக்கறவன் மாதிரியா வர்றான்? ஊர் ஒலகத்துக்கே ஏதோ ஞான தானம் பண்றாப்பிலே என்ன ஒரு ஹோதா!"

முப்பது வருடங்களுக்கு முன்னால் அவள்தான் அவனுக்கு அன்றாடம் உப்பு விற்க வரும் உப்பு வண்டிக்காரனை உணர்த்தினாள்.

"உப்பப்பபோ... உப்பு!"

உப்பு மூட்டை போட்ட கை வண்டி தள்ளி தலை வளையாமல் நெஞ்சு நிமிர்த்தி ஏதோ இவன்தான் அன்னதாதா என்ற கம்பீரதொனியில் ஒரு ராஜயோகி நடை...

மீண்டும் ஒருமுறை அதைப் பார்க்க வேண்டும்.

அவள் போய் விட்டாள். நேற்றுத்தான். காற்று வாக்கில் கேள்விப்பட்டான். எல்லாவற்றையும் உதறி எறிந்துவிட்டு ஊருக்கு ஓடி வந்தான்.

அவள் யோகம். சிதையில் இடும் முன் அவள் முகத்தைப் பார்க்கக் கொடுத்து வைத்திருந்தது.

தூங்குவது போன்ற முகத்தில் ஒரு சிரிப்பு உறைந்திருந்தது. எல்லாத் துயர்களையும் வென்ற சிரிப்பு. அது என்ன புதிர்? அவள் வாழ்ந்து வாழ்வுக்கு எப்படி சிரிக்க முடியும்?

அவன் கலங்கவில்லை. எனினும் அந்தப் புதிரை விளங்கிக் கொள்ள முயன்றான்.

அப்புறம்தான் உப்பு வண்டிக்காரன் நினைவு. "அடடேடே... எதற்குக் கலங்கி மயங்கி பயந்து பதறி மாய்கிறாய்... சீச்சீ!" என்ற பாணியில் அந்த உப்பு வண்டி உருண்டு வரும் தோற்றம். கூடவே வண்டிக்காரன். அழிவில்லாத பேருண்மையின் கம்பீரச் சாயலில்.

"உப்பு வண்டிக்காரன் இருக்கானா?" அவன் யாரிடமோ கேட்டான் இடுகாட்டில்.

"இருக்கானே! தெனம் வர்றான்."

எனவேதான் இவன் இரவு கோயில் திண்ணையில் துண்டு விரித்துப் படுத்து விடிந்ததும் எழுந்து சில்லிட்ட குளத்து நீரில் குளித்துக் காத்திருந்தான். நேரமாக ஆக... சந்தேகம்... சந்தேகம்... கூடவே நம்பிக்கை... நம்பிக்கை.

அதோ!

"உப்பப்போ உப்பு"

உப்பு வண்டிக்காரன் குரல்.

நடையில் சிறிது தளர்ச்சி. நெருங்க நெருங்க அதே முக மிடுக்கு. வயதை வென்ற மிடுக்கு.

வண்டியை நிறுத்தி இவன் அடையாளம் அறிவிக்க ஆசைப்பட்டான். வண்டி நின்று அவன் இவனைப் பார்த்ததும் ஆசையின் பேதைமை அழிந்தது.

உப்பு வண்டிக்காரன் இவனைத் தெரிந்து கொண்டானா? தெரியவில்லை.

"எவ்ளோ?" அவன் உப்பு வாங்கும் அளவைக் கேட்டான்.

"ஒரு படி"

ஒரே மாற்றம். பிளாஸ்டிக் பை.

இவன் பத்து ரூபாய் நோட்டை நீட்டி





னான்.

"சில்லறை இல்லே."

"பரவால்லே... நீங்களே வச்சுக்குங்க."

அவன் இவனைப் பார்த்துச் சிரித்தான். சிறு சிரிப்பு.

''நீயே வச்சுக்க. அப்புறமா வாங்கிக் கிறேன். அதன்பின் அவன் நிற்கவில்லை.

"உப்ப்ப்போ... உப்பு."

வண்டிச்சக்கரம் சுழன்றது.

இவன் கையில் உப்புப் பை.

என்ன சிரிப்பு அந்த உப்பு வண்டிக் காரன் முகத்தில்... இவன் கையில் கனத்த பையைத் தூக்கிப் பார்த்தபோது நேற்று அவன் முகத்தில் கண்ட இறுதிச் சிரிப்பு ஞாபகம் வந்தது. என்ன பொருத்தம்! இவன் உப்புப் பையைச் சுழற்றி ஒரு முடிச்சுப் போட்டுக் கட்டி, தொங்கு பையில் போட்டுக் கொண்டு நடக்கலா னான்.

# இவங்கபாரா? இவங்கள்!

✉ 'தேசப்பிதா' காந்தியையும் - 'மில்லினியம்' குழந்தையையும் இணைத்து வெளியிட்ட அட்டைப்படம் அருமை.
ஈரோடு - 1, எஸ். ரஜினிப்ரியன்.

✉ 'பிறந்தது புதுயுகக் குழந்தை!' தலைப்பிலான அட்டைப் படக் கட்டுரை மரபியல் துறையில் நிகழ்ந்து வரும் மாற்றங்களை அதன் காரண காரியங்களோடு அலசியிருந்தது. புதிய ஆயிரமாவது ஆண்டு துவக்கமே மரபியல் துறை நமக்கு அதிர்ச்சி கலந்த ஆச்சரியத்தைக் கொடுக்கிறது.
மொரட்டுப்பாளையம்,
சு.நா. இராஜேஸ்வரன்.

✉ பருந்துப் பார்வையில் கடந்த நூற்றாண்டு - 13 பக்கங்களும் பாதுகாத்துப் பயன்பெறத்தக்கவை. மாதுரியின் WWW.கல்யாணம்.COM நல்ல நகைச்சுவையுடன் புனையப்பட்டிருந்தது. 'மறக்க முடியுமா?' நிகழ்ச்சிகளைப் புதுக் கவிதைகளாக்கிய நா.வே. அருளுக்கும் ஒரு ஷொட்டு!
நெய்வேலி, சாந்தி சுந்தர்.

✉ 'கல்கி'க்கு ராஜாஜியா, ராஜாஜிக்கு 'கல்கி'யா என ஒரு காலத்தில் விவாதிக்கப்பட்ட, 'ராஜாஜியின் கல்கி'யில், நூற்றாண்டுப் பருந்துப் பார்வையில் ராஜாஜியைத் தொலைத்துவிட்டு, கல்கி தானும் தொலைந்து விட்டதே!
சென்னை - 17, டி.எஸ். சந்தானம்.

✉ 'கதம்ப உணர்ச்சிகளில் கடந்த நூற்றாண்டு' என்ற தலைப்பில் ரபி பெர்னாட்டின் செய்திகள் சூப்பர்.
சாத்தியாகுளம், சு. பாக்யமலர்.

✉ இரண்டாயிரமாவது ஆண்டின் முதல் தினத்தன்று ஒளிரவிருக்கும் 'புது மிலெனியத்தின் உதயசூரியனை' கச்சால் தீவிற்கே சென்று ரசித்து மகிழ்ந்த மெல்லிய உணர்வு மேலிடச் செய்தது 'கல்கி'யில் வெளியான முதல் பக்கப் புகைப்படத் தோற்றம். வெகு அற்புதம்!
போடிநாயக்கனூர், எம். பாலசுப்ரமணியன்.

✉ 'புலி வாலைப் பிடிக்கலாமா?' தலையங்கம், புலிகளின் கோழைத்தனத்தைத் துணிவுடன் சுட்டிக்காட்டியது. அதோடு சந்திரிகா குமாரதுங்காவை வாழ்த்தியதன் மூலம் தமிழன் பெருமையையும் உயர்த்தி விட்டீர்கள், வாழ்த்துக்கள்.
கர்நாடகா, மு. ரா. பாலாஜி.

✉ ஒரு விழாவில் அதைப் பற்றித்தான் பேச வேண்டும்; வேறு கோரிக்கைகளை வைக்கக் கூடாது என்ற முதல்வரின் கூற்று பற்றி வாசகர் கேள்விக்கு சரிதான் என்று பதில் சொல்லியுள்ளார் தராசு. ஆனால் அதே நேரத்தில் கலைஞர், திருமணம் போன்ற நிகழ்ச்சிகளுக்குச் சென்று பேசும் போது, திருமணம் சம்பந்தப்பட்ட விஷயத்தை மட்டுமா பேசுகிறார்? அங்கேயும் அரசியலையும், எதிர்க்கட்சிக்காரர்களையும் ஒரு பிடி பிடித்து விட்டு, இறுதியில் மணமக்கள் பல்லாண்டு வாழ வாழ்த்துகிறேன் என்று கூறுவதையே வழக்கமாகக் கொண்டுள்ளார். இதையும் கலைஞர் கவனத்திற்குக் கொண்டு செல்லுங்கள்.
ஆலங்குளம், ரா. சாலமோன்.

✉ டாக்டர் ரவிச்சந்திரனின் புதிய டயாலிஸிஸ் இயந்திரக் கண்டுபிடிப்பு மருத்துவ உலகின் அளப்பரிய சாதனை!
காரைக்குடி,
பாலு.

வட்டமேஜை



**போ**னவர்கள் எல்லாம் தோற்றுத் திரும்பி விட்டார்கள்.

கடைசியாக, கமலா தயக்கத்துடன் அந்த அறைக்குள் நுழைந்தாள்.

''பாதி ரிசப்ஷன் முடிஞ்சாச்சு... ரெண்டு மணி நேரமா ஒவ்வொருத்தரா வந்து உங்களைக் கெஞ்சிட்டிருக்காங்க. நீங்க செய்யறது நல்லா இருக்கா?'' என்று குரல் எழும்பாமல்தான் கேட்டாள்.

அவள் கணவன் நாற்காலியைக் கவிழ்த்துக்கொண்டு எழுந்த வேகத்திலேயே அவன் கோபம் தீரவில்லை என்று தெரிந்தது.

''என்னை எதுக்கு வந்து கெஞ்சணும்? உன் தங்கச்சி பக்கத்துல மாலையும் கழுத்துமா நிக்கறானே புது மாப்பிள்ளை, அவனைப் போய் கெஞ்சச் சொல்லு, கொஞ்சச் சொல்லு... நான் யாரு இந்த வீட்ல? கேவலம் காராபூந்திக்கு வக்கில்லாத மூத்த மாப்பிள்ளைதானே?''

''ஐயோ, எலை கிழிஞ்சிருக்குன்னு கவனிக்காம பரிமாறிட்டேன்னு சமையல்காரர்தான் அவ்வளவு தூரம் பணிஞ்சு வந்து சொன்னாரே... வயசுல பெரியவர்! அவரைக் கை நீட்டி நீங்க அடிச்சது நியா

யமா?''

''அத்தனை சமையக் காரனும் கரண்டியைக் கீழே போட்டுட்டா நான் பயந்துருவேனா?''

''ரிசப்ஷன் நடக்க வேண்டாமா? அப்பா தான் உங்க சார்பா அவர்கிட்ட மன்னிப்புக் கேட்டார் தெரியுமா?''

''பின்ன சமையக் காரன் சார்பா என் கிட்ட மன்னிப்பு கேக்க றதா சொன்னாரே உங் கப்பா?''

''அப்புறமும் வெறைச்சுக்கிட்டு நின்னா எப்படி?''

''மாம்பலத்துல ஒரு

முகூர்த்தத்துக்கு
கே. பாலச்சந்தரும்,
வைரமுத்துவும்
வந்திருந்தப்ப
உன் தங்கை
என்ன ஆட்டம் ஆடினா?

முகூர்த்தத்துக்கு கே. பாலசந்தரும், வைரமுத்துவும் வந்திருந்தப்ப உன் தங்கை என்ன ஆட்டம் ஆடினா? 'அத்தான், நீங்களும் வந்து போட்டோவுக்கு நில்லுங்க' - என்ன ஒரு ஏத்தம்!''

''ஆசையாத்தா

சுபா

# துரோகம்

இருட்டு மண்டபத்துல தானே நம்ம கல்யாணம் நடந்தது? ரிசப்ஷனுக்கு பத்து முழம் கதம்பத்தையில்ல நமக்குப் பின்னால தொங்க விட்டிருந்தாங்க? உன் தங்கை கல்யாணத்துக்கு மட்டும் ஏஸி டைனிங் ஹாலோட இவ்வளவு பெரிய மண்டபத்தைப் பிடிக்க முடிஞ்சதா உங்கப்பாவால?''

''புரியாம பேசாதீங்க... இது லவ் மேரேஜ்... எங்கப்பாவுக்கு ஒரு பைசா செலவு இல்லை... அத்தனை செலவும் மாப்பிள்ளை வீட்டுது.''

''அதான் மூஞ்சிலயே வீடியோ லைட்டை அடிச்சிட்டு நிக்கறாங்களோ? ணங்க கூப்புட்டா? காலைல எவ்வளவு சந்தோஷமா இருந்தா அவ? இப்ப ரிசப்ஷனுக்குக்கூட நித்யஸ்ரீ, ஜேசுதாஸ்னு எவ்வளவு பெரிய மனுஷங்கள்லாம் வந்திருந்தாங்க தெரியுமா? ஆனா நம்ம கிரிஜா மூஞ்சிலதான் சிரிப்பே தொலைஞ்சு போச்சு... அப்பா, அம்மா, அண்ணன் - யார் மூஞ்சிலயும் சந்தோஷமே இல்ல... எல்லாம் உங்களால...'' கமலாவின் கண்களில் நீர் துளிர்த்தது.

''ஆல்பத்தையும், வீடியோவையும் காட்டி நாளைக்கு அவ பெருமை அடிச்சுக்க முடியாது இல்ல?'' சொல்லி விட்டு அவன் சிரித்துக் கொண்டான். ''நீ முன்னால போ, நான் பின்னால வரேன்!''

**ஹோ**மியோ –சித்தா, ஆயுர்வேத முக் கூட்டு மருத்துவத்தினால் உயிரணுக் களற்ற ஆணுக்கு உயிரணுவை உற் பத்தி செய்து குழந்தை பெற வழி வகை செய்யவும் அதே போல பெண்களுக்கு மாத விலக்கை ஒழுங்குபடுத்தி கருப்பை சார்ந்த குறை களை நிவர்த்தி செய்தும் கருப்பை சார்ந்த உறுப்பு களுள் ஏற்படும் கட்டிகளை கரைத்தும், கருமுட்டை உற்பத்தி செய்தும், கருக்குழாயில் உண்டாகும் அடைப்பை நீக்கியும் குழந்தை பெறச் செய்யலாம் என்று **வந்தவாசி** டவுனில் காந்தி சிலை எதிரிலும், **சென்னை** நெற்குன்றம் பாதை 100 அடி சாலை – வடபழனி கௌரி சங்கர் திருமண மண்டபம் எதிரில் உள்ள **நவீன வைத்தியாலயா** மருத்துவமனை டாக்டர் ஏ. அர்ஜுனா இங்கே கூறுகிறார்.

இவர் மனைவி டாக்டர் V.A. ஆண்டாளும், இவருடன் மருத்துவம் செய்கிறார். இவர் முக்கூட்டு மருத்துவத்தினால் மலட்டுத்தன்மையை போக்கி தம் பதிகளுக்கு குழந்தைச் செல்வத்தை ஏற்படுத்திக் கொடுக்கும் முறையைப் பற்றியும் மலட்டுத் தன்மை ஏற்படக் காரணம் அவற்றைப் போக்கும் முறை களையும் இங்கே விவரிக்கிறார்.

ஆங்கில மருத்துவத்தினால் செயற்கை முறையில் சோதனைக் குழாய் மூலம் குழந்தை பெற்றெடுத் தாலும் நமது மனத்தில் சிறு சஞ்சலம் ஏற்படத்தான் செய்கின்றது. அதைப் போக்குவதற்காகத்தான் மலட் டுத் தன்மை உள்ள தம்பதிகளுக்கு உள்ள குறை களை அறிந்து அக்குறைகளை நீக்க இயற்கையான முறையில் முக்கூட்டு மருத்துவம் மூலம் சிகிச்சை பெற்றால் அத்தம்பதிகள் இயற்கையான முறையில் குழந்தையை பெற்றெடுக்கலாம்.

இந்தியாவில் திருமணமான தம்பதிகளில் 20 சதவீதம் பேருக்கும் உலக அளவில் 15 சதவீதம் பேருக்கும் குழந்தை இல்லை. ஆண்களில் 60 முதல் 70 சதவீதம் பேரும், பெண்களில் 30 முதல் 40 சதவீதம் பேரும் மலட்டுத்தன்மை உள்ளவர்களாக இருக்கிறார்கள்.

பெண்களுக்கு முக்கியமாக கருக்குழாயில் ஏற் படும் சதை அடைப்புதான் முக்கியப் பிரச்னையாக உள்ளது. அதற்கு ஆபரேஷன் செய்தும் பெரும் பாலான பெண்களுக்கு பலன் கிட்டுவது இல்லை. சிலருக்கு மீண்டும் அடைப்பு ஏற்பட்டு விடுகிறது.

இப்படிப் பெண்களுக்கு ஏற்படும் கருக்குழாய் சதை அடைப்பை முக்கூட்டு மருத்துவம் மூலம் கரைத்து கருவுற செய்கிறோம்; இது தவிர கருப்பை போதிய வளர்ச்சி பெறாத பெண்களுக்கு கருப் பையை வளர்ச்சியடையச் செய்தும் சரியாக மாத விடாய் ஏற்படாதவர்களுக்கு மாதவிடாயை ஒழுங்கு படுத்தியும் கருமுட்டை குறைவாக உள்ள பெண் களுக்கு கருமுட்டை உற்பத்தி செய்தும் அறவே கருமுட்டை உற்பத்தி இல்லாத பெண்களுக்கு கரு முட்டை உற்பத்தி செய்தும் கருத்தரிக்க வழிவகை செய்கிறோம்.

பெண் மலட்டுத்தன்மை என்பது, ஒரு பெண் தாயாக வேண்டுமானால் மாதவிடாய் சீராக வர வேண்டும். இரண்டு வாரத்திற்கு ஒருமுறையும், 3 வாரத்திற்கு ஒருமுறையும் மாதவிடாய் வரும் பெண் கள் கருவுற முடியாது. சில பெண்களுக்கு வாரக் கணக்கிலும், மாதக் கணக்கிலும் மாதவிடாய் போய்க் கொண்டே இருக்கும். மேலும் சில பெண்களுக்கு 45 நாள் அல்லது 60 நாளைக்கு ஒருமுறை மாத விடாய் உண்டாகும். சில பெண்களுக்கு 3 அல்லது 6 மாதத்திற்கு மாதவிடாய் வருவதே இல்லை. சில பெண்களுக்கு ஒரு வருடம் முதல் பல வருடம் வரை மாதவிடாய் தள்ளிப் போகும்.

# மகப்பேறு இன்மைக்கு

பெண்களுக்குப் பொதுவாக 4 வாரங்களுக்கு ஒருமுறை மாதவிடாய் வந்தால்தான் கருத்தரிக்க முடி யும். இப்படி மாதவிடாய் கோளாறு உள்ள பெண்கள் கருத்தரிக்க முடியாது. இப்படிப்பட்ட ஆண் – பெண் மலட்டுத்தன்மைக்கு எங்களது முக்கூட்டு மருந்து மூலம் குழந்தை பிறக்கச் செய்து வருகிறோம்.

கருப்பையிலும், சினைப்பையிலும் (ஓவரி) கட்டி கள் இருந்தால் அதை முக்கூட்டு மருந்தின் மூலம் கரைய வைக்கிறோம். இதே போல் உள்ள பல குறைகளை முக்கூட்டு மருந்தின் மூலம் நிவர்த்தி செய்து மகப்பேறு கிடைக்க வழிவகை செய்கிறோம்.

## ஆண் மலட்டுத்தன்மை

**ஆ**ண் மலட்டுத் தன்மைக்கு முக்கிய காரணம் உயிரணுக்கள் போதிய அளவு இல்லாமலோ அல்லது அறவே இல்லாமலோ இருக்கும். இந்த நிலைமையைத்தான் ஆண் மலட்டுத்தன்மை என்கிறோம்.

இதற்கு முக்கியக் காரணம் இளம்வயதில்

* திருவண்ணாமலை மாவட்டத்தில் கருக்குழாய் அடைப்பு நீங்கி குழந்தை பெற்ற ரங்கநாதன் தம்பதிகள்





* உயிரணு உற்பத்தியாகி குழந்தை பெற்ற தம்பதிகள்

அம்மை – புட்டாலம்மை, மஞ்சள் காமாலை நோய் வந்திருந்தாலும் டைபாய்டு ஜுரம் வந்திருந்தாலும் விதைகளில் அடிபட்டு இருந்தாலும் அல்லது விதைகள் இல்லாமல் இருந்தாலும், உஷ்ணமான இடங்களில் வேலை செய்தாலும் வாஸ் என்ற இந்திரிய நரம்புகள் இல்லாமல் இருந்தாலும் அல்லது பழுதடைந்து இருந்தாலும் முறையற்ற செக்ஸ் பழக்க வழக்கங்களில் ஈடுபட்டு இருந்தாலும் அப்படிப்பட்ட ஆண்களுக்கு மலட்டுத் தன்மை ஏற்பட வாய்ப்பு உள்ளது.

இப்பேர்ப்பட்ட மலட்டுத்தன்மை உள்ள ஆண்

# மருத்துவம்!

களுக்கு முக்கூட்டு மருத்துவம் மூலம் நாங்கள் தயாசித்து வைத்துள்ள சிறப்பு மருந்துகளைக் கொடுத்து ஆண்களின் மலட்டுத் தன்மையைப் போக்கி அவர்களுக்கு குழந்தை பிறக்க வழிவகை செய்கிறோம்.

எங்களிடம் வரும் குழந்தை பெறாத தம்பதியரில் ஆண் மலடுகள்தான் அதிகம். 31 சதவீதம் பேர் அறவே உயிரணுக்கள் உற்பத்தி இல்லாமல் வருகிறார்கள். 29 சதவீதம் பேர் உயிரணு உற்பத்தி குறைவாக இருப்பதால் குழந்தை பெற முடியாமல் வருகிறார்கள். பெண்களில் 40 சதவீதம் பேர் மலட்டுத் தன்மையுடன் சிகிச்சை பெறவருகிறார்கள். இதிலே கருக்குழாயில் அடைப்பு ஏற்பட்டு பிள்ளை பெற முடியாமல் வருபவர்கள் 10 சதவீதம் பேர். மாதவிடாய் சரியாக இல்லாமல் கருத்தரிக்க முடியாமல் வருபவர்கள் 10 சதவீதம் பேர். கர்ப்பப்பை – ஒவரியில் கட்டி ஏற்பட்டு குழந்தை பிறக்க முடியாமல் வருபவர்கள் 7 சதவீதம் பேர். மாதவிடாய் காலத்தில் சூதக வயிற்று வலியுடன் வருபவர்கள் 5 சதவீதம் பேர். கர்ப்பப்பை – ஒவரி வளர்ச்சி இல்லாமல் வருபவர்கள் 2 சதவீதம் பேர். கரு முட்டை உற்பத்தி ஆகாமலும், அது வெடிக்காமலும் வருபவர்கள் 62 சதவீதம் பேர்.

இப்படிப் பல்வேறு காரணங்களால் ஏற்படும் மகப்பேறின்மைக்கு அந்தந்த கோளாறுகளை முக்கூட்டு மருந்துகளும் நீக்கத்தக்க தனித்தனி மருந்துகளை தயாரித்து வைத்துள்ளோம். மகப்பேறின்மைக்கு என்ன காரணம் என்பதைக் கண்டுபிடித்து அதற்கு ஏற்ற மருந்தை கொடுத்து மலட்டுத்தன்மையை நிவர்த்தி செய்வதால் இதில் அதிக சதவீதம் மட்டும் அல்ல, அதிவிரைவாகவும் வெற்றி கிட்டுகிறது.

பெங்களூரில் வசிக்கும் சரவணன் – தம்பதியருக்கு 20 ஆண்டுகளாக குழந்தை இல்லாமல் இருந்து எங்களின் முக்கூட்டு மருத்துவம் மூலம் குழந்தை பிறந்துள்ளது.

மேலும் திருவண்ணாமலை மாவட்டத்தைச் சேர்ந்த கிருஷ்ணன் – ஜெகதாம்பாள் தம்பதியினருக்கு பல ஆண்டுகளாக குழந்தை இல்லாமல் இருந்தது. எங்களிடம் ஹோமியோபதி மருந்து சாப்பிட்டதினால் முதலில் ஒரு பெண் குழந்தையும் அதனை அடுத்து ஒரே பிரசவத்தில் இரண்டு ஆண் குழந்தைகளும் பிறந்துள்ளன. அதற்கடுத்து ஒரு பெண் குழந்தையும் பிறந்துள்ளது. இவர்களைத்தான் படத்தில் காண்கிறீர்கள்.

இப்படி இந்தியாவில் மட்டுமல்லாமல், வெளிநாடுகளான மலேசியா, சிங்கப்பூர், நியூசிலாந்து, அமெரிக்கா, கனடா, சுவிட்சர்லாந்து, துபாய், சவூதி அரேபியா, இலங்கை போன்ற நாடுகளில் இருந்தும் குழந்தை இல்லாதவர்கள் வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

தற்போது கடந்த ஆண்டு 4.12.99ல் கோயம்புத்தூரில் தங்கராஜ் தம்பதியினருக்கு ஆண் குழந்தை பிறந்துள்ளது. இவர்கள் பல ஆண்டுகளாக குழந்தை பேறு இல்லாமல் இருந்தவர்கள்.

மற்றும் மதுரையைச் சேர்ந்த அரசாங்கத்தில் ஒரு மாவட்ட அதிகாரியாக பணியாற்றும் தம்பதியினருக்கு 20 ஆண்டுகள் குழந்தைப் பேறு இல்லாமல் இருந்து அந்த அம்மா இப்போது நான்கு மாத கர்ப்பம் தரித்திருக்கிறார்.



* டாக்டர் அர்ஜுனா, டாக்டர் V.A. ஆண்டாள் அர்ஜுனா

**நவீன வைத்தியாலயா ஹோமியோபதி – சித்தா – ஆயுர்வேத மலடு நீக்கும் ஆஸ்பத்திரி**

**சென்னையில் சனி, ஞாயிறு, திங்கள் ஆகிய தினங்களில் டாக்டரை சந்திக்குமிடம் நெ.9 நெற்குன்றம் பாதை, (மாநில தலைமை தேர்தல் அலுவலகம் எதிரில்) 100 அடி ரிங் ரோடு, வடபழனி, சென்னை – 600 026 போன் : 4833464 எஸ்டிடி. 044**

**செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி ஆகிய தினங்களில் டாக்டரை சந்திக்குமிடம் நெ. 7 இராமய்யர் தெரு, வந்தவாசி, வீடு : நெ. 29, பிராமணர் தெரு, வந்தவாசி, திருவண்ணாமலை மாவட்டம் – 604 408 போன் : 25208 எஸ்டிடி. 04183**

**ADVT**

## தெய்வ தரிசனம் – 11

## சப்த விடங்க ஸ்தலம் – 2

ஒரு சிறு பெண் குழந்தை. பிறந்ததிலிருந்தே கண் தெரியாது. கோவிலில் கும்பாபிஷேகம் நடக்கிறது என்று எல்லாரும் பேசிக் கொள்கிறார்கள். சிறுமியும் அங்கே இருக்கிறாள். மந்திர கோஷங்களும் மணியோசையும், மக்களின் ஆரவாரமும் அவள் மனத்தைப் பரவசப்படுத்துகின்றன. "கண்ணாயிரமுடையாருக்கு நடக்கும் கும்பாபிஷேக வைபவத்தைப் பார்க்க எனக்குக் கண்ணில்லையே" என்று ஏங்குகிறாள் அந்தச் சிறுமி. திடீரென்று அவளுக்குக் கோபுரம் தெரிந்தது; கொடிக் கம்பம் தெரிந்தது! திருக்குளம் தெரிந்தது. திருக்குட நந்நீராட்டுதலைக் கண்குளிரப் பார்த்தே விட்டாள் குழந்தை.

இந்த அதிசயம் நடந்தது திருக்கரவாசல் என்று இன்று எல்லாரும் சொல்கிற திருக்காறாயில் தலத்தில். ஸப்த விடங்கத் தலங்களில் ஒன்றான திருக்காறாயில் திருவாரூரிலிருந்து பத்து கிலோ மீட்டர் தூரத்திலிருக்கிறது.

ஸ்ரீ ஸோமசுந்தர குருக்கள் மேற்படி சம்பவத்தைச் சொன்னார். இந்தக் கோவிலுக்குக் கும்பாபிஷேகம் 90 ஆண்டுகளுக்கு முன்னால் முத்துக் கானா குனா ஆனா ருனா கருப்பஞ் செட்டியாரால் செய்து வைக்கப்பட்டது. இன்று அறநிலையத் துறையினர் நிர்வாகத்தில் இருக்கிறது. ஆறு காலம் பூஜை செய்து வருகிறார்கள். நில புலன் இருக்கிறது கண்ணாயிரநாத சுவாமிக்கு. ஆனால் குத்தகைக்காரர்கள் சரியாகப் படியளப்பதில்லை. சிவகைங்கரியம் செய்வோருக்கு வருமானம் இல்லை.

கோவிலை வலம் வருகிறோம். ஆடல் வல்லான் சந்நிதியில் இரண்டு நடராஜர்கள் நடனமாடிக் கொண்டிருக்கிறார்கள். அபூர்வமான திருவாசியுடன் அழகிய நடராஜர்!

நுழைவாயிலில் மூன்று நிலைகளை உடைய சிறிய கோபுரம்தான். இங்கே குடி கொண்டிருப்பவரோ மிகவும் புகழ்வாய்ந்த பரமன்.

"பூமியிலே கபால வனமென்று ஒரு புராதன ஸ்தலம் இருக்கிறது. அங்கே பிரமன் முதலான காரணேசர்களால் வணங்கப்படும் சகசிராக்ஷ பரமேசுவரரும் கைலாஸப் பிரஸ்த்தர ரூபமாய் விளங்குகின்றமையால் கைலாஸ நாயகியென்றும் ஆன்மாக்கள் செய்யும் குற்றங்களைப் பொறுத்தருளுகின்றமையால் க்ஷமாவதியென்றும் மஞ்சுளையென்றும் காரணப் பெயர் பெற்று விளங்கும் ஸ்ரீ பஞ்சதசாக்ஷா சொரூபிணியாகிய பராசக்தியாரும் நித்திய சாந்நித்யஞ்



# பொறுத்தருளும் பரமன்

ஆனந்தி

செய்கிறார்கள்'' - இது திருக்கானாயிற் புராணம்.

ஜீவர்கள் செய்யும் எல்லாக் காரியங்களையும் ஆயிரங் கண்களால் பார்த்து வருவதால் கண்ணாயிரமுடையார் என்று பெயராம். கண்ணாயிரமுடையார் ஸகஸ்ராக்ஷ பரமேச வரராக வடமொழிப் பெயர் பெறுகிறார். க்ஷமாவதி என்ற பெயர் நெஞ்சைத் தொடு கிறது. மென்மையானவள், பூவுலகில் தன் குழந்தைகள் செய்யும் எத்தனை குற்றங் களைப் பொறுத்துக் கொள்கிறாள்?

கானா கருவனம், கபால வனம், பண சாரண்யம், தேவதாருவனம், அர்ச்சனபுரம், பஞ்ச வில்வவனம், பிரம்மபுரம், கார் முகபுரம் என்றெல்லாம் பெயர்களை உடையது திருக்காறாயில் தலம்.

சிவதனுசை இங்குள்ள சிவலிங்கத் தினடியில் வைத்துத் தேவர்கள் பூஜித்ததால் கார்முகபுரம் என்று பெயர். ஆதிசேஷன் பாதாளத்திலிருந்து தினமும் இங்கு வந்து தான் செய்த சிவ அபராதம் நீங்குவதற்காகப் பூஜித்தார். ஆதிசேஷன் வந்து போன சுரங் கப்பாதைக்கு சேஷ பலம் என்று பெயராம். அது இன்று கிணறாக இருக்கிறது.

திருவாரூர் முதலிய தலங்களில் வழி படுபவர்களுக்கு அவர்கள் கேட்கும் வரத் தைத் தருகிறார் ஈசன். இந்தக் கானா கருவனத் தினில் குடிகொண் டிருக்கும் அம்மையும் அப்பனும் குற்றங்கள் செய்துகொண்டு தவிக்கும் ஆன்மாக்கள் ஆசையால் செய் யும் அபராதங்களைப் பொறுத்து, ஆன்ம ஞானம் ஏற்பட்டு நித்தியானந்தத்தை அனுபவித்துக்கொண்டே இருக்கும்படி அருள் செய்து விடுகிறார்கள்.

உலக வாழ்வில் உண்டாகும் காம க்ரோத மத மாத்சரியங்களால் அல்லலுற் றுத் தவிக்கும் மக்களை அவர்களுடைய அறியாமை என்ற குற்றத்தைப் பொறுத்து அருள்புரிவதால் அபராத சகேசுவரர் என்ற பெயருடன் விளங்குகிறார் ஈசன். கங்காதேவியே இங்கே தாமரைத் தடாக மாக இருந்து கண்ணாயிரமுடையாரை யும் கைலாச நாயகியையும் பூஜித்து வருகிறாள். இங்குள்ள மரகத லிங்கத்துக்கு தினமும் அபி ஷேகம் உண்டு.



அமாவாசை, சோமவாரம், சூரிய கிரஹணம், சந்திர கிர ஹணம் ஆகிய புண்ணிய காலங் களில் இந்தத் தலத்தில் உள்ள தீர்த்தங்களில் நீராடுகிறவர்கள் ஜன்மாந்தர பாபங்கள் நீங்கி சிவ சாயுஜ்ய பதவியடைவார்கள்.

திருவாரூரில் மகாவிஷ்ணு வின் தலை துண்டித்துப் போயிற் றல்லவா? அப்போது மகாலக்ஷ்மி துடிதுடித்து இந்தக் கானா கரு வனத்துக்கு வந்து அபராத சகேசரிடம் இறைஞ்சினாள். 'என் நாயகரைத் தாருங் கள்' என்று வரங் கேட்டாள்.

"லக்ஷ்மியே! நீ திருவா ரூருக்கே போய்

வன்மீக நாதரைப் பிரார்த்தனை செய்'' என்று அசரீரி கேட்டது. மீண்டும் லக்ஷ்மி தேவி திருவாரூருக்குச் சென்று ஈசனைப் பூஜித்ததும் வசந்த காலத்தில் சார புஷ்கரிணிக் கரையில் மகாவிஷ்ணு லக்ஷ்மியின் முன் தோன்றினார். மகாலக்ஷ்மிக்கே மங்கலம் அளித்த மூர்த்தி அபராத சகேசுவரர்.

இது சப்த விடங்க ஸ்தலமாதலால் தியாக ராஜ சுவாமி இங்கும் திரு நடனம் செய்கிறார்.

இந்திரனிடமிருந்து பெற்று வந்த ஏழு மூர்த்திகளையும் முசுகுந்த சக்கரவர்த்தி பூவுலகிற்குக் கொண்டு வந்தாரல்லவா? வீதி விடங்கரை திருவாரூரில் வன்மீக நாதருக்குப் பக்கத்தில் பிரதிஷ்டை செய்துவிட்டு ஆதி விடங்க மூர்த்தத்தை காளா கருவனத்தில் கண்ணாயிரமுடையார் கோவிலில் பிரதிஷ்டை செய்து சாலிசூக மன்னன் என்பவரை உற்சவாதிகள் குறைவின்றி நடத்தும்படி பணித்தார்.

இங்கே ஈசர் செய்வது குக்குட நடனம். குக்குடம் என்றால் சோழி. வைகாசி மாதம் விசாகம் தீர்த்தவாரி உண்டு. வஸந்தோற்சவத்தில் கொடியேற்றிய ஏழாவது நாள் சுவாமி புறப்பாடு. 1ஆவது நாள் தேர். 18 நாட்களும் பஞ்சமூர்த்தி புறப்பாடு உண்டு. ஊரிலுள்ளோர் அனைவரும் ஆர்வத்தோடும் பக்தியோடும் சுவாமியைத் தூக்கிக் குதித்துக் குதித்து ஆடிக்கொண்டே உலாவரச் செய்வார்கள்.

ஸோமவாரத்தில் அம்பிகைக்கும் விசேஷ தீபாராதனைகள் நடக்குமாம். திருக்கார்த்திகையன்று சொக்கப்பனை கொளுத்துவார்கள். முருகப் பெருமானுக்குச் சந்தனக் காப்பு. கார்த்திகையன்று, இங்குள்ள விசாக தீர்த்தத்தைச் சுற்றி ஐயாயிரம் விளக்குகள் ஏற்றுவார்கள். விளக்குகள் குளத்தில் பிரதிபலித்து பத்தாயிரம் சுடர்களாகக் காட்சியளிக்கும். தேவலோகம் மாதிரி இருக்குமாம். டின் டின்னாக எண்ணெய் வருமாம். போகிற வருகிற பஸ்ஸெல்லாம் நின்று விடுமாம். ''அதைப் பார்த்தால்தான் அதன் அழகு புரியும்'' என்றார் குருக்கள். முசுகுந்த சக்கரவர்த்தி ஏற்பாடு செய்த உற்சவாதிகள் இன்னும் தடபுடலாகத்தான் நடந்துவருகிறது போலிருக்கிறது.



இந்த திருக்காறாயில் தலத்தில் ஈசுவரனுடைய முப்பத்திரண்டு வகை நடனங்களையும் கண்டு களிக்கும் பேறு பெற்றவர்கள் இரண்டு முனிவர்கள். அந்தக் கதையையும் கேட்டு விடலாம்.

தினமும் பிரதோஷ காலத்தில் விஷ்ணு மூர்த்தி கருடன் மீது ஏறிக்கொண்டு போய் விடுவார். ஒருநாள் ஆதிசேஷன் கருடனிடம், "தினமும் எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்டார்.

''மூலாதார க்ஷேத்திரத்தில் சிவ பெருமான் நடனமாடும்போது வாத்யம் வாசிக்கப் போகிறார்'' என்று கருடன் கூறியது. ஆதிசேடன் "அந்தக் காட்சியை நானும் பார்க்க வேண்டும்'' என்று ஆசைப்பட்டு கருடனிடம் கூறினார். கருடன் விஷ்ணுவைக் கொண்டு சேர்த்து விட்டு வேகமாகத் திரும்பி வளைந்து நெளிந்து அவசரமா வந்து கொண்டிருந்த ஆதிசேஷனை, "இப்படி நெளிந்து கொண்டிருந்தால் நடனம் பார்க்க முடியாது. என் மூக்கினால் கௌவித் தூக்கிக் கொண்டு போகிறேன்'' என்று சொல்லிக் கொத்தித் தூக்கியது. பறக்கும்போது பாம்புகளுக்கும் தனக்கும் பகை என்பது ஞாபகம் வரவே கூரிய மூக்கினால் குத்தித் துன்புறுத்தியது. ஆதிசேஷன் பயந்து வலி பொறுக்காமல், "ஈசனே உங்கள் நடனம் பார்க்க ஆசைப்பட்ட எனக்கு இவ்வளவு துன்பமா?'' என்று வருந்தியது.

சட்டென்று கருடன் வாயிலிருந்து தப்பி திருஆருரில் கலா தீர்த்தத்தில் அர்க்கியம் கொடுத்துக் கொண்டிருந்த முனிவர் ஒருவர் கையில் விழுந்தது. முனிவருடைய அஞ்சலி ஹஸ்தத்தில் விழுந்ததும் அவர் அதைத் தூக்கி வீசினார். ஆதிசேஷனுக்கு ரிஷி உருவம் உண்டாயிற்று. அஞ்சலி ஹஸ்தத்திலிருந்து விழுந்து தோன்றியதால் பதஞ்சலி என்று பெயர் பெற்றார். அவர் கரையேறி கோவிலுக்குள் சென்று சிவபெருமானின் தாண்டவத்தைத் தரிசனம் செய்தார். சிவபெருமான் வழக்கத்தைவிட அதிக நேரம் ஆடிக் கொண்டே இருந்தார். பதஞ்சலி முனிவர் கண்டு ஆனந்தப்பட்டுக் கொண்டிருந்தார். நடனம் செய்து கொண்டிருந்த கூத்தபிரான், "என்னுடைய தாண்டவங்களை உலகம் முழுவதும் வெளிப்படுத்துவதற்காக உன்னுடைய ஆதிசேஷன் பதஞ்சலியாக வந்திருக்கிறான். இவன் உனக்குப் படுக்கையாகவும் இருப்பான். யோக சக்தியால் ரிஷியாகவும் இருப்பான்" என்று விஷ்ணுவைப் பார்த்துக் கூறினார்.

**ப**தஞ்சலி முனிவர் தினமும் அஜபா நடனம் பார்த்துக் கொண்டிருந்தபோது இன்னும் பல தாண்டவங்களையும் தரிசிக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்தார். "நீ காளா கருவனம் என்ற இடத்துக்குச் சென்று அங்கே வருகின்ற வியாக்ர பாத முனிவருடன் நட்பு பூண்டு இருவரும் சேர்ந்து எனது தாண்டவங்களைத் தரிசியுங்கள்" என்று அனுக்ரஹம் செய்தார் ஈசன்.

இது இப்படி இருக்க புண்டரீசர் என்ற ஒரு முனிவர் விஷ்ணுவைப் பூஜித்து வந்தார். "ஞானத்தினால் முக்தி கிடைக்குமா, கருமத்தினால் முக்தி கிடைக்குமா?" என்று சந்தேகப்பட்டுக் கொண்டிருந்தார். பிறகு கரும மார்க்கமே ஞானமார்க்கத்துக்குப் படியாகும் என்று தெரிந்து பூஜை முதலிய நித்யகர்மாக்களை சிரத்தையோடு செய்து வந்தார். எந்த ஆசையும் இல்லாமல் மனத்தினால் பற்றறுத்துக் கர்மாக்களை செய்து வந்ததால் பகவான் காட்சி தந்தார். "உனக்கு ஞானம் உண்டாகும். காளா கருவனத்துக்குப் போய் அபராத சகேச்வரரைப் பூஜித்துக் கொண்டிரு. பதஞ்சலி என்ற முனிவர் வருவார். உலக நன்மைக்காக நீங்கள் நண்பர்களாக இருப்பீர்கள். ஈசுவர கிருபையால் ஞானம் பெறுவீர்கள்" என்று மகாவிஷ்ணு வரம் கொடுத்தார்.

உடனே புண்டரீக மகரிஷி புறப்பட்டுத் திருவாரூரில் வீதி விடங்கரை சேவித்துப் பிறகு காளா கருவனத்துக்கு வந்தார். ஆயிரம் வெண்தாமரைப் புஷ்பங்களால் அபராதசகேச்வரரையும், க்ஷமாவதி அன்னையையும் பூஜித்தார். ரிஷப வாகனத்தில் சர்வேச்வரன் பார்வதியுடன் காட்சியளித்து புண்டரீக மகரிஷிக்கு ஞானமார்க்கத்தை உபதேசித்தார். காளா கருவனத்துக்குப் புண்டரீகவனம் என்றும் பெயர் வந்தது. ஈசுவரன் ஞானோபதேசம் செய்தபோது தீக்ஷாநாமமாக வியாக்ரபாதன் என்று நாமகரணம் செய்தார். பதஞ்சலி முனிவரும் வியாக்ரபாதரும் சேர்ந்து பகவானுடைய தாண்டவங்களைக் கண்டு மகிழ்ந்து கொண்டே இருக்கிறார்கள்.

இதற்கெல்லாம் சிகரமாக சிவபெருமான் அவர்களுக்கு ஒரு வரம் கொடுத்தார். "என்னைத் தரிசிக்க வருபவர்கள் உங்களைத் தரிசித்தால்தான் சிவதரிசன பலனை அடைவார்கள். உங்களிடம் பக்தி இல்லாதவர்கள் என்னைத் தரிசித்தால் அந்தப் பலன் உங்களையே சேரும்" என்று அருளினார்.

சிவதரிசனம் செய்யக் கோவிலுக்குப் போகும் அன்பர்கள் பதஞ்சலி, வியாக்ர பாதர்களை நினைத்து அஞ்சலி செலுத்தி விட்டுத் தரிசனம் செய்யவும். இல்லாவிட்டால் தரிசன பலனை அவர்களுக்குக் கொடுத்து விடுவீர்கள்!

படங்கள் : **யோகா**



**க.ப அறவாணன் (ம.க. பல்கலைக்கழகத் துணைவேந்தர்):**
நெல்லை ஜானகிராமின் இட்லிதான் என்னை மிகவும் கவர்ந்தது. சூடாகவும், மிக மென்மையானதாகவும் இருக்கும். அதோடு வழங்கப்படும் சட்னி வகைகளிலும் காரம், புளிப்பு, உப்பு எல்லாமே சரியான அளவு கலந்திருக்கும். தஞ்சாவூர் காப்பி மாதிரியான இந்த ஹோட்டல் பில்டர் காப்பியும் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய ஒன்று.




ஒரு முரட்டு ஆண் பிள்ளையின் உப்புத் தான் மனசு காதல் வயப்படும்போது எப்படி கனிந்து தவிக்கும்...? பல தமிழ்ப் படங்களில் பார்த்த இந்த விஷயத்தை பனித்துளிப் புதுமையுடன் 'சேது'வில் படம்பிடித்திருக்கிறார் இயக்குனர். கதை – வசனகர்த்தா, இயக்குனர், நடிகர் குழு என்ற முக்கோணம் இத்தனை மனமொன்றிய கச்சிதத்துடன் இயங்கக் கண்டு வெகு நாளாகிவிட்டது. இந்த இசைவினால் கதையிலும் கதாபாத்திரங்களின் உணர்வுகளிலும் லயிக்கிறோம். உயிரைக் கொடுத்து செய்திருக்கும் இளையராஜாவின் ரீ ரிகார்டிங்கும், கதைப் போக்கை விட்டு அகலாத ரத்னவேலுவின் காமெராவும் அந்த லயிப்பில் நம்மைச் சிறைப்படுத்திக் கூட வைக்கின்றன.

இலேசான நாணத்துடன் ஆரம்பித்து, சவடால், சவால் என்று வளர்ந்து, மோகப் பித்து தலைக்கேற சேது (விக்ரம்) தவிப்பதும், விரும்பியவளை அடைய முடியாது என்கிற நிலையை ஏற்க மறுப்பதும்... மிக யதார்த்தமாக வளர்கிறது கதை – இடைவேளை வரை!

அதன் பின் கதாநாயகனுக்குப் பைத்தியம் பிடிக்க வேண்டும் என்பதற்காக புகுத்தப்படும் குரூரம் இருக்கிறதே...! வில்லன்கள் அவனை அடித்து நொறுக்கி மயக்கமுறச் செய்து, கஷ்டப்பட்டுத் தூக்கி பாறையில் தலையை மோதச் செய்யும்போது... நொறுங்குவது சேதுவின் கபாலம் மட்டுமல்ல; 'சேது' கதையின் நம்பகத்தன்மையும் கூட!

பின்னர் வரும் காட்சிகளெல்லாம் ஒரு மனநோயாளியின் கதை – அதிலும் முன்பாதியின் முப்பரிமாணம் இல்லாத ஒற்றைப் பரிமாணக் கதை (நாயகியும் நாயகனும் இணைந்து விடக்கூடாது என்ற வைராக்கியமான ஒற்றைப் பரிமாணம்!) 'மனசைக் கொடுத்த பிறகு உடம்பைக் கொடுப்பதிலென்னவிருக்கிறது? இரண்டும் ஒன்றுதானே?' என்று அப்பாவை வாயடைத்துப் போகச் செய்யும் கதாநாயகியை முறைப் பையனுக்குக் கட்டி வைப்பேன் என்று அவர் விடாமல் அடம்பிடிப்பது; சேதுவுக்குப் பைத்தியம் தெளிந்த பின்னும் அதை சிகிச்சை கேந்திரத்தார் (ராமநாதபுரம் மாவட்டம், பாண்டிமடம்) கவனியாமலே இருப்பது; நாயகியின் மனம் அறிந்து அவனை மனநலகாப்பகத்துக்கு அழைத்துப் போகும அவன் முறைப் பையன், வற்புறுத்தி நடத்தப்படும் கல்யாணத்துக்குச் சம்மதிப்பது... இவையெல்லாமே கலைநயத்துடன் படம் பிடிக்கப்பட்டிருந்தாலும் அந்தந்தக் கதாபாத்திரங்களின் மனப்போக்குக்கு விரோதமான நிகழ்வுகள்.

விளைவாக, மனநல சிகிச்சையகக் காட்சிகள் அனுதாபத்துக்கு பதில் எரிச்சலை ஏற்படுத்துகின்றன.

சேதுவின் காதலை அபிதா ஏற்கும் கட்டத்தில் படத்தை முடித்திருந்தால் தமிழ் சினிமா ரசிகர்களுக்குத் திருப்தி ஏற்பட்டிருக்காது. அவன் பைத்தியம் தெளிந்து விட்டது என்பது தெரியாமல் அவள் அகன்று போகும் காட்சியில் முடித்திருந்தால் ஒரு ஆங்கிலப் பட முடிவு போலாகியிருக்கும். தமிழ்ப்பட இலக்கணப்படி மூன்றாவது (அல்லது நான்காவது?) கிளைமேக்ஸில் (கதாநாயகி தற்கொலை) 'சேது' முடிகிறது. பைத்தியம் தெளிந்ததை வெளிப்படுத்தாமல் சேது பாண்டிமடத்துக்கே திரும்பிப் போகிறான்! நமக்கோ முதல் பாதியின் உழைப்பும் கவித்துவமும் மறந்து போய் விடுகிறது!

இத்தனை குறைகள் இருந்தாலும் சீனியர் மோஸ்ட் சிவகுமார் முதல் ஜூனியர்மோஸ்டான அவர் மகன் கதாபாத்திரம் வரை அத்தனை பேரையும் பூ மலர்கிற இயல்புடன் நடிக்க வைத்த இயக்குனர் பாலாவை வாழ்த்தியாக வேண்டும். அங்கங்கே தலைகாட்டும் சில 'குறிப்பிட்ட சமூக'விரோத வசனங்களைக் கண்டனம் செய்தாக வேண்டும்.

**— காஞ்சனா பிரகாஷ்ராவ்**



# பொங்கலோ பொங்கல்

## கோ-ஆப்டெக்ஸ்

# 20%-60%

விழாக்கால சிறப்புத் தள்ளுபடி.

பொங்கல் திருநாளை இனிதே கொண்டாடி
கோ-ஆப்டெக்ஸ் ஷோரூமிற்கு
வருகை தாருங்கள்.



DIPR / 8 / DIS / 2000 / SASI






பட்டுச்சேலை சேமிப்புத் திட்டத்தில்
சேர்ந்து பயனடையுங்கள்.

**கோ-ஆப்டெக்ஸ்**
தமிழ்நாடு கைத்தறி






DETAILS ARE ALSO AVAILABLE ON THE INTERNET
www.tn.gov.in
www.chennaionline.com



# தங்கமான பொங்கல் நல்வாழ்த்துக்கள்



தங்கமான ருசியின் தன்மையும் சக்ரா கோல்ட் டீயுடன் நேயர்களுக்குள்ள உறவின் தங்கமான மகிமையும் ஆயிர-மாயிரம் ஆண்டுகளுக்கும் பசுமையுடனே இருக்கும் என்பதில் சந்தேகம் என்ன?

**டாட்டாவின்**

**சக்ரா கோல்ட் டீ**

**தங்கமான ருசி**



